வெளியீடு: ௧௨௫௧



# ஆக்கத்தின் ஆதாரங்கள் எட்டு

## (Eight Pillars of Prosperity)




மூலம்:

ஜேம்ஸ் ஆலன்

தமிழாக்கம்:

மலரன்பன்






திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி-6. சென்னை-1.
1966

Ed 1 May 1966





JAMES ALLEN'S
Eight Pillars of Prosperity

Appar Achakam, Madras-1.

நாட்டு முன்னேற்றம் என்பது தனிப்பட்டவர்களின் முன்னேற்றத்திலேயே அமைந்துள்ளது. மக்கள் சோம்பித் திரியின் அந்நாடும் எல்லா வகையிலும் பின் தங்கியே இருக்கும். ஒவ்வொருவரும் தத்தம் பொறுப்பினை உணர்ந்து ஊக்கத்துடன் உழைத்தால் நாடு நலமடையும். இந் நூல் தனிமனிதனின் ஆக்கத்தைப் பற்றியும் அவன் முன்னேறுவதற்குள்ள வழிமுறைகளைப் பற்றியும் விரிவாக விளக்குகின்றது.

ஊக்கமுடையான்பால் ஆக்கம் அதர் வினாய்ச் செல்லும் என்றார் வள்ளுவர். அத்துடன் ஒருவன் தான் ஆக்கம் பெற ஒழுக்க நெறியையே மேற்கொள்ள வேண்டுமென்கிறார் அவர். இக் கருத்துக்களையே இந் நூலும் வலித்து கூறுகிறது. ஆக்கத்துக்குரிய அதிகாரங்கள் எட்டு என வரையறுத்துள்ளார் இந் நூலாசிரியர். அவை ஆற்றல், சிக்கனம், சால்பு, முறைமை, இரக்கம், இயல் பார்வம், நடுவு நிலைமை, தற்சார்பு என்பனவாம். இப் பண்புகளை அனைவரும் மேற்கொண்டொழுகின் வாழ்க்கையில் வேறெவராலும் பழிக்கப்படாத நிலைக்கு முன்னேறலாம் என்று இந் நூலின் [illegible] [illegible]ப்பட்டுள்ளார்.

நாட்டுப் பற்றுடைய மக்கள் தமக்காக இல்லையெனினும் நாட்டின் முன்னேற்றத்தைக் கருதியாவது நேர்மையான வழிகளைக் கைக்கொள்ளவேண்டும். உழைப்பின் வாரா உறுதிப்பாடுள? நாடும் மக்களும் நலம்பெற, வளம்பெற இவ்வகை நூல் [illegible] பயன்படுமென எண்ணுகிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

# முன்னுரை

தனி மனிதர்களுக்கோ அல்லது நாடுகளுக்கோ அரசியல், சமுதாயச் சீரமைப்பின் வாயிலாகவே மிகுதியான ஆக்கம் வந்துறமுடியும் எனப் பொதுவழக்காகக் கருதப்படுகின்றது. ஒரு நாட்டின் ஆக்கக் கூறான தனி மனிதர்கள் கைக்கொண்டொழுகுகின்ற ஒழுக்க நன்னெறிகளைத் தவிர்த்துப் பார்க்கும் நிலையில் இஃது உண்மையானதாகவிருக்க இயலாது. ஓர் இனத்தின் தனிமனிதர்களிடையே ஒழுக்க நெறியினைக் குறித்த உயர்ந்த உற்றறிவு காணப்பெறின் சிறந்த சட்டங்களும் சமுதாயச் சூழ்நிலைகளும் எப்போதும் அதைத்தொடர்ந்து வந்துறும்; ஆனால் நன்னெறியை நாடிப் பின்பற்றிக் கைக்கொண்டொழுகுவதில் தளர்ச்சியும் சோர்வுமுடையவனாகி விடுகின்ற ஒரு மனிதனுக்கோ அன்றி ஒரு நாட்டிற்கோ இயற்றப்படுகின்ற எந்தச் சட்டமும் ஆக்கம் தேடித்தரவியலாது; ஏன், ஏற்படும் அழிவைக்கூட அது தடுக்கவியலாது.

ஒழுக்க நன்னெறிகளே ஆக்கத்தின் அடிப்படையும், ஆதாரமுமாகும். ஏனெனின், அவையே மேம்பாட்டின் உயிர் நிலை. அவை என்றென்றும் நிலைத்து நிற்கின்றன; நிலைத்து நிற்கின்ற மனிதப் பண்புகள் அனைத்துமே அவற்றை அடிப்படையாகக் கொண்டு எழுப்பப்பட்டனவே. அவை இல்லையெனின் வலிமையில்லை; நிலைபேறில்லை, உண்மையான இயற்பொருளில்லை; மற்று இருப்பனவெல்லாம் கடிந்தழியும் கனவுகளேயாம். ஒழுக்க விதிகளைக் காணுவதென்பது ஆக்கம், மேம்பாடு, மெய்ம்மை ஆகியவற்றைக் கண்டு விட்டதாகும். ஆகவே, அதுவே வலிமையுடையவராக, துணிவுடையவராக, மகிழ்ச்சியுடையவராக, தன்னுரிமையுடையவராக இருப்பதாகும்.

ஜேம்ஸ் ஆலன்

# உள்ளுறை

# ஆக்கத்தின் ஆதாரங்கள் எட்டு

ஒழுக்கத்தின் அடிப்படையிலேயே ஆக்கம் அமைந்து கிடக்கின்றது. சூது, மூர்க்கப்போக்கு, ஏமாற்றல், பேராசை ஆகிய ஒழுங்கீனத்தின் அடிப்படையில் அது அமைந்து விடுவதாகப் பொதுவழக்காகக் கருதப்படுகின்றது. வாணிபச் செழிப்பு எனும் நன்மை நாணயக் குறைவு என்னும் தீமையின் விளைவுதான் எனக் கருதும் பாவனையில், பிறவகைகளில் அறிவுக் கூர்மையுடையவனு யிருக்கின்ற மனிதனுங் கூட "ஒருவன் நாணயக் குறைவுடன் நடந்து கொள்ளவில்லையெனின் அம்மனிதன் வாணிபத்தில் செழிப்புடையவனுக இருக்கவியலாது" என்று அறுதியிட்டுக் கூறுவதை நாம் சாதாரணமாகக் கேள்விப்படுகின்ரேம். அத்தகைய கூற்று மேலெழுந்த வாரியானதும், சிந்தனையற்றது மாகும்; அதோடு, ஒழுக்கத்தைக் குறித்த காரண காரியத் தொடர்புபற்றிய அறிவு சிறிதும் இல்லாததையும், அதேபோன்று வாழ்வின் உண்மைகளை மிகக் குறைந்த அளவில் புரிந்து கொண்டிருப்பதையுமே அது எடுத்துக் காட்டுகின்றது. இது, பாலெருக்குச் செடியை விதைத்து விட்டுப் பசளைக் கீரை அறுத்தெடுக்கவேண்டும் என்ரோ அன்றிச் சேற்று நிலத்தில் செங்கல் வீடு எழுப்பவேண்டும் என்ரோ காரண காரியத் தொடர்பின் இயற்கையமைப்பில் கைகூடாத காரியங்களைக் கூறுவதற்கொப்பாகும்; ஆகவே, அது முயற்சி செய்யப்படக் கூடாத வொன்று. ஆன்மீக வல்லது ஒழுக்கநெறி சார்ந்த காரண காரியத் தொடர்

பமைப்பு கொள்கையளவில் வேறுபட்டதன்றி அடிப்படையில் மாறுபட்டதன்று. கண்படும் காரியங்களின் கண்: அஃதாவது இயற்கைத் தோற்றத்தின்கண் இருக்கின்ற அதே விதியே கண்படாத காரியங்கள் அஃதாவது சிந்தனைகள், செயல்கள் கண்ணும் நின்று நிலவுகின்றது. இயற்கைப் பொருட்களின் படிமுறைகளை மனிதன் காணுகின்றான்; அவற்றிற்குத் தகச் செயலில் ஈடுபடுகின்றான். ஆனால் ஆன்மீகப் படிமுறைகளை மனிதன் காணப்பெறாததால் அவை இயங்கவே இல்லையெனக் கருதி அவற்றுடன் இசைவற்றுச் செயலிலீடுபடுகின்றான்.

எனினும் இந்த ஆன்மீகப் படிமுறைகள் இயற்கைப் படிமுறைகளைப் போன்றே அத்துணை எளிதானதும், உறுதிப்பாடுடையனவுமாகும். உண்மையில் அவை அதே இயற்கைப் பாங்குகள் மன உலகின்கண் காணக்கிடப்பனவே. நீதிக்கதைகள் அனைத்தும், மேதகு ஆசிரியர்களின் பழமொழி பலவும் இவ்வுண்மையினை விளக்கிக் காட்டுதற்கெனத் திட்டம் செய்யப்பட்டனவே. மன உலகம் காட்சிக் குரியதாய் ஆக்கப் பெற்றதே இயற்கையுலகம். காணப்படாததின் கண்ணாடியே காணப்படுவது. ஒரு வட்டத்தின் மேற்பாகத்தை விடக் கீழ்ப்பாகம் எவ்வகையிலும் மாறுபட்டதன்று; ஆனால் அதன் உருண்டை வடிவம் தலைகீழாக இருக்கின்றது. சடப்பொருள் சார்ந்ததும் மனப்பொருள் சார்ந்ததும் பிரபஞ்சத்தின் பிரிக்கப்பட்ட இரு பிறைவடிவங்களல்ல; அவை ஒரு முழுவட்டத்தின் இருநேர் பாதிகளேயாகும். இயற்கை சார்ந்தனவும், ஆன்மீகஞ் சார்ந்தனவும் நிலையான பகைமை கொண்டனவல்ல; ஆனால், பிரபஞ்சத்தின் உண்மையான ஒழுங்கமைப்பின் கண் அவை ஒன்றெனவே நிலையாக உறைகின்றன. கடமையையும், செயல் திறனையும் தவறாகப் பயன்படுத்தி

தான இயற்கைக்கு மாறுபட்ட நிலையிலேயே பிரிவு பிறக்கின்றது ; அந்நிலையிலேயே, அவன் பிரிந்துவிடவேண்டி முயன்ற நிறை வட்டத்தினின்றும் அடுத்தடுத்து வருந் துன்பங்களுடன் மனிதன் வல்லந்தமாகப் பின்னுெதுக்கப் படுகின்ருன். சடப்பொருளின் கண்ணுள்ள ஒவ்வொரு படிமுறையும் மனத்தின் கண்ணுள்ள படிமுறையுமாகும். ஒவ்வோர் இயற்கை விதிக்கும் அதன் ஆன்மீகச் சரிநேர் பாதி உண்டு.

இயற்கைப் பொருள் எதை வேண்டுமெனினும் எடுத்துக்கொண்டு நாம் ஆராய்வோமெனின் அதன் அடிப்படைப் படிமுறைகள் மன மண்டலத்தின் கண்ணேயு மிருப்பதைக் காணலாம். உதாரணமாக, ஒரு விதை முளைவிட்டு அதன் இறுதியான வளர்ச்சியாகிய மலர் அலரும் செடியாக வளர்ந்து மறுபடியும் விதையாகி விடுகிற முறையை எடுத்துக்கொள்வோம். இதுவும் ஒரு மனப் படிமுறையேயாகும். எண்ணங்கள் விதைகளே; அவை மனமென்னும் நிலத்தில் வீழ்ந்து முளைவிட்டு அவற்றின் முழுமையான நிலையை அடைவதுவரையில் வளர்ந்து அவற்றின் இயல்புக்கேற்ப நற்செயல்கள் அல்லது தீச் செயல்கள், அறிவு சான்ற செயல்கள் அல்லது மடைமை மிக்க செயல்களாக மறுபடியும் பிறர் மனங்களில் தூவப்படவேண்டிய எண்ண விதைகளாக முடிவு பெறுகின்றன. ஆசிரியர் விதை விதைப்பவர், ஆன்மீக உழவர் ; அதேபோது தமக்குத் தாமே கற்பித்துக் கொள்ளுபவர், தமது சொந்த மன நிலத்தின் சிறந்த வேளாண்மைக்காரர். ஓர் எண்ணத்தின் வளர்ச்சி ஒரு செடியின் வளர்ச்சியை ஒத்ததேயாகும் ; பருவக் காலத்திற்கேற்ப விதை தூவப்பட வேண்டும் ; அது அறிவுச் செடியாகவும், மெய்யுணர்வு மலராகவும்,

தனது முழுவளர்ச்சியைப் பெறக் காலம் தேவைப் படு கின்றது.

நான் இதை யெழுதும்போது சிறிது நிறுத்திவிட்டு என் படிப்பறையின் பலகணிவழியே பார்வையைச் செலுத்தித் திரும்புகின்றேன்; அங்கு நூறு கெசதூரத்திற்கு அப்பால் உயர்ந்து வளர்ந்த ஒரு மரம் உளது. அருகி லுள்ள வார் புதர்க்காட்டினின்றும் வந்த முயற்சிமிக்க காக மொன்று அம்மர உச்சியில் தனது கூட்டை முதல் தடவையாகக் கட்டி முடித்திருக்கின்றது. ஒரு கடுமையான வடகிழக்குக் காற்று வீசுகின்றது. கடுங்காற்று துவங்கி விட்டதன் காரணமாக மரத்தின் உச்சி முன்னும், பின்னுமாய் வேகமாக அசைந்தாடுகின்றது; எனினும், மரச்சுள்ளிகளாலும் மயிராலும் அமைக்கப் பெற்றிருக்கும் வலுவற்ற அக் கூட்டிற்கு எவ்வித ஆபத்தும் இல்லை; அதோடு, தன் முட்டைகளின் மீதமர்ந்து கொண் டிருக்கும் அத் தாய்ப்பறவைக்குப் புயலைக் குறித்த அச்சம் இல்லை. இது எதனால்? மிகுந்த அளவு வலிமையையும், பாதுகாப்பையும் அளிக்கின்ற நியதிகளுடன் இசைவு படுகின்ற வகையில் தனது கூட்டை அப்பறவை இயல் புணர்ச்சியிலேயே கட்டியிருப்பதே இதற்குக் காரணமாகும். முதலில், இரு கிளைகளாகக் கவர்படுகின்ற இடமே கூட்டின் அடியாதாரமாகத் தேர்ந்தெடுக்கப் படுகிறதேயன்றி இரு கிளைகளுக்கும் இடையேயுள்ள தூரம் எடுத்துக்கொள்ளப் படுவதில்லை; எனவே, மரவுச்சி எத்துணைதான் அசைந் தாடுவதாயிருப்பினும், கூட்டின் அமைப்பு மாறுபடுவதோ அன்றி அதன் கட்டுமானம உலைவு படுவதோ இல்லை; மேலும், எந்த வெளிப்புற அழுத்தத்திற்கும் ஒரு பெருந் தடையாகப் பயன்படும் முறையிலும், அதேபோன்று அதன் தேவைக்கேற்ப உட்புறத்தில் நிறைவான நெருக்கம்

மிருதியாகப் பெறும் முறையிலும் கூடு வட்டவடிவமான அமைப்புத் திட்டத்தில் கட்டப்பட்டிருக்கின்றது; ஆகவே, காற்று எத்துணைதான் சீற்றம் கொண்டாலும் பறவைகள் வசதியுடனும், பாதுகாப்புடனும் வதிகின்றன. இது மிகவும் எளிதானதும், பழக்கப்பட்டதுமான ஒரு காட்சி. எனினும், அதன் அமைப்பு கண்டிப்பான கணித விதிக்குட்பட்டதாயிருப்பதைக் காணும்போது, ஒருவன் தன் செயல்களை நிலைபெற்ற நியதிகளுடன் இசைவு படுமாறு ஒழுங்குபடுத்திக் கொள்வது மூலமாகவே நிகழ்ச்சிகளின் உறுதியற்ற நிலை, வாழ்வின் கீழ்ப்படியாத கொந்தளிப்புக்கள் ஆகியவற்றின் நடுவிலேயும் நிறைவான உறுதிப்பாடு, நிறைவான பாதுகாப்பு, நிறைவான அமைதி ஆகியவற்றைப் பெற முடியுமென்பதைக் கற்பித்து அறிவொளியூட்டும் ஒரு நீதிக்கதையாகவே அறிவுடையோர்க்குத் தென்படுகின்றது.

மனிதன் கட்டுகின்ற வீடோ அன்றிக் கோயிலோ பறவைக் கூட்டைக் காட்டிலும் மிகவும் அதிகமான சிக்கலுடைய கட்டுமானமாகும்; எனினும், அது இயற்கையில் எங்கணும் தெளிவுபடக் காணக்கிடக்கின்ற கணிதப் படியான நியதிகளுடன் இசைவுபடக் கட்டப்படுகின்றது. சடப் பொருட்களைப் பொறுத்து மனிதன் எவ்வாறு பிரபஞ்ச நியதிகளைப் பின்பற்றி யொழுகுகின்றான் என்பதை நாம் இங்குக் காணலாம். வடிவ இயல் விகிதாசாரங்களுக்கு எதிராக ஒரு கட்டிடத்தை யெழுப்ப அவன் என்றுமே முயலுவதில்லை; ஏனெனின், அத்தகைய கட்டிடம் ஆபத்தானது என்பதும், கட்டுமான வேலை நடந்துகொண்டிருக்கையிலேயே அவன் காதுகளில் ஒலிக்கும் வண்ணம் அது இடிந்து விழவில்லையெனினும், முதன் முதலாக வீசும் பெருங்காற்று பெரும்பாலும் அதைத் தரைமட்டமாக்கி

விடுமென்பதும் அவனுக்குத் தெரியும். சடப்பொருளான கட்டிடத்தை எழுப்புவதில் வட்டம், சதுரம், கோணம் ஆகியவற்றை மனிதன் சிற்றிழையும் தவருது பின்பற்று கின்ருன்; அதோடு, கடுமையான புயற் காற்றுகளையும் தடுத்துத் தனக்குக் கவலையற்ற தஞ்சத்தையும், ஆபத் தற்ற பாதுகாப்பையும் தரும் கட்டுமானத்தை வரைகோல், நேரறித்தூக்குநூல், கவராயங்கள் ஆகியவற்றின் உதவி கொண்டு அவன் எழுப்புகின்ருன்.

இவையனைத்தும் மிக எளிது என வாசகர் கூறக் கூடும். ஆமாம், இது எளிதுதான், ஏனெனின், இது உண்மையானது, முழுமையானது; இடை நிலைப்பாடு எதையும் ஒத்துக்கொள்ளவியலாத அத்துணை உண்மை யானது; எந்த மனிதனும் மேற்கொண்டு செம்மைப் படுத்தவியலாத அத்துணை முழுமையானது. சடப்பொரு ளுலகத்தின் கண்ணுள்ள இந்த நியதிகளை மனிதன் கற்றுக் கொண்டதுடன் அவற்றைப் பின்பற்றியொழுகு வதில் அறிவு மேம்பாட்டையும் காணுகின்ருன்; நிலை பெற்ற அதே நியதிகளை மன அல்லது ஆன்மீக உல கிலும் கடைப்பிடித்தொழுகும் முயற்சியை ஊக்குவிக்கும் பொருட்டே அவை இங்கு குறிப்பிடப் படலாயின; அவை அத்துணை எளிதானதும், என்றென்றும் உண்மை யானதும், முழுமையானதுமாகும்; எனினும், அவற்றின் இயல்புணராத அறியாமையாலும் காலமெல்லாம் தன்மீது தானே சுமத்திக் கொண்டிருக்கும் கெடுதியை உணராமை யாலும், இன்றைய நிலையில் மனிதன் அவற்றை மீறியே நடக்கின்ருன் என்பது மிகச் சிறிதளவே புரிந்து கொள்ளப் பட்டிருக்கின்றது.

சடத்தைப் போலவே மனத்திலும், காரியங்களைப் போலவே கருத்துக்களிலும், இயற்கைப் படிமுறைகளைப்

போலவே செயல்களிலும் நிலைபெறு கொண்டவழி அடியாதாரமாகவே அமைந்து கிடக்கின்றது. தன்னறிவிற்குத் தெரிந்தோ அல்லது அறியாமையாலோ அது புறக்கணிக்கப் பட்டுவிட்டால் அழிவிற்கும் தோல்விக்கும் நம்மை அழைத்துச் சென்றுவிடும். உண்மையில் உலகின் கண்ணுள்ள நோவிற்கும், துன்பத்திற்கும் காரணம் இந்த விதியை அறியாமையால் மீறுவதேயாகும். சடப் பொருளைப் பொறுத்தவரை இந்த விதி கணிதப்படியானதாக விளக்கப்படுகின்றது; மனத்தைப் பொறுத்தவரை ஒழுக்கப்படியானதாக உணர்ந்தறியப்படுகின்றது. ஆனால், கணிதப்படியானதும், ஒழுக்கப்படியானதும் தனித்தனியானதுமல்ல, எதிர்மறையானதுமல்ல. அவை ஒன்றுபட்ட முழுமையின் இரு கூறுகளேயாகும். சடப்பொருள் அனைத்தையும் கட்டுப்படுத்துகின்ற கணக்கியலின் நிலைபெறு நியதிகளை உடலென்று கொண்டால் நன்னெறியே அதன் உயிர்நிலை; அதேபோது, ஒழுக்கநெறியின் நிலையான நியதிகள் மனமென்னும் பிரபஞ்சத்தில் இயங்குகின்ற கணிதப்படியான பொதுவுண்மைகளாகும். ஒழுக்க நியதிகளிலிருந்து நீங்கி வெற்றிகரமாக வாழ்வது என்பது கணிதப்படியான நியதிகளைப் புறக்கணித்து விட்டு வெற்றிகரமாகக் கட்டுமானத்தை முடித்தல் இயலாதவாறு போன்று, இயலாத கூற்றேயாகும். குணவியல்புகளும் ஒழுக்கம் எனும் விதியின் அடிப்படையில் கட்டப்படுவதால் மட்டுமே வீடுகளைப் போன்று உறுதியாய் நிற்கின்றன; மேலும், படிப்படியாக அவை மெதுவாகவும், கடுவுழைப்பின் பயனாகவுமே கட்டப்படுகின்றன; ஏனெனின், குணவியல்புக் கட்டுமானத்தில் செயல்பாடுகளே செங்கல்களாகும். தொழில்களும், மற்றும் மனிதமுயற்சிகள் அனைத்தும் இந்த நிலையான முறைமைமி

லிருந்து விதிவிலக்கப்படவில்லை; ஆனால் நிலைபெறு விதிகளைப் பின்பற்றுவதால் மட்டுமே அவை பாதுகாப்புடன் நிலைக்கமுடியும். ஆக்கம் உறுதியானதாகவும், நீடித்து நிலைபெறுவதாகவும் இருக்கவேண்டுமெனின், அது ஒழுக்க நியதியெனும் திண்மையான அடிப்படையிலே அமைந்திருப்பதுடன், தூய்மையான குணவியல்பு, ஒழுக்கமேம்பாடு ஆகிய திண்ணிய ஆதாரங்களால் நிலைநிறுத்தப்படுவதாகவும் இருக்கவேண்டும். ஒழுக்க நியதிகளுக்கு எதிராக ஒரு தொழிலை நடத்த முயற்சி எடுத்துக் கொள்ளப்படின், ஒருவகையானதோ அன்றிப் பிறிதொரு வகையானதோ அழிவு வந்துறுவதைத் தவிர்க்கவே முடியாது. எந்த ஒரு சமூகத்திலும் நிலையாக ஆக்கஞ் சேர் மக்களாக இருப்போர் அச் சமூகத்திலுள்ள எத்தர்களும், ஏமாற்றுக்காரர்களுமல்லர். ஆனால், நம்பிக்கைக்குப் பாத்திரமாயிருப்போரும் நேர்மைக்குணம் படைத்த மக்களுமே யாவர். பிரிட்டிஷ் சமூகத்தில் குவாக்கர்களே மிகவும் நேர்மை படைத்த மக்களாகக் கூறப்படுவர்; அவர்களின் மக்கள் தொகுதி சிறிதேயாயினும் அவர்களே அதிகமான செழிப்புள்ளவர்கள். மொத்த எண்ணிக்கையிலும், தூய்மைச் சிறப்பிலும் இந்தியாவிலுள்ள ஜைனர்களும் இதைப் போன்றவர்களே; அவர்களே இந்தியாவில் மிகுதியான ஆக்கம் பெருகிய மக்களாகும்.

"வாணிபக் கட்டுமானம்" குறித்து மக்கள் உரையாடுகின்றனர்; ஆமாம், செங்கல்லால் கட்டப்பட்ட ஒரு வீடு போன்றோ அன்றிக் கருங்கல்லால் கட்டப்பட்ட ஒரு தேவாலயம் போன்றோ வாணிபமும் ஒரு கட்டிடமே; அவ்வாறிருப்பினும், அக்கட்டுமானப் படிமுறை மனஞ் சார்ந்தாகும். வீட்டின் மேலுள்ள கூரைபோன்று ஆக்கம் மனிதனின் தலைக்குமேல் அமைந்து அவனுக்குப் பாது

காப்பும், ஆறுதலும் அளிக்கும் ஒரு கூரையாகும்; ஆதாரத்திற்கு ஓர் அடியாதாரம் இன்றியமையாததாகி விடுகின்றது. ஆகவே, ஆக்கம் எனும் கூரை கீழ்க்காணும் எட்டு ஆதாரங்களால் நிலைப்படுகின்றன; இவை ஒழுக்கத்திண்மையெனும் அடியாதாரத்தில் பொருத்தப் பெற்றிருக்கின்றன.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆற்றல் | 5. | இரக்கம் |
| 2. | சிக்கனம் | 6. | இயல்பார்வம் |
| 3. | சால்பு | 7. | நடுவு நிலைமை |
| 4. | முறைமை | 8. | தற்சார்பு |

இந்த நியதிகள் அனைத்தையும் தவறாது கடைப்பிடித்தொழுகும் அடிப்படையில் கட்டமைக்கப்பட்ட தொழில் பிறரால் தோற்கடிக்கப் படமுடியாத அளவிற்கு அத்துணை உறுதியானதாகவும், நீடித்து நிலைபெறுவதாகவும் அமைந்துவிடும். அதனுடைய ஆக்கத்தை எதுவும் நிலைகுலையச் செய்ய முடியாது; அதனுடைய வெற்றியை எதுவும் குறுக்கிட்டுத் தடுக்கவோ அன்றி அதைத் தரைமட்டத்திற்குக் கொண்டுவரவோ முடியாது; ஆனால், இந்த நியதிகளைப் பின்பற்றி யொழுகுவது வரையில்தான் அந்த வெற்றிக்கான உறுதிப்பாடு தொடர்ச்சியாக அதிகரித்து வரும். அதற்கு மாறாக, இந்த நியதிகளைப் பின்பற்றாத நிலை எங்குளதோ அங்கு எவ்விதமான வெற்றியும் ஏற்படுவதில்லை; அங்குத் தொழிலேனும் இருக்க ஏதில்லை; ஏனெனின், ஒருபகுதி மற்றொரு பகுதியைத் தழுவிநிற்கும் நிலையை யுண்டுபண்ண அங்கு எதுவுமே இருப்பதில்லை; ஆனால், அங்கு வாழ்வின்மை இருக்கும்; எப்பொருளாயினும் அதற்கு உயிரூட்டி உடலும், உருவமும் கொடுக்கின்றஇயல்பும், திண்மையும் இல்லாத நிலையிருக்கும். இந்த நியதிகளைத் தன் மனத்தே கொள்ளாதவனாய் ஒரு மனிதனைப் படம் பிடித்துப் பார்க்கும்போது, நியதிகளைக்

குறித்த நமது அறிவு சிறிதளவேயாயினும், நிறைவுநிலை பெருததேயாயினும் எவ்வித வெற்றிகரமான பணியைச் செய்பவனுகவும் அம்மனிதனை நாம் நினைத்துப் பார்க்க முடிவதில்லை. முன்னேக்கில்லா காலாடியாகக் குழப்ப முற்ற வாழ்வு நடத்துபவனுகவே நாம் அவனை நினைத்துப் பார்க்க முடியும்; ஆனல், ஒரு தொழிலின் தலைமைப் பதவி யிலோ, ஒரு நிறுவனத்தின் மையமாகவோ, அல்லது வாழ்வின் எத்துறையிலேனும் பொறுப்பு வாய்ந்த ஓர் அதிகாரப் பேராளாகவோ அவனை நாம் கற்பனை செய்ய முடிவதில்லை; ஏனெனின், அது இயலுவதல்ல என்பதை நாம் உணருகின்ருேம். இந்த நியதிகளின் முக்கியத் துவத்தை இதுகாறும் புரிந்துகொள்ளாத காரணத்தால் ஒழுக்கநெறி ஆக்கத்திற்கு ஒரு தடையேயன்றி ஒரு காரணக்கூறு அல்லவென்று அறுதியிட்டுரைப்போர் அனைவர்க்கும், மிதமான ஒழுக்கமும், நுண்ணறிவும் கொண்ட எவரேனும் மேலே குறிப்பிட்டது போன்ற ஒரு மனிதனை வெற்றிகாணுபவனுகக் கற்பனை செய்ய முடிவதில்லை எனும் உண்மை, அவர்களுடைய முடிவு முழுக்க முழுக்கத் தவறு என்பதைத் தெளிவுபடுத்தும் ஆழ்ந்த சான்ருக விளங்கவேண்டும். ஏனெனின், அவர்கள் கூற்றே சரியானதாகவிருப்பின், இந்த ஒழுக்க நியதிகள் எத்துணையளவிற்கு இல்லாமலிருக்கின்றனவோ அத் துணையளவு வெற்றியும் மிகுதியாக வேண்டும்.

எனவே, மிகுதியான அளவிலோ அன்றிக் குறைந்த அளவிலோ இந்த நியதிகளே எவ்வகையான வெற்றியா யினும், அவையனைத்திற்குமான காரணக்கூறுகளாகும். ஆக்கம் அனைத்துடையவும் அடித்தளத்தில் இவைகளே வலுவுள்ள ஆதாரங்களாய் இருக்கின்றன; அத்தகைய ஒரு முடிவிற்கு வருவதற்குத் தோற்றங்கள் எத்துணை

தான் எதிராயிருப்பினும், மக்கள் வெற்றியென அழைக்கும் சிறப்பை முடி சூடுகின்ற ஒவ்வொரு முயற்சியையும் அவையே உருவமைத்து நிலைப்படுத்துகின்றன.

ஒப்பிட்டுப் பார்க்குங்கால் இந்த எட்டு நியதிகள் அனைத்தையும் அவற்றின் முழுமையானதும், நிறைவானதுமான நிலையில் வெற்றிவாய்ப்புள்ள ஒருசில மக்களே கைக்கொண்டொழுகுகின்றனர் என்பது உண்மையே, ஆயினும் அவ்வாறு செய்பவர்கள் இருக்கவே செய்கின்றனர்; அவர்களே தலைவர்கள், ஆசிரியர்கள், மனித வழி காட்டிகள், மனிதச் சமூக ஊன்றுகோல்கள், மனிதப் பரிணாம வளர்ச்சியணியின் வலிமைவாய்ந்த முன்னோடிகள்.

ஆனால், வெற்றியின் உச்சநிலையை உறுதியான தாக்குகின்ற அந்த ஒழுக்க நிறைவு நிலையினை ஒரு சிலரே பெறுகின்ற போதிலும் இந்த நியதிகளை அரைகுறை யாகக் கடைப்பிடிப்போர்க்கு அதைவிடக் குறைந்த அளவினதாய வெற்றிகள் அனைத்தும் வந்துறுகின்றன; ஒரு சாதாரண அளவினதாய ஆக்கத்தை உறுதியான தாக்கவும், ஒரு குறிப்பிட்ட காலத்திற்கேனும் ஓரளவு செல்வாக்கைப் பேணிக் காக்கவும் அவற்றில் இரண்டிலோ அன்றி மூன்றிலேனும் நிறைவு நிலையடைதல் போதுமானது என்று கூறுமளவிற்கு நற்பயன்களைப் படைப்பதில் அவை அத்துணை சக்தி வாய்ந்தனவாகும்; அதே போது இரண்டிலோ அன்றி மூன்றிலோ அம் மாதிரியான நிறைவு நிலையினையும், பிற அனைத்திலுமோ அன்றி ஏறத்தாழ அனைத்திலுமோ அரைகுறையான மேம்பாடும் இருப்பின், அந்தக் குறைந்த அளவினதாய வெற்றியையும், செல்வாக்கையும் மற்றவைகள் நிலையானதாக்கிவிடும்; பின்பு தற்போது குணவியல்புடன் அரைகுறையாகவே

இணையப்பெற்றுள்ள இந்த நியதிகளை அதிகமாக ஆழ்ந்து அறிந்து கொள்வதற்கும், கடைப்பிடித் தொழுகுவதற்கும் சரிநேரான விகிதப்படி அவை வளர்ந்து பரவும்.

ஒரு மனிதனுடைய ஒழுக்கவரம்புகள் அவனடையும் வெற்றியின் வரம்புகளைக் குறித்துவிடுகின்றன. எனவே, ஒருவனுடைய ஒழுக்கத் தகுதியைத் தெரிந்துகொள்வதே, அஃதாவது, அதைக் கணிதப்படியான மதிப்பீடு செய்வதே, அவனுடைய இறுதியான வெற்றியையோ அன்றித் தோல்வியையோ தெரிந்து கொள்வதாகும் என்பது உண்மையே. ஒழுக்கத் தூண்களால் தாங்கப்படுவது வரையில்தான் ஆக்கமெனும் கோயில் நிலைபேறு கொள்ள முடியும்; அவை வலுவிழந்துவிடின், அது ஆபத்து சூழ்ந்ததாகி விடுகின்றது. அவை பின்னிழுக்கப்பட்டு விட்டால் அது அழிந்து மடியும்படி அசைந்தாடிப் பொடியாகிவிடுகின்றது.

ஒழுக்க நியதிகளைப் புறக்கணிக்கவோ அன்றி மீறவோ செய்யின், அங்கு இறுதியில் இயற்கையமைப்பின் காரண காரியத் தொடர்பு முறையிலேயே தோல்வியும், ஏமாற்றமும் இன்றியமையாத விளைவுகளாகி விடுகின்றன; மேல்நோக்கி எறியப்படுகின்ற கல் பூமிக்குத் திரும்பி வருதல் போன்று, நல்லதோ அன்றிக் கெட்டதோ ஏவி விடப் படுகின்ற ஒவ்வொரு செயலும் நம்மீதே திரும்பி வருகின்றது. நியநெறியானதோ அன்றி நெறியற்றதோ வான ஒவ்வொரு செயலும் அது குறிக்கொள்கின்ற முடிவையே முறியடித்துவிடுகின்றது; அதோடு பின்பும் தொடர்ந்து செய்யப்படுகின்ற அத்தகைய ஒவ்வொரு செயலும் குறிக்கொண்டதை எய்திவிட்டதாகக் கருதுந் தோற்றந் தந்து மேலும் மேலும், அதைத் தொலைவிலாக்கி

விடும். அதற்கு மாருக, ஒழுக்கநெறி சார்ந்த ஒவ்வொரு செயலும் ஆக்கமெனும் ஆலய அமைப்பின் பிறிதொரு திண்மையான கல்லாகும்; அதைத் தாங்கி நிற்கும் தூண்களுக்குப் பிறிதொரு வலிமையும், செதுக்கப்பட்ட சிற்ப அழகும் அதுவே.

ஒழுக்க வலிமையிலும், அறிவிலும் தமக்குள்ள வளர்ச்சியுட னிசைந்தே தனிமனிதர்களோடு, குடும்பங்களும், நாடுகளும் வளர்ந்து வளம் பெறுகின்றனர்; அவர்களின் ஒழுக்கச் சிதைவுக்கேற்ப அவர்கள் வீழ்ந்து தோல்வியடைகின்றனர்.

பருப்பொருளியலில் அமைந்திருப்பது போலவே மனவியலிலும் உருவமும், திண்மையும் உடைத்தாயிருப்பது மட்டுமே நின்று நிலைபெறமுடியும். தீயநெறி என்பது வெறுமை; அதனின்றும் எதையுமே உருவமைக்க முடியாது. அது மூலாதாரத்தின் எதிர்மறை. நெறியின்மை என்பது அழிவு. அது உருவத்தின் எதிர்மறை. அது ஆன்மீக வெறுமை யுண்டுபண்ணும் படிமுறையேயாகும். அது அடிப்படையையே சிதைவுறச் செய்த போதிலும், மறுபடியும் அறிவுள்ள சிற்பி அதை உருப்படுத்துகின்ற நிலையில், சிதறிய பொருட்களை ஆயத்தமாக விட்டுச் செல்கின்றது; ஒழுக்க நெறியே அந்த அறிவுள்ள சிற்பி. ஒருவனிடம் அமைந்துள்ள ஒழுக்கமே மூலாதாரம், உருவம், கட்டமைக்கும் சத்தி அனைத்துமாகும். எப்போதும் தோல்வியடைந்து அழிவையும் உண்டு பண்ணுகின்ற நெறியின்மைக்கு எதிர்மறையாக இருப்பதால், ஒழுககநெறி எப்போதும் கட்டமைத்துக் காக்கின்றது; ஏனெனின், அதுவே அதன் இயல்பு. தனிமனிதர்களிடையேயும் சரி அன்றி நாடுகளிடையேயும் சரி ஒழுக்க நெறியே எங்கணும் சிறந்த கொத்தனுகும்.

ஒழுக்கநெறி தோற்கடிக்கப்பட முடியாதது; இறுதி வரை அதில் உறுதியாக நிற்பவன் கைப்பற்ற முடியாத ஓர் அரணில் இருப்பவனாகின்றான்; எனவே அவனைத் தோல்வியுறச் செய்வது இயலாததாகி விடுவதோடு அவனுடைய வெற்றி உறுதியாக்கப்பட்டு விடுகின்றது. அவனுக்குத் துன்பங்கள், அதுவும் மிகக் கூடுதலான அளவில் ஏற்பட்டே தீரும்; ஏனெனின்; போரின்றி வெற்றியிருக்க முடியாது, அதோடு அவ்வகையில் மட்டுமே அவனுடைய ஒழுக்கச் சக்திகளை நிறைவுற்றதாக்க முடியும்; மேலும், நேர்த்தியாகவும், நிறைவுற்றதாகவும் கைவினைப் பட்டிருக்கும் பிற ஒவ்வொன்றைப் போலவும், அவைகளுடைய வலிமையைப் பரிசோதித்து உண்மையெனக் காட்டுவது நிலைபெறு நியதிகளின்கண் படுவதேயாகும். உலகில் வலுவுடையதும், இணையற்றதுமான தேவைகளை நிறைவேற்ற வேண்டிய உருக்குக் கம்பிகள் வார்ப்படத் தொழிற் சாலையினின்றும் வெளியே அனுப்பப்படு முன்பு அவற்றின் தரத்தையும், தகுதியையும் ஆராயும் பொருட்டு இரும்பு பதப்படுத்துவோரால் அவை சோதனைக் குட்படுத்தப் பட்டேயாக வேண்டும். கடுமையான வெப்பத்தால் உடைந்து விடுகின்ற செங்கல்களைச் செங்கல் செய்பவர் ஒதுக்கி எறிந்து விடுகின்றார். எனவே, மிகப் பெரிய அளவிலும் நீடித்து நிலைபெறும் வகையிலும் வெற்றியடைய வேண்டிய ஒருவன் தீங்கான சூழ்நிலைகளின் கடினப்பாடுகளைத் தாண்டிவிடுவான்; மேலும், அவாவெழுச்சியெனும் நெருப்பு அவனுடைய ஒழுக்க இயல்பிலிருந்து வெறுமனே வேறாக்கப்படுவதில்லை; அது வலிமையூட்டப் பெற்று அழகு மேற்றப் படுகின்றது. உயர்ந்த தேவைக்குத் தகுதியாயிருக்கின்ற நிலையில் நன்கு கைவினைப்பட்ட உருக்குக் கம்பியைப் போன்று அவனிருப்பான்; இரும்பைப் பதனிடு

வோர் நன்கு கைவினைப்பட்ட கம்பிகளைக் கவனித்துக் கொள்வது போன்று, அவனைப் பயன் நழுவிவிடாதபடி பிரபஞ்சம் கவனித்துக் கொள்ளும்.

நெறியின்மை ஒவ்வொரு வகையிலும் தாக்குதலுக்குட்படக் கூடியது; அதன்மீது நிலைபெற வேண்டுமென முயலுபவன் பாழ்நிலை எனும் சதுப்பு நிலத்தில் அழுந்தி விடுகின்றான். அவனுடைய முயற்சிகள் நிலைபேறுடையன போல் தோன்றினும் கூட, அவை பொடிந்து தூள் தூளாகி விடுகின்றன. தோல்வியின் உச்சநிலை தவிர்க்க முடியாத தாகிவிடுகின்றது. நெறியற்ற மனிதன் தனது தீய வழிப் பலன்களைக் கண்டு உள்ளூர நகைத்துக் கொண்டிருக்கும் வேளையில், ஏற்கனவே அவனுடைய சட்டைப் பையில் இருக்கின்ற ஓட்டையின் வழியே அவனுடைய பொன் விழுந்துகொண்டேயிருக்கின்றது. ஒழுக்க நெறியுடன் வாழ்வு தொடங்குபவனும் சோதனையான வேளையின்போது பலன் கருதி அதைக் கைவிடுவானேயாகில், அவன் முதன் முதலில் சூடேற்றப்பட்டதும் உடைந்துவிடுகின்ற செங் கல்லைப் போன்றவனே யாவான்; அவன் உதவிக்கு உகந் தவனன்று; பிரபஞ்சம் அவனை உதறியெடுத்து விடுகின் றது; எனினும், முடிந்த முடிபாகவே அவ்வாறு உதறப் பட்டு விடுவதில்லை; ஏனெனின், அவன் உயிருள்ள மனிதன், செங்கல்லன்று; அவன் வாழமுடியும், கற்றுக்கொள்ள முடியும்; இரங்கிச் சீர்திருந்த முடியும், இழந்ததைப் பெற் றுக்கொள்ள முடியும்.

வெற்றியனைத் துடையவும் உயிரோட்டமும், ஆக்கம் அனைத்திற்கும் வலிமையூட்டும் கருப்பொருளும் ஒழுக்கச் சக்தியேயாகும்; ஆனல், வெற்றியில் பல்வேறு தரங்கள் உள்ளன. எனவே, பேரளவானதும் நீடு நிலைப்பதுமான வெற்றியை அடையும் பொருட்டு மனிதன் ஒவ்வொரு

திசையில் தோல்வியுற்று விடுதல் அடிக்கடி இன்றியமை யாததாகி விடுகின்றது. உதாரணமாக, ஓர் இலக்கியத் திறலோனே அன்றி ஆன்மீக மேதையோ பொருளீட்ட வேண்டுமென்ற முயற்சியைத் தொடங்குவாரே யாயின், அது, அம்முயற்சியில் அவர் தோல்வியுற்று அதன் காரணமாக அவருடைய உண்மையான சக்தி பொதிந்து கிடப்பதும், அதைவிடக் கூடுதலான மாட்சிமையுடையது மான வெற்றியை அடையும் நல்விளைவுக்காகவும், அவனு டைய மேதகை வளர்ச்சிக்காகவும் இருத்தல் கூடும் என்ப தோடு, அவ்வாறே இருக்கவும் செய்கின்றது. ஒரு ஷேக்ஸ் பியருடைய இலக்கிய வெற்றிக்காகவோ அன்றி ஒரு புத்த ருடைய ஆன்மீக வெற்றிக்காகவோ தமது கோடிக் கணக் கான செல்வங்களை இழந்துவிடக் கோடியஞ் செல்வர்கள் பலர் விருப்பமுடையோராயிருப்பர் என்பதில் ஐயமில்லை; மேலும், அத்தகையோர் ஒவ்வொருவரும் தாம் ஒரு சிறந்த பேரம் செய்து கொண்டதாகவே அங்கிலையைக் கருதுவர். அருமையான ஆன்மீக வெற்றி செல்வங்களுடன் சேர்ந்து வந்துறுதல் மிகவும் அரிதானது; எனினும் ஆன்மீக மேன்மையுடனும், சிறப்புடனும் செல்வநிலையின் வெற்றி ஒருவகையிலும் ஒப்புமை காட்டமுடியாது. ஆனால், இந் நூலில் விவரிக்கப்படுகின்ற பொருள், ஒரு ஞானியோ அன்றி ஓர் ஆன்மீக மேதையோ பெறுகின்ற வெற்றியைப் பொறுத்ததன்று; ஆனல், சாதாரண ஆண், பெண்ணு டைய சேமம், நல்வாழ்வு, மகிழ்ச்சி ஆகியவற்றில் அக்கறை கொள்ளும் வெற்றியைப் பொறுத்ததே யாகும்; ஒரே சொல்லில் கூறுவதெனின், மனித இனத்திரளின் ஆக்கத் தைப் பொறுத்ததாகும்; அஃதாவது, முன்னிலைப்படுவ தாலும், இம்மைக்குரியதாயிருப்பதாலும் அது ஏறத்தாழ செல்வத்தைப் பொறுத்ததாயிருப்பினும் அதன்கண்

ணேயே அடைபட்டுவிடாமல், மனிதச் செயல்கள் அனைத்தையும், குறிப்பாக மகிழ்ச்சி என்றழைக்கப் படுகின்ற மனநிறைவையும் ஆக்கம் என்றழைக்கப்படுகின்ற ஆறுதலையும் உண்டு பண்ணுகின்ற சூழ்நிலைகளுடன் தனி மனிதன் கொண்டிருக்கின்ற பிணைப்பைச் சார்ந்த செயல் வினைகளைப் பரந்து தழுவிக்கொள்கின்ற வெற்றியும், ஆக் கமுமாகும். மனித இனத்திற்கு அத்துணை விருப்பமூட்டு கின்ற இப்பயனை எய்தற்கு எட்டு நியதிகள் எவ்வாறு இயங்குகின்றன. ஆக்கம் எனும் கூரை அதனைத் தாங்கி நிற்கும் ஆதாரங்களால் எவ்வாறு மேலெழுப்பப்பட்டுப் பாதுகாப்புப் பெறுகின்றது என்பதை நாம் இனிக் காணு வோம்.



# 1. ஆற்றல்

வெற்றி அனைத்துடையவும் இயக்கச் சத்தி, ஆற்றலாகும். உயிர்ப்பற்ற நிலக்கரியை அது நெருப்பாக மாற்றிவிடுகின்றது; நீரை ஆவியாக உருமாற்றுகின்றது; மிகச் சாதாரணத் திறமை நுண்திறமையாக வளருவதுவரை அதற்கு உயிரூட்டிப் பலப்படுத்துகின்றது; அது மூடனுடைய மனத்தைத் தொடுகின்ற வேளையில் முன்பு இயங்காத் தன்மையில் தூங்கிக் கொண்டிருந்த ஒன்றை உயிர்ப்புள்ளவோர் நெருப்பாக மாற்றிவிடுகின்றது.

ஆற்றல் ஓர் ஒழுக்க அறம்; சோம்பல் அதன் எதிர்மறையாய மறம். அறம் என்ற நிலையில் ஆற்றல் பண்படுத்தப்பாலதே யாகும்; முயற்சியுடனிருக்கத் தன்னைத்தானே எழுச்சியூட்டிக் கொள்வதின் மூலம் சோம்பேறியான மனிதனும் சுறுசுறுப்புள்ளவனாக மாறிவிடலாம். சுறுசுறுப்புடைய மனிதனோடு ஒப்பிடுகையில் சோம்பேறியான மனிதனை அதில் பாதியளவுகூட உயிருள்ளவனாகக்கொள்ள வியலாது. ஒரு காரியத்தைச் செய்து முடிப்பதிலுள்ள இடர்ப்பாடு என்னவென்று பின்னவன் உரையாடிக் கொண்டிருக்கின்ற வேளையிலேயே முன்னவன் அதைச் செய்து கொண்டிருக்கின்றான். சோம்பேறியான மனிதன் தூக்கத்திலிருந்து தன்னைத் தான் தட்டியெழுப்பு முன்னரே சுறுசுறுப்புடைய மனிதன் குறிப்பிடத்தக்க அளவு வேலையைச் செய்து முடித்துவிடுகின்றான்; சோம்பேறியான மனிதன் தறுவாய்க்காகக் காத்துக் கொண்டிருக்கையில், சுறுசுறுப்புடைய மனிதன் வலியச் சென்று ஐந்தாறு வாய்ப்புக்களைத் தானே

வருந்திக் கண்டு பயன்படுத்தி விடுகின்றுன். முன்னவன் தன் கண்களைக் கசக்கிக்கொண்டிருக்கின்ற வேளையிலேயே இவன் காரியங்களைச் செய்து முடிக்கின்றுன்.

ஆற்றல் மூலாதாரச் சத்திகளில் ஒன்று; அஃதின்றி எதையுமே செய்துமுடிக்க வியலாது. செயல் வகைகள் அனைத்திற்கும் அதுவே அடிப்படையான மூலக்கூறு. இப் பிரபஞ்ச முழுமை புரியாததாயினும், சோர்வற்றதாயிருக்கின்ற ஆற்றலின் தோற்றக் காட்சியே யாகும். ஆற்றலே வாழ்வு; அஃதின்றிப் பிரபஞ்சமில்லை; வாழ்வில்லை. ஒரு மனிதன் செயலற்று விடுகையில், உடல் சலனமற்றுச் சாய்ந்துவிடுகையில், இயக்கங்கள் அனைத்தும் செயலற்று ஒடுங்கிவிடுகையில் உடனே அவன் இறந்துவிட்டானென நாம் கூறுகின்றோம்; ஒரு மனிதன் செயல்படத் தவறிவிடுவானேயாகில், அவன் இறந்தவனேயாவான். மனதைப் பொறுத்த நிலையிலும், உடலைப் பொறுத்த நிலையிலும் மனிதன் செயல்படுதற்காகவே உருவாக்கப்பட்டிருக்கின்றுனேயன்றிப் பன்றித்தனமான இளைப்பாறுதல் பெறுதற்காகவன்று. உடலிலுள்ள தசைநார் ஒவ்வொன்றும் (முயற்சிக்கான நெம்புகோலாயிருப்பதால்) சோம்பேறி மனிதனுக்கு ஒரு தண்டனையாகும். ஒவ்வோர் எலும்பும் நரம்பும் கடினப்பாட்டிற்காகவே உருவாக்கப்பட்டிருக்கின்றது; நேர்மையாகப் பயன்படுத்தப் படுதற்காகவே ஒவ்வோர் இயக்கமும், செயல்திறனும் அமையப்பெற்றிருக்கின்றது. காரியங்கள் அனைத்தும் செயல்படுதலையே தம் முடிவாகக்கொண்டிருக்கின்றன; காரியங்கள் அனைத்தும் பயன்படுத்தப் படுவதிலேயே நிறைவு நிலையெய்துகின்றன.

இவ்வாறிருப்பதால் சோம்பேறியான மனிதனுக்கு ஆக்கம் இல்லை; மகிழ்ச்சியில்லை; தஞ்சமில்லை; ஓய்வில்லை; அவன் நாட்டங் கொள்கின்ற இளைப்பாறுதல் கூட அவனுக்குக் கிடைப்பதில்லை; ஏனெனின், முடிவில் அவன் வீடில்லாப் புறச் சாதியாகி, தொந்தரைக்குட்பட்டு, அல்லல்பட்டு ஏளனமாகக் கருதப் படுகின்ற மனிதனாகி விடுகின்றான். எனவே, திறமையுடன் முறைப்பாடாக உழைப்பதைத் தவிர்ப்பதால் மிகக் கடுமையான பளுவைத் தன்மீது சுமத்திக் கொள்கின்றான் என்ற பொருள்பட "சோம்பேறியான மனிதனே மிகக் கடுமையாக உழைக்கின்றான்" என்று முதுமொழி பொருட் செறிவுடன் கூறுகின்றது.

ஆற்றல் வாய்ந்த மனிதன் ஒரு நோக்கத்தையோ அன்றிப் பல நோக்கங்களையோ செய்து முடிப்பதில் தன்னை முனைப்புடன் ஈடுபடுத்திக் கொள்கின்றான். நோக்கம் நன்மையான ஒன்றாகவிருக்கலாம்; அன்றித் தின்மையான ஒன்றாக விருக்கலாம்; ஆனால், தின்மையாகவிருப்பின், அது தன் முன்கை முட்டியால் சுவரில் குத்தித் தன் கையினையே காயப்படுத்திக் கொள்கின்ற ஒருவனைப்போன்று, செய்பவனையே அழித்துவிடுமளவிற்கு எதிர்தாக்குகின்ற வகையில் ஆற்றலைத் தவறாகப் பயன்படுத்துவதாகும். ஆற்றல் எப்போதும் நன்மையானதே. ஆனால், நன்னோக்கங்களுக்காகச் செயல்படுத்துகையில் மட்டுமே அது பயனுடையதாகவிருக்கும்; அந்த நோக்கங்களை அடைந்துவிட்டால் அது மகிழ்ச்சி, வெற்றி, ஆக்கம் ஆகியவற்றை உருவாக்குகின்றது.

எனினும், ஆற்றலே இல்லையெனும் நிலையைவிட ஆற்றல் தவறாகவேனும் செயல்படுத்தப்படுகின்ற

நிலை சிறந்ததேயாகும். "வெப்பமாகவோ அன்றிக் குளிர்ச்சியாகவோ நான் உன்னை ஏற்றுக்கொள்வேன்; நீ இளஞ் சூடாகவிருந்தால் உன்னை என் வாயினின்றும் நான் உமிழ்ந்துவிடுவேன்" என்று ஸெயிண்ட் ஜான் அவர்கள் கூறிய வாக்கியங்களில் இது வலியுறுத்திக் கூறப்பட்டிருக்கின்றது. ஆற்றலை உருமாற்றும் செயற்பாடு அதனுடைய நன்மையானதும், தீமையானதுமான கூறுகளில் இருப்பதையே வெப்பத்தினுடையவும், குளிர்ச்சியினுடையவும் உச்ச நிலைகள் இங்குக் குறிப்பிடுகின்றன. இளவெப்பமான நிலை நிறமற்றது, உயிரற்றது, பயனற்றது; அது அறமோ அன்றி மறமோ கொண்டிருப்பதாகக் கூறவியலாது; அது வெறும் தரிசானது, வெறுமையானது, பயனற்றது. செழிப்புற்றிருக்கும் தனது ஆற்றலைத் தீய நோக்கங்களுக்காகச் செயல்படுத்தும் மனிதன் கடைசியில் தன்னைக் கடைத்தேற்றுகின்ற அறம் ஒன்றைக் கொண்டிருக்கின்றான். அதுவே முயற்சி எனும் அறம்; தன்னல நோக்கங்களை அடைவதற்காக அவன் பயன்படுத்துகின்ற அதே சத்தி அனுபவத்தால் அறிவு பெறுமாறு அவனைக் கட்டாயப்படுத்திக் கடைசியில் அவனுடைய செயல்முறை அடித்தளத்தையே திருத்தியமைக்கத் தூண்டும் வகையில் அத்தகைய இக்கட்டுகளையும், துன்பங்களையும், துயரங்களையும் அவன்மீது சுமத்திவிடும். அவனுடைய மனக்கண்கள் திறந்துவிடின், தனது சத்தி பாய்ந்தோடுவதற்கான புதுமையானதும், நேரானதுமான கால்வாய்களை வெட்டிவிடுபவனாவான். அவன் முன்பு தீமையில் வலிமையுடையவனாக இருந்ததைப் போன்று, பின்பு நன்மையில் அத்துணை வலிமையுடையவனாகிவிடுவான்.

"பெருமளவில் பாவியாக இருப்பவனே பெருமளவில் ஒழுக்கவாணராகிவிடுகின்ருன்" என்ற முதுமொழியில் இந்த உண்மை மிக அழகாகச் சித்திரிக்கப்பட்டிருக்கின்றது.

ஆற்றலே சத்தி; அஃதின்றி எதையுமே செய்து முடிக்கவியலாது; அறமேனும் அங்கிருப்பதில்லை; ஏனெனின், அறமென்பது தீமையைச் செய்யாமலிருப்பதில் மட்டும் அடங்கியிருப்பதன்று. ஆனல், முதன்மையாக நன்மை செய்வதிலேயும் அடங்கியிருக்கின்றது. இதை முயற்சி செய்பவர்கள் இருப்பினும்கூட, ஆற்றல் போதாமையால் தோல்வியடைந்துவிடுகின்றனர். அவர்களுடைய முயற்சிகள் சாதகமான பயன்களை உண்டுபண்ணப் போதிய வலுவற்றனவாயிருக்கின்றன. அத்தகையோர் தீயநெறி கொண்டவர்களல்லர்; அவர்கள் எப்போதுமே மனமறிந்த கேடு செய்வதில்லை என்பதற்காக நன்மக்கள் தோல்வியுற்றுவிடுவதாக வழக்கமாக அவர்களைக் குறித்துப் பேசப்படுகின்றது. ஆனல், கேடு செய்வதற்கான முன்னிடு இல்லாமை நன்மைவழி நடப்பதாகாது; அந்நிலை வலுவும் சத்தியுமின்றி இருப்பதேயாகும். கேடு விளைத்தற்கான சத்தியிருந்தும் நன்மையான வழிகளில் தம் ஆற்றல்களை நெறிப்படுத்த வேண்டுமெனத் தேர்ந்து தெளிபவனே உண்மையில் நல்ல மனிதனுவான். எனவே, குறிப்பிடத்தக்க அளவு ஆற்றல் இல்லாத நிலையில் ஒழுக்கச் சத்தியும் இருப்பதில்லை. இருக்கின்ற நன்னெறிப்பான்மை உள்ளுறைவதாகவும், உறங்குவதுமாகவே இருக்கும்; இயக்கச் சத்தியின்றித் தானே இயங்குகை இல்லாதவாறு போன்று நன்மையுந் தானே நகருவதில்லை.

வாழ்வின் ஒவ்வொரு துறையிலும், அது பருப் பொருளியலான திசைகளிலாயினுஞ் சரி, ஆன்மீக வியலான திசைகளிலாயினும் சரி, செயல்கள் அனைத் திலும் ஆற்றலே அறிவுறுத்துச் சத்தியாக அமைந் திருக்கின்றது. படைவீரனிடமிருந்து மட்டுமன்றி, ஒவ்வொரு சிந்தனைத் தரத்திலுமுள்ள ஒவ்வோர் ஆசிரியன் வாயினின்றோ அன்றி எழுதுகோலினின்றோ பிறக்கின்ற செயலுக்கான அழைப்பு, உறங்கிக் கொண்டிருக்கும் தனது ஆற்றலைத் தட்டியெழுப்பிக் கொண்டு கடமையை ஊக்கத்துடன் செய்யுமாறு மக்கட்கு விடுகின்ற அழைப்பேயாகும். ஆழ்ந்த சிந்தனை யும், தியானமும் குடிகொண்ட மனிதருங்கூட தியானக் கருத்தில் ஆற்றலைப் பயன்படுத்துமாறு தங்களது சீடர்களைத் தூண்டுவதை என்றுமே நிறுத் துவதில்லை. வாழ்வின் கோளங்கள் அனைத்திலுமே ஒரே வகையான ஆற்றல் தேவைப்படுகின்றது; படை வீரர், பொறியியல் வல்லுநர், வணிகர் ஆகியோருக் குரிய விதிகள் மட்டுமே செயல்முறை விதிகள் என்ப தில்லை; திருநிலையினர், ஞானிகள், ஒழுக்கவாணர்கள் ஆகியோரின் கட்டளைகள் அனைத்துமே செயல்முறை குறித்த கட்டளைகளேயாகும்.

"மிகவும் விழிப்புணர்ச்சியுடன் இரு" என்று தம் மாணவர்களுக்குப் பேராசிரியர்களில் ஒருவர் கூறிய அறிவுரையானது, ஒருவன் கொண்ட குறிக் கோள் கைகூட வேண்டுமெனின் சோர்வற்ற ஆற்றல் இன்றியமையாததாகும் என்பதைச் சுருக்கமான சொற்களில் விளக்கிக் காட்டுவதாயிருக்கின்றது; இது, ஓர் ஒழுக்கவாணரைப் போன்றே ஒரு விற்பனை யாளருக்கும் சரிசமமாகப் பொருந்துகின்ற நல்ல அறி

வுரையாகும். "ஓயாத விழிப்புணர்ச்சியே விடுதலை யின் விலையாகும். ஏதேனும் செய்து முடிக்கவேண்டு மெனின், மனிதன் உடன்தானே அதைச் செய்வா னாக; அதை ஊக்கத்துடன் பொருதுவானாக" என்று கூறியிருப்பதுவும் அதே ஆசிரியரேயாகும். செயல் படுகை படைப்புத் திறனுடையது என்பதையும், அதை முறைப்படி பயன்படுத்துங்கால் பெருக்கமும், வளர்ச்சியும் தொடர்ந்து வந்துறுகின்றன என்பதை யும் நினைவூட்டிக்கொள்ளுபோது இந்த அறிவின் கருத் துச் செறிவை நாம் காணலாம். மேலும் அதிகமான ஆற்றலைப் பெறவேண்டுமெனின், நம்பால் ஏற்கனவே அமைந்துள்ள ஆற்றலை அதன் முழு அளவிற்கு நாம் பயன்படுத்தியாகவேண்டும். இருப்பவனுக்கே மேலும் தரப்படுகின்றது. ஏதேனும் ஒரு கடமையில் ஊக்க முடன் தனது கையை வைப்பவனுக்கே சத்தியும், விடுதலையும் வந்துறுகின்றன.

ஆனல், ஆற்றல் படைப்புச் சத்தியுடையதா யிருக்க நன்னோக்குகளை நோக்கி அது திருப்பப்படுதல் மட்டும் போதுமானதாகாது; அதனைக் கவனமாகக் கட்டுப்படுத்திப் பேணிக் காக்கவும் வேண்டும். 'ஆற்றலைப் பேணிக் காத்தல்' என்பது எந்த ஆற்றலும் வீணாக்கப்படுவதோ அன்றி அழிந்துபடுவதோ இல்லை என்ற இயற்கையின் நியதியை எடுத்துரைக்கும் தற் காலச் சொல்லாகும்; தன் ஆற்றல்களின் விளைவுகள் பயனுடையதா யிருக்கவேண்டுமெனின், மனிதன் இந்த அடிப்படையில் அறிவுத் திட்பத்துடன் பணி யாற்ற வேண்டும். கூச்சலும், பரபரப்பும் மிகுதியான அளவு ஆற்றல் வீணாவதேயாகும். "அதிகத் துரிதம் குறைந்த வேகம்", கூடுதலான அளவு கூச்சல் வழக்க

மாகக் குறைந்த அளவு சாதனையையே துணையாகக் கொண்டிருக்கின்றது. இயங்கிக்கொண் டிருக்கின்ற ஆவியில் இரைச்சல் கேட்பதேயில்லை. தப்பி வெளியேறும் ஆவியே மிகுதியான இரைச்சலை உண்டு பண்ணுகின்றது. திட்பமிக்க வெடிமருந்தே குண்டைக் குறிவைத்த இடத்திற்குச் செலுத்துகின்றது.

மனிதன் தன் ஆற்றல்களைப் பேணிக் காத்துத் தன் குறிக்கோளை நிறைவேற்றுதற் பொருட்டு அவற்றை ஒருமுகப்படுத்திப் பலப்படுத்துகின்ற அளவிற்கு அவன் ஆறுதலும், மௌனமும், ஓய்வும், அமைதியும் பெறுகின்றான். கூச்சலைச் சத்தியென்று பொருள் கொள்வது பெரும் மயக்கமாகும். அதட்டி வெருட்டும் தற்புகழ்ச்சிக்காரனைவிடப் பெரிய குழந்தை யாருமே இருக்க வியலாது. உடலைப் பொறுத்த அளவிலேயே அவன் மனிதன்; ஆனால், மனத்தைப் பொறுத்த அளவில் அவன் ஒரு கைக் குழந்தையேயாகும்; எதையும் செய்ய வலிமையில்லாத நிலையிலும், பிறர்க்குக் காட்ட வேலைப்பாடு இல்லாத நிலையிலும், தான் சாதித்தது என்ன, அல்லது தான் சாதிக்கக்கூடியது என்ன என்பதை இரைந்து பறைசாற்றுவதன் மூலம் அதை ஈடுசெய்ய முற்படுகின்றான்.

"அசைவற்ற நீர்த்தேக்கம் ஆழமாகவே இருக்கின்றது"; பெரும் பிரபஞ்சச் சத்திகள் செவிப் புலனாகாதவையாகவே இருக்கின்றன. அமைதி எங்குளதோ அங்கே மிகப் பெரிய சத்தியுமுள்ளது. வலிமையானதும், நன்கு பயிற்றுவிக்கப்பட்டதும், ஆறுதலாக ஒழுங்குபடுத்தப்பட்டதுமான மனத்தின் திண்ணமான குறியீடு அமைதியேயாகும். அமைதி

யான மனிதனுக்கு அவனுடைய தொழில் முறை தெரியும் என உறுதியாக நம்பலாம். அவன் பேசுகின்ற சொற்கள் சிலவே, ஆயினும் அவை பல கூறும். அவனுடைய வழிவகைகள் நன்கு திட்டஞ் செய்யப்பட்டவை; அவை நன்கு சமனுக்கப்பட்ட இயந்திரம் போன்று இயங்குதல் உண்மையேயாகும். முன்னோடும் நெடுந் தூரத்தை அவன் காணுகின்றான்; நேராகத் தன் குறிக்கோள் நோக்கிச் செல்லுகின்றான். இடர்ப்பாடு எனும் பகைவனை அவன் நண்பனாக மாற்றிவிடுகின்றான்; "எதிரி தன் வழித்துணையாகும்போது அவனுடன் ஒத்திணங்க" இவன் நன்கு கற்றுக்கொண்டுவிட்டதால் நலஞ் சேரும் வகையில் அவனைப் பயன்படுத்திக்கொள்கின்றான். கூரறிவு படைத்த படைத்தளபதியைப் போன்று ஏற்பட விருக்கும் நெருக்கடிகள் அனைத்தையும் அவன் முன்னறிந்து கொண்டவனாகின்றான். உண்மையில் வருமுன் ஆயத்தமாயிருக்கின்ற மனிதன் இவனே. அவனுடைய சிந்தனைகளில் தீர்ப்பின் அறிவுரைகளில் அவன் காரணங்களைக் கலந்தாராய்ந்து தற்செயல் நிகழ்ச்சிகள் அனைத்திலுமுள்ள முக்கியத்துவத்தைக் கண்டறிகின்றான். அவன் என்றுமே வியப்பிற்கு ஆளாவதில்லை; என்றுமே பரபரப் படைவதில்லை; தனது சொந்த உறுதிப்பாட்டைப் பாதுகாப்புடன் கொண்டு செலுத்துவதோடு, தனது ஆதரவைப் பொறுத்து உறுதியுடனும் இருக்கின்றான். நாம் அவனை மடக்கிவிட்டோம் என்று கருதலாம்; ஆனால், அது அடுத்த கணத்தில் நாம் நம்முடைய வேகத்தில் காலிடறிவிழ அவன் நம்மை மடக்கிவிட்டான் என்பதைக் காண்பதற்காகவே யிருக்கும்; அல்லது, அவனுக்

கெனத் திட்டம் செய்யப்பட்டிருந்த தடுமாற்றத்தில் ஆறுதலின்மையின் காரணமாக நாமே விரைந்து சென்று விழுந்துவிட்டவராவோம். அவனுடைய ஆழ்ந்த சிந்தனையுடன் நமது உணர்ச்சிவேகம் போரிட வியலாது; முதல் தாக்குதலிலேயே அது தோற்கடிக்கப்பட்டுவிடுகின்றது. அறிவுத் திட்பத்துடன் நெறிப் படுத்தப்பட்ட அவனுடைய ஒருமுகமான சத்தியின் ஓட்டத்தை அடக்கியாளப்படாத நமது ஆற்றல் வழி திருப்பிவிடமுடியாது. "திசைகள் அனைத்திலும் அவன் ஆயுதந் தாங்கியவனாகவே" இருக்கின்றான். தன்னைத் தான் நெறிப்படுத்திக் கொள்வதின் மூலம் அடையப் பெற்ற ஒரு மனமற்போர் கலையைக் கொண்டு எதிர்ப்பு தன்னைத்தானே அழித்துக் கொள்ளும் வகையில் அதைப் பொருதுகின்றான். சினமான சொற்களில் அவனைக் கண்டித்துவிட்டால் போதும், அவனுடைய படிமானமுடைய பதிலுரையில் அடங்கியுள்ள வசைகள் நமது மடமையின் மையத்தையே தேடிச் சேர்ந்துவிடும்; அதோடு, நமது கோபக்கனல் கழிவிரக்கம் எனும் சாம்பலில் அழுந்திவிடும். நாகரிகமற்ற பழக்கங்கொண்டாடி அவனை அணுகிவிட்டால், உடனே அவனுடைய பார்வை நம்மை வெட்கத்தில் ஆழ்த்தி, நம்மைத் திரும்பவும் நம் உணர்விற்குக் கொண்டுவந்து விடும். நிகழ்ச்சிகள் அனைத்திற்கும் அவன் ஆயத்தமாய் இருப்பதுபோன்றே அவனுக்காக மனிதரில் யாருமே ஆயத்தமாக இல்லாவிடினும் அவன் மனிதர் அனைவருக்காகவும் ஆயத்தமாகவே இருக்கின்றான். குறைபாடுகள் அனைத்தும் அவனெதிரில் வெளிப்பட்டு விடுகின்றன. அமைதியால் வழக்கத்திற்குக் கொண்டுவரப்பட்டதும், தானே

இயங்கும் தன்மையுடைய தாக்கப்பட்டதுமான ஓர் உள்ளார்ந்த சத்தியைக் கொண்டு அவன் அடக்கியாளு கின்ருன்.

களைப்பினுல் செத்துச் செயலற்று நிற்கும் நிலையி லிருந்து வேறுபட்டது அமைதி. அது ஒருமுகப்படுத் தப்பட்ட ஆற்றலின் உச்சியாகும். அதன் அடித்தளத் தில் குவிமையப் படுத்தப்பட்ட மனநிலை அமைந்திருக் கின்றது. கலக்கத்திலும், கிளர்ச்சியிலும் மனநிலை சிதறிவிடுகின்றது. அது பொறுப் பிழந்து, சத்தியோ அன்றி முக்கியத்துவமோ இல்லாததாகிவிடுகின்றது. குழப்பமுற்றவனுகவும், சிடுசிடுப்பாகவும் முற்கோபி யாகவும் இருக்கும் மனிதனுக்குச் செல்வாக்கு இருப்ப தில்லை. அவன் கடிந்து விலகுகிருனே யன்றிக் கவருவ தில்லை. மெத்தனப் போக்குடைய அண்டை வீட்டுக் காரன் வெற்றியடைவதும், அவனைப் பிறர் நாடிச் செல்வதும், அதேபோது எப்போதுமே பரபரப்பும், கவலையும், தொந்தரையும் (இதை முயற்சியென்று அவன் தவறுதலாகக் கருதுகின்ருன்) கொண்டுள்ள தான் தோல்வியடைவதும், தன்னைப் பிறர் தவிர்த்து நடப்பதுவும் ஏன் என்று அவன் வியப்புறுகின்ருன். அண்டை வீட்டுக்காரன் அமைதியான மனிதனுக விருப்பதால் அவன் மெத்தனப் போக்குடையவனுக மாட்டான்; ஆழ்ந்தாய்ந்து செயலாற்றுபவனுக இருக் கின்ருன்; மிகுதியான வேலைகளை விரைந்து முடிப்ப தன்றி அதை மிகத் திறமையோடும் செய்து முடிக் கின்ருன்; மேலும், மிகுந்த தன்னடக்கமும், ஆண்மை யும் உடையவனுக இருக்கின்ருன். இதுவே அவனு டைய வெற்றிக்கும் செல்வாக்கிற்கும் காரணமாகும். அவனுடைய ஆற்றல் அடக்கியாளப்பட்டுப் பயன்

படுத்தப்படுகின்றது; அதேபோது அடுத்த மனிதனின் ஆற்றல் சிதறிச் சின்னுபின்ன மடைகின்றது.

எனவே, ஆக்கமெனும் ஆலயத்தின் முதல் ஆதாரம் ஆற்றலேயாகும்; முதன்மையானதும், அதிமுக்கியமானதுமான இந்த ஆற்றலின்றி ஆக்கம் இருக்கவே முடியாது. ஆற்றலில்லையெனின் திறமையில்லையென்றுதான் பொருள்படும். உழைப்பிற்கான இயற்கை விருப்பு அங்கில்லையாதலால் ஆண்மை மிக்க தன்மதிப்பும், தன்னுரிமையும் இருப்பதில்லை. வேலையில்லாதோரில் பலர் உழைப்பிற்குரிய முதல் முக்கியத்துவமான ஆற்றல் இல்லாத காரணத்தால் மட்டுமே வேலைக் கமர்த்தப்பட முடியாதவர்களாக இருப்பதைக் காணலாம். தன் சட்டைப் பைகளுக்குள் கைகளை விட்டுக் கொண்டும், வாயில் சுருட்டு வைத்துக் கொண்டும் தனக்கு ஒரு குவளை மது எவரேனும் வாங்கித் தருவரோ என்று நாளொன்றுக்குப் பலமணி நேரம் தெருக்கோடியில் காத்து நிற்கின்ற மனிதன் வேலைதேடுவதோ அன்றிக் கிடைத்த வேலையை ஒப்புக் கொள்வதோ மிகவும் அரிது. உடல் கொழுத்தும், மனம் மந்தமாகவும் இருக்கும் அவன் அவ்வாறே இருக்கின்ற தனது போக்கை ஒவ்வொருநாளும் மிகுதியாக்கி, உழைப்பிற்குத் தன்னை மேலும் தகுதியற்றவனாக்கி, அதன்மூலம் வாழ்க்கைக்கே தகுதியற்றவனாகி விடுகின்றான். ஆற்றலுடைய மனிதன் வேலையில்லாததும், இடர்ப்பாடுடையதுமான சிறுசிறு காலங்களைக் கடக்க நேரிடலாம். ஆனால், நிலையாக வேலையற்றிருப்போரில் ஒருவனாகிவிடுதல் அவனுக்கே இயலாத காரியமாகும். அவன் வேலையைத் தேடிக் கண்டுபிடித்து விடுவான்; அல்லது உண்டுபண்ணிக்கொள்வான்,

ஏனெனின், அவனுக்கு உழைப்பின்மை துன்பந் தரும். உழைப்பு களிப்பூட்டும்; உழைப்பில் களிப்பைக் காணு பவன் நெடுநாள் வேலையற்றிருப்பதில்லை.

சோம்புதலுடைய மனிதன் வேலையிலமர்த் தப்பட விரும்புவதில்லை. அவன் எதுவுஞ் செய்யாது வாளாவிருத்தலின் போதே தன்னியல்புடன் இருப்ப வனுகின்ருன். முயற்சியைத் தவிர்ப்பது எவ்வாறு என்பதே அவனுடைய தலையாய கல்வி. திமிர்ப்புகளில் தழைத்து வளருவதே இன்பத்தைக் குறித்த அவனு டைய கருத்து. அவன் தகுதியற்றவன், வேலைக்கமர்த் தப்படக் கூடாதவன். வேலையின்மை அனைத்தும் செல்வந்தரின் செயல்வினையே எனக் கூறுகின்ற சமூகப் பொதுவுடைமைக் கொள்கையாளருங் கூட சோம்புதலான, அசட்டையான, ஆதாயமற்ற ஊழி யராகவே பணிபுரிவதன்மூலம் வேலையில்லாப் படைக் குப் பின்னும் எண்ணிக்கையைக் கூட்டுபவரே யாவர். ஏனெனின், சுறுசுறுப்பான, நேர்மையான உள்ளம் படைத்த மக்கள் அனைவருக்கும் வெறுப்பூட்டுகின்ற சோம்புதல் கீழ்த்தரமான பழிச் செயல்களில் ஒன் ருகும்.

ஆனல், ஆற்றல் ஒரு கலவைச் சத்தியாகும். அது தனித்து நிற்பதில்லை. உரம் வாய்ந்த குணவியல்பை உருவாக்கவும், ஆக்கத்தை விளைவிக்கவுமான பண்பு கள் இதன்கண் அடங்கியிருக்கின்றன. முக்கியமாக, கீழ்க்காணும் நான்கு குணவியல்புக் கூறுகளிலேயே பண்புகள் உள்ளடங்கியிருக்கின்றன :

1. முந்தார்வம். 3. விடாமுயற்சி.
2. விழிப்புணர்ச்சி. 4. அக்கறை.

எனவே, ஆற்றலெனும் ஆதாரம், இந்த நான்கு உறுதி யான மூலக் கூறுகளடங்கிய கட்டியாகும். அவை உறுதியானவை, நீடித்து நிலைபெறுபவை, துன்பத்தின் மூர்க்கமான காலநிலையைத் தாங்கும் வண்ணந் திட்டஞ் செய்யப்பட்டவை. அவையனைத்தும் வாழ்விற்கு, சத் திக்கு, திறமைக்கு, முன்னேற்றத்திற்கு வழிகோலு பவையாகும்.

முந்தார்வம் விலையுயர்ந்த சொத்தாகும். அது நம் பிக்கையைப் படைக்கின்றது. சுறு சுறுப்புடையோ ராகவும், முந்தார்வமுடையோராகவும், நேரம் தப்பா மையைக் கடைப்பிடிப்போராகவும் இருக்கின்ற மக்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமாகின்றனர். அவர்கள் தம் கடமையை ஊக்கத்துடனும், செவ்வனேயும் செய்து முடிப்பர் என நம்பலாம். விரைந்து செயலாற்றும் பணிமுதல்வர்கள் தம் பணியாளர்களுக்கொரு வலிமை யூட்டும் மருந்தாவர்; கடமை தவிர்க்குங் கருத்துடை யோர்க்கு ஒரு கசையடியாவர். தம்மைத் தாம் நெறிப்படுத்திக் கொள்ளாதார்க்கு அவர்கள் நற்பயன் விளைக்கும் ஒழுங்கு முறைக்கான ஒரு கருவியுமாவர். எனவே, தமது சொந்தப் பயனுடைமையையும், வெற் றியையும் கையாற்றும் அதே வேளையில் பிறருடைய பயனுடைமைக்கும் வெற்றிக்கும் அவர்கள் உதவு கின்றனர். எப்போதும் காலங் கடத்துபவராகவும், எப்போதும் நேரந் தவறுபவராகவும் இருக்கின்ற அசட்டையான தொழிலாளி தனக்கில்லையெனினும் பிறர்க்கு ஒரு தொந்தரையாகி விடுகின்றான்; அவனு டைய பணிகளுக்கு ஆதாய மதிப்பு சிறிதளவே இருப் பதாகக் கருதப்படுகின்றது. முந்தார்வத்தின் ஏவல் பெண்களாகிய தீர சிந்தனையும், தீவிரவிரைவும் ஆக்கம்

அடைவதற்கான பயன்மிக்க கருவிகளாகும். சாதாரண வாணிபப் போக்குகளில் சுறுசுறுப்பு ஒரு செட்டான சத்தியாகும்; முந்தார்வம் ஆதாயம் விளைவிக்கின்றது. நெடுநேர்மையர் எனப் பெயர் பெற்றோர் வாணிபத்தில் என்றேனும் வெற்றியடைந்துள்ளனரா என்பது ஐயப்பாட்டிற் குரியதேயாகும். தோல்வியுற்றோர் பலரை நாம் அறிந்துள்ளோமெனினும் அவ்வாறு வெற்றியடைந்தவரை நாம் இதுவரை கண்டதேயில்லை.

மனத்தின் செயல் திறன்கள், சத்திகள் அனைத்திற்கும் விழிப்புணர்ச்சியே காவலனாகும். மூர்க்கமானதும், அழிவு விளைப்பதுமான கூறுகள் எதுவும் உட்புகாமல் தடுக்கும் ஒற்றன் அதுவே. வெற்றி, விடுதலை, ஒண்மை அனைத்திற்கும் நெருங்கிய கூட்டாளியும், காவலாளியும் அதுவே. மனத்தின் இந்த எச்சரிக்கையான நோக்கு இல்லாத நிலையில் மனிதன் மூடனாகி விடுகின்றான்; மூடனுக்கு ஆக்கம் வந்துறுவதில்லை. தன்னைத் தொந்தரை செய்யவருகின்ற இழிந்த கருத்துக்களும், மூர்க்கமான இச்சைகளும் தன் மனத்தின் ஆழ்சிந்தனை, அமைதி, தீர்ப்பு ஆகியவற்றை அடியோடு கொள்ளையிட மூடன் இடந்தந்து விடுகின்றான். அவன் என்றுமே பாதுகாப்புடன் இருப்பதில்லை; அழையாது நுழையும் ஒவ்வொரு கயமைத் தன்மைக்கும் தன் மனக் கதவுகளைத் திறந்து வைத்து விடுகின்றான். தன்னை விரட்டிப் பிடிக்கின்ற ஒவ்வோர் உணர்ச்சி வேகமும் தனது சமநிலையைத் துடைத் தழித்துவிடும் அளவிற்கு அவன் அத்துணை வலுவற்றவனாகவும், உறுதியற்றவனாகவும் இருக்கின்றான். பிறர் எவ்வாறிருத்தல் கூடாது என்பதற்கு அவன் ஓர் எடுத்துக்

காட்டாகும். அவன் எப்போதும் தோல்வியுறுபவனுகவே இருக்கின்ருன்; ஏனெனின், மூடனுக இருப்பவன் மனிதர் அனைவருக்குமே ஒரு பொல்லாப்பு; அவனை மதிப்புடன் வரவேற்கும் சமுதாயமே இல்லை. வலிமையின் முகடாக ஒண்மை இருத்தல் போன்று வலிமையின்மையின் அடுத்த கோடி மடமை.

சிந்தனையற்ற தன்மையிலும், வாழ்வின் சாதாரண நுணுக்கங்களிலுள்ள பொதுப்படையான தளர்ச்சியிலும் விழிப்புணர்ச்சியின்மை வெளிப்பட்டு விடுகின்றது. மடமையின் மற்ெருரு பெயரே சிந்தனையின்மை. பெருவாரியான தோல்வி, துன்பம் ஆகியவற்றின் மூலகாரணத்திலே அது அமைந்து கிடக்கின்றது. எந்த வகையான பயனுடைமையையும், ஆக்கத்தையும் குறிகொள்கின்ற எவனும் தன் செயல்களைக் குறித்தோ, அச்செயல்களால் பிறர்க்கு ஏற்படும் விளைவுகளையும், அவற்றின் எதிர்விளைவாகத் தனக்கே ஏற்படுவனவற்றையும் குறித்தோ கருதாது கண்மூடியாக இருக்கவியலாது. (ஏனெனின், நாட்டு மக்களுக்குப் பயனுடையராய் இருத்தலையும், தனக்குத் தான் ஆக்க மிகுப்போராய் இருத்தலையும் வெவ்வேருகப் பிரிக்க முடிவதில்லை) அவன் தனது வாழ்க்கைப் போக்கின் தொடக்கத்திலேயே தற்சார்புப் பொறுப்பென்னும் உணர்ச்சி பெற்று விழிப்புற்ருகவேண்டும். வீட்டிலோ, நீதிமன்றத்திலோ, கோயில் சொற்பொழிவு மண்டபத்திலோ, மாளிகையிலோ, பள்ளிக்கூட அறையிலேயோ அன்றி பணப்பெட்டியருகிலோ கூட்டாகவோ அன்றித் தனியாகவோ, உழைப்பில் ஈடுபட்டிருக்கும் போதோ அன்றி விளையாடும் போதோ, அவன் எங்கெங்கிருப்பினும் அவனுடைய ஒழுகலாறு

நன்மைக்கோ அன்றித் தீமைக்கோ அவனுடைய வாழ்க்கை நெறியை முக்கியமாகப் பாதிக்கும் என்பதை அவன் அறிந்துகொள்ள வேண்டும்; ஏனெனின், நடத்தையில் ஒரு நுட்பமான வசியம் இருக்கின்றது: அது தொடுகின்ற ஒவ்வோர் ஆண், பெண், குழந்தையிடத்தும் ஒரு முத்திரையைப் பொறித்துச் செல்கின்றது; அம்முத்திரையே மனிதர் ஒருவர் மீதொருவர் கொண்டிருக்கின்ற மனப்போக்கை வரையறுக்கும் கூறாக விருக்கின்றது. இக்காரணப் பற்றியே ஒன்றுபட்ட சமுதாயம் அனைத்திலும் நற்பழக்கவழக்கங்களைப் பேணி வளர்த்தல் அத்துணை முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கக் காண்கின்றோம். உலைவுபடுத்துவதும், உடம்பாடற்றதுமான மனக்குறைபாட்டை நாம் நம்முடனே கொண்டு செல்வதாயிருப்பின், நம் காரியங்களில் அது நச்சூட்டு மென்பதைப் பெயரிட்டு அறிமுகப்படுத்த வேண்டியதில்லை. சத்திவாய்ந்த திராவகம் நேர்த்தியான உருக்குக் கம்பியை அரித்துத் தின்று அதனுருவத்தைச் சிதைத்துவிடுதல் போன்று, அதனுடைய அரித்துத் தின்னும் இயல்பு நமது முயற்சிகள் அனைத்தையும் அழித்து நமது மகிழ்ச்சியையும், ஆக்கத்தையும் சின்னாபின்னமாக்கி விடுகின்றது. அதற்கு மாறாக, உறுதிப்படுத்துவதும், ஒருங்குறுத்துவதுமான மன மேம்பாட்டை நாம் நம்முடனே கொண்டு செல்வதாயிருப்பின், நம்மைச் சூழ்ந்திருப்போர் அதைப் புரிந்து கொள்வதோடு கவர்ச்சியுமடைகின்றனர். அவர்கள் ஏனென்று அறிந்து கொள்ளாமலே நன்னோக்குடன் நம்மை யணுகி வருவர்; நண்பர்களையும், நல் வாய்ப்புகளையும் கொணர்ந்து, நம் முயற்சிகள் அனைத்திலும் வெற்றி காணப் பேருதவி

யாகவுமிருந்து, நம் காரியங்கள் அனைத்திலும் அதி சத்தி வாய்ந்த விளையாட்டாகவும் விளங்குவது அந்த நற்பண்பே யாகும். அது நம் தவறுகளைக் கூட நேர்படுத்திவிடும்; சிறுதிறத் திறமைக் குறைவுகளின் தீய விளைவுகளை, எண்ணிறந்த குறைபாடுகளை மூடி மறைத்துப் பெரிதும் மட்டுப் படுத்திவிடும்.

எனவே, நாம் கொடுக்கின்ற அளவைப் பொறுத்தே உலகத்தின் கரங்களிலிருந்து நாமும் பெறுகின்றோம். தீமைக்குத் தீமை; நன்மைக்கு நன்மை. மாசு படிந்த ஒழுக்கத்திற்கு மட்டான செல்வாக்கும், நிறைவற்ற வெற்றியுமே; மேம்பட்ட ஒழுக்கத்திற்கு நிலைபெறு சத்தியும், நிறைவுற்ற வெற்றியுமாம். நாம் செயல்படுத்துகின்றோம், உலகம் செயல் மறுதலிக்கின்றது. மூட மனிதன் தோல்வியுறுகின்றபோது பிறரைத் தூற்றுகின்றான். தன்மீது தவறேதும் காணுவதில்லை; ஆனால், அறிவுடைய மனிதன் தன்னைத்தான் கண்காணித்துத் திருந்திக் கொள்கின்றான். அதனால் அவனுக்கு வெற்றி உறுதியாகிவிடுகின்றது.

விழிப்புணர்ச்சியும், சுறுசுறுப்புமுடைய மனம் கொண்ட மனிதன், அதன் பயனாகத் தன்னுடைய குறிக்கோள்களை யடையும் விலையுயர்ந்த கருவியைக் கொண்டவனாகின்றான்; அவன் நிகழ்ச்சிகள் அனைத்திலும், தறுவாய்கள் அனைத்திலும், குணவியல்பின் கேடு பயக்கும் தவறுகளுக்கு எதிராக முழு விழிப்புணர்ச்சியுடன் இருப்பானெனின், எந்த நிகழ்ச்சி, எந்தச் சூழ்நிலை, எந்தப் பகைவன் அவனைப் பின்னொதுக்கி ஆயத்த மற்ற நிலையில் பொருதிட முடியும்? அவன் குறிகொள்கின்ற முறைப்படியான பயனைப் பெறுவதை எதுவே தடுத்துவிட முடியும்?

விடா முயற்சி களிப்பையும், செழிப்பையும் தருகின்றது. ஊக்கஞ் செறிந்த ஆள்வினையுடையராய மக்களே சமூகத்தின் மகிழ்ச்சியுடைய உறுப்பினராவர். தேவைக்கு மிகுந்த பணம் படைத்திருத்தலையே செல்வமெனக் கொண்டால் அவர்கள் எப்போதுமே செல்வந்தராயிருப்பதில்லை. ஆனால், அவர்கள் எப்போதும் சிறிதும் கவலையற்றவராகவும், களிப்புடையராகவும் இருக்கின்றனர்; தாம் செய்வதிலும், தம்மிடம் இருப்பதிலும் மிகுந்த மனநிறைவு காணுகின்றனர்; எனவே, பெருமளவில் அருளுடையராய் இருப்பவரையே செல்வந்தரெனப் பொருள் கொண்டால் அவர்களே செல்வந்தராவர். மந்தமுற்று மனக்கோட்டை கட்டவோ அன்றித் தம் நோய்களையும், துன்பங்களையும் தங்நலமுடன் விளம்பிக்கொண்டிருக்கவோ சுறுசுறுப்புள்ள மனிதருக்கு நேரமிருப்பதில்லை. மிகுதியாகப் பயன்படுத்தப்படுகின்ற பொருட்களே மெருகேற்றப் பட்டதா யிருக்கின்றன. மிகுதியாக உழைப்பில் ஈடுபடுகின்ற மக்கள் தம்மெருகையும், மிதப்பாற்றலையும் நன்னிலையில் கொண்டிருக்கின்றனர். பயன் படுத்தப்படாத பொருட்கள் விரைந்து கறைபடுகின்றது; காலங் கொல்வோன், களைப்பாலும் பதனிழந்த பகற்கனவாலும் அழிக்கப் படுகின்றான். 'காலங் கொல்ல' வேண்டியதுள்ளதென உரையாடுவதே ஏறத்தாழப் பேதைமையை ஒப்புக் கொள்வதற்கு ஒப்பாகும். ஏனெனில், அறிவு, பயனுடைமை எனும் வண்மைகள் பெருகிய உலகில், தன் கையாட்சியில் குறுகிய வாழ்வைக் கொண்ட எவரே மிகுதியான நேரம் கொண்டிருக்கக் கூடும்? தீர்க்கமான தலைகளும், நல்லிதயங்களும் கொண்ட மனிதர் ஒவ்

வொரு நாளின் ஒவ்வொரு கணத்தையும் பயனுடனும், களிப்புடனும் செலவிடுகின்றனர்; அவர்கள் நேரத்தைக் குறித்துப் பேசுவதெனின், அது, தாம் விரும்புகின்ற அத்துணையும் செய்து முடிக்க வாய்ப்பில்லாத வகையில் காலம் மிகவும் சுருங்கியதா யிருக்கின்றது எனும் முடிவைக் கூறுவதற்காகவே யிருக்கும்.

ஆள்வினை நலத்தையும், நன்னிலையையும் பெருக்குகின்றது. சுறுசுறுப்புள்ள மனிதன் ஒவ்வோரிரவும் தளர்ச்சியுடன் படுக்கச் செல்கின்றான்; அவன் உலைவுபடாததும், இனிமையானதுமான உறக்கம் கொள்கின்றான்; அவன், மகிழ்ச்சியூட்டும் மற்றொரு நாளைய உழைப்பிற்காகப் பொலிவுடனும், வலிவுடனும் அதிகாலையில் துயிலெழுந்து விடுகின்றான். அவனுக்கு நல்ல பசியும், செரிமானமும் ஏற்படுகின்றன. அவன் பொழுது போக்கில் ஒரு சிறந்த சுவைச் சத்தையும், உழைப்பில் ஒரு நல்ல கற்பத்தையும் காணுகின்றான். அத்தகைய மனிதன் மந்தம், சோர்வு இவற்றுடன் என்ன தோழமையைக் கொள்ளமுடியும்? சிறுவளவு உழைத்துப் பெருமளவில் உண்ணுபவரையே அத்தகைய பதனிழந்த உணர்ச்சிகள் சுற்றிவளைக்கின்றன. சமூகத்திற்குப் பயன் படுபவர்களாகத் தம்மை ஆக்கிக் கொள்ளும் மக்கள் சமூகத்திலிருந்து தங்கள் முழுப் பங்கான நலம், மகிழ்ச்சி, ஆக்கம் ஆகியவற்றைத் திரும்பப் பெறுகின்றனர். அவர்கள் அன்றாடக் கடமையை மகிழ்ச்சியுடையதாக்கி உலகம் முன்னேறும் வகை செய்கின்றனர். அவர்கள் நாட்டின் பொற் சுரங்கம்; பூமியின் சாரம்.

"அக்கறை அழிவின்மையைப் பெறும் வழியாகும்; அக்கறையுடையோர் இறந்துபடுவதில்லை; அக்கறை

யில்லாதோர் ஏற்கனவே இறந்துபட்டவர்களுக் கொப் பாவர்" என ஒரு பேராசிரியர் கூறியுள்ளார். மனம் முழுவதையும் அதன் கடமைக்கென உரிமையாக் குவதே அக்கறையாகும். நாம் என்ன செயல்படுத்து கின்றோம் என்பதைப் பொறுத்தே நாம் வாழுகின் றோம். தாம் செயல்படுத்துவது எதுவாயினும் அதில் உயர்ந்த மேம்பாடன்றி எவ்விதக் குறைபாடு ஏற்படுவ தாயினும் அக்கறை மிக்க மக்கள் அதிருப்தி அடை கின்றனர்; அவர்கள் எப்போதும் அந்த மேம்பாட்டை அடைந்து விடுகின்றனர். குறைபாடுடைய வினை முறையில் திருப்தி காணுகின்ற கவனமற்றோரும் அரை மனம் கொண்டோரும் எத்துணையோ பேர் உள்ளனர்; அக்கறையுடையோர் தமக்கே உரிய மேம் பாட்டுடன் தனித்துப் புகழொளி வீசுகின்றனர். பயனு டைமை, தொண்டு ஆகிய வரிசைகளில் அக்கறை யுடைய மக்களுக்கு எப்போதும் மிகுதியான "காலி யிடங்கள்" இருக்கின்றன. ஆழ்ந்த அக்கறைகொண்ட ஓர் ஆண்மகனோ அன்றிப் பெண்மணியோ ஏதேனும் பொருத்தமான கடமையை வெற்றிகரமாக நிறை வேற்றாமல் என்றுமே இருந்ததுமில்லை, இருக்கப் போவதுமில்லை. அத்தகைய மக்கள் அதிநுட்பமுடன் செயல் படுபவராகவும், மனச் சான்றிற்குக் கட்டுப் படுபவராகவும், வருந்தி யுழைப்பவராகவும் இருப்ப துடன், செய்வன மிகச் சிறப்புடையனவாக அமைவது வரையில் விட்டாற்றியாக ஓய்வெடுத்துக் கொள்ள வியலாது; சிறந்தோர்க்குச் சீர் வழங்க உலகம் எப் போதும் காத்திருக்கின்றது. பருப்பொருள் சார்ந் தனவோ அன்றி அறிவாற்றல் சார்ந்தனவோ அன்றி ஆன்மீகஞ் சார்ந்தனவோ ஆகிய காரியங்கள் எவற்றி

லாயினும் சரியே, ஒப்பற்ற மேம்பாடுடைய ஒன்றிற் குரிய முழுவிலையை, பொருளாகவோ, புகழாகவோ, நண்பர்களாகவோ, செல்வாக்காகவோ, மகிழ்ச்சி யாகவோ, வாய்ப்பாகவோ அன்றி வாழ்வாகவோ தந்து விட வையகம் எப்போதும் ஆயத்தமாக நிற்கின்றது. நாம் கடை நடத்துபவரோ அன்றித் திருத்தொண்டா சிரியரோ ஆகிய எந்நிலையுடையரேனும் சரியே, எவ்வித ஐயமோ அன்றி நம்பிக்கைக்கேடோ இன்றி மிகச் சிறந்தவற்றை உலகிற்கு அச்சமின்றி வழங்கலாம் நமது அக்கறையின் அழிக்கமுடியாத முத்திரை ஒரு முறை நம் சரக்குகளின் மீதோ மற்றொருமுறை நம் சொற்களின் மீதோ பொறிக்கப் படுமேயாயின், நமது வாணிபம் தழைத்துச் செழிக்கும், அல்லது நம் வாய்மொழிகள் நிலைத்து வாழும்.

அக்கறையுடைய மக்கள் தமது உழைப்பு, குண வியல்பு ஆகிய இரண்டிலும் விரைவான முன்னேற்றம் காணுகின்றனர். எனவே, அவர்கள் வாழுகின்றனர் "இறந்துபடவில்லை"; ஏனெனின், தடைப்பட்டுத் தேங்கி நிற்றலே இறப்பு; இடையறாத முன்னேற்ற மும், என்றும் மேலோங்கும் மேன்மையும் எங்குளவோ அங்கு முயற்சியும், வாழ்வும் தேக்கத்தையும், இறப் பையும் விழுங்கிவிடுகின்றன.

எனவே, முதல் ஆதாரத்தின் அமைப்பும், வேலைப் பாடும் விளக்கப்பட்டுவிட்டன. அதை நன்கு கட்டி முடித்து உறுதியாகவும், நேராகவும் நிலைப்படுத்து பவன் தனது வாழ்வெனும் வாணிபத்தில் வலிமை வாய்ந்ததும், நிலைபெறுவதுமான ஆதாரத்தைக் கொண்டவனாவான்.

---

## 2. சிக்கனம்

இயற்கையன்னை வெறுமையை அறியமாட்டாள் என்றே கூறப்படுகின்றது. விரயமும் அவள் அறிய மாட்டாள். இயற்கையின் தெய்வீகச் சிக்கனத்தில் ஒவ்வொன்றும் பேணிக் காக்கப்பட்டு நற்பணிக்காகத் திருப்பப்படுகின்றது. மலசலக் கழிவுப் பொருட்கள் கூட வேதிமுறையில் உருமாற்றப் பெற்றுப் புது உருவங்களைக் கட்டுதற்காகப் பயன்படுத்தப்படுகின்றன. இயற்கை ஒவ்வொரு கழிவையும் அழிப்பதென்பது அதை ஒழித்துவிடுவதன் மூலமன்று; ஆனால், உருமாற்றுகையின் மூலமே அதைச் செய்கின்றது; அஃதாவது, அதை இதமாக்கித் தூய்மைப்படுத்தி அழகுள்ள, பயனுள்ள, நன்மையுள்ள காரியச் சித்திகளுக்குப் பயன்படும் வண்ணமே அதைச் செய்கின்றது.

இயற்கையில் பிரபஞ்ச நியதியாக விருக்கின்ற அதே சிக்கனம் மனிதனிடத்தில் ஒழுக்கநெறிப் பண்பாக விருக்கின்றது; அவன் அப்பண்பைக் கொண்டே தன்னுடைய ஆற்றல்களைப் பாதுகாத்துக் காரியங்களின் அமைப்பின்கண் ஓர் இயக்க உறுப்பாகின்ற தன்னிடத்தை வகித்துக் கொள்கின்றான்.

செல்வநிலைச் சிக்கனம் இந்த நியதியின் ஒரு சிறு பகுதியேயாகும்; அல்லது, முழுக்கவும் மனஞ் சார்ந்ததாகவும் அதன் உருமாற்றங்கள் ஆன்மிகஞ் சார்ந்ததாகவும் இருக்கின்ற மெய்யான சிக்கனத்தின் சடப்பொருள் சார்ந்த ஓர் அடையாளமெனவே அதைக் கூறலாம். செல்வநிலைச் சிக்கனக்காரன் செம்பிற்கு வெள்ளியும், வெள்ளிக்குப் பொன்னும், பொன்னிற்குப் பணத்தாள்களுமாகப் பரிமாற்றம் செய்து

பணத்தாள்களை வங்கிக்கணக்கில் எண்களாக மாற்றி விடுகின்றான். பணத்தை இவ்வாறு மிகவும் விரைவாகக் கைமாற்றத்தக்க உருவங்களில் மாற்றிக்கொள்வதால் தன் காரியங்களின் பொருளாதார நிருவாகத்தில் அவன் பயனடைபவனாகின்றான்.

ஆன்மீகச் சிக்கனக்காரன் தன் பற்றுக்களை நுண்புலமாகவும், நுண்புலங்களை நியதிகளாகவும், நியதிகளை மெய்யுணர்வாகவும் உருமாற்றுகின்றான்; சத்தி வாய்ந்த விளைவுகளுடைய செயல்கள் ஒரு சிலவேயாயினும் அவற்றில் நுண்புலம் வெளிப்படுகின்றது. இந்த உருமாற்றங்கள் அனைத்தாலும் தனது குணவியல்பு, தனது வாழ்க்கை நிருவாகம் ஆகியவற்றில் அவன் பயனடைபவனாகின்றான்.

பருப்பொருளியலிலோ அன்றி மனவியலிலோ காரியங்கள் அனைத்திலும் பாழ்படுதல், பயனின்றிக் குவித்துவைத்தல் இவைகளுக்கிடையேயுள்ள நடுத்தரமான பாதையே உண்மையான சிக்கனமாகும். பணமாயினுஞ் சரி, அன்றி மனவாற்றலாயினுஞ் சரி வீணாக்கப்படுகின்ற ஒன்று சத்தியற்றதாக ஆக்கப்பட்டு விடுகின்றது. செல்வநிலையிலோ அன்றி மன நிலையிலோ சத்தியைப் பெற வேண்டுமெனின் அது சேகரிக்கப்படத்தான் வேண்டும்; ஆனால், நியாயமாகப் பயன்படுத்துவதும் சேகரிப்பைப் பின்தொடர வேண்டும். பணத்தையோ அன்றி ஆற்றலையோ சேகரிப்பது கருவியே; பயன்படுத்துவதே காரியசித்தி; மேலும், பயன்படுத்துகையே சத்தியை உண்டுபண்ணுகின்றது.

கீழ்க்காணும் ஏழு காரியங்களிலும் நடுத்தரமான பாதையைக் கண்டு பிடிப்பதிலேயே பல்வகையான

சிக்கனமும் அடங்கியிருக்கின்றது. அவையாவன: பணம், உணவு, உடை, பொழுதுபோக்கு, ஓய்வு, காலம், ஆற்றல்.

பண்டமாற்றின் அடையாளம் பணம்; அது கொள்முதல் சத்தியைக் காட்டுகின்றது. செல்வச் செழிப்பினைப் பெறவேண்டுமென்று துடிப்பவனும், அதேபோன்று கடன் இல்லாதிருக்கவேண்டுமென்று விரும்புபவனும், எப்போதும் அதிகரித்துக்கொண்டேயிருக்கும் நடைமுறை முதலுக்குச் சிறு பகுதியை விட்டுவைக்கும் வகையிலோ அன்றி எந்த நெருக்கடி வரினும் கையில் தயாராகச் சிறு சேமிப்பைக் கொண்டிருக்கும் வகையிலோ, தனது வருவாய்க்கேற்பச் செலவினைப் பங்கிடுதல் எவ்வாறு என்பதைக் கற்றுக் கொள்ள வேண்டும். சிந்தனையற்ற செலவினத்தில், அஃதாவது பயனற்ற மகிழ்ச்சிகளிலோ அன்றிக் கேடு தரும் சொகுசுகளிலோ செலவிடப்படுகின்ற பணம் பாழ்படுகின்றது; சத்தி சிதைவுறுகின்றது; ஏனெனின், முறையானதும், நன்னெறிப்படுவதுமான கொள் முதலுக்கான வகையும், தகுதியும் அளவில் சிறியதும், தாழ்ந்ததுமான ஒரு சத்தியாயினும் அது சத்தியே. மேலும், நமது அன்றாடவாழ்வின் விவரங்களைப் பெரிதும் மேற்கொள்ளுகின்ற சத்தியுமாகும். ஊதாரி ஒருபோதும் செல்வந்தனாக வியலாது; ஆனால், அவனைச் செல்வங்கள் வந்தடையினும் அவன் விரைவில் ஏழையாகிவிடுவான். கஞ்சன் எத்துணைதான் பொன்னைப் பதுக்கி வைத்திருப்பினும், அவனைச் செல்வந்தன் என்று கூறிவிட முடியாது; ஏனெனின், அவன் மேலும் மேலும் விரும்புகின்றான்; பயன்படாது கிடக்கும் அவனுடைய பொன் கொள்முதல் சத்தியை

இழந்துவிடுகின்றது. செட்டானவரும், முன்மதியுடையோருமே செல்வங்களைப் பெறுகின்ற வழியில் செல்பவராகின்றனர்; ஏனெனின், கட்டாகச் செலவிடும் அவர்கள் கவனமாகச் சேமித்து வளர்ந்து வரும் தங்களுடைய தகுதிக்கேற்பத் தங்களது செல்வச் செழிப்பையும் சிறுகச் சிறுகப் பெருக்கிக் கொள்கின்றனர்.

செல்வந்தனுக வேண்டிய வறிய மனிதன் கீழ்ப் பாகத்திலிருந்து தொடங்க வேண்டுமேயன்றித் தனது தகுதியை மிகவும் மிஞ்சிய ஏதோவொன்றைப் பெற முயற்சி செய்வதன் மூலம் செல்வச் செழிப்புள்ள தோற்றம் கொள்ள வேண்டுமென்று விரும்பவோ, முயலவோ கூடாது. கீழ்ப் பாகத்தில் எப்போதும் மிகுதியான சந்தர்ப்பமும், வாய்ப்பும் இருப்பதுடன் அது தொடங்குவதற்கு மிகவும் பாதுகாப்பான இடமுமாகும்; ஏனெனின், அதைவிடக் கீழ்பட்டது அங்கு எதுவுமில்லை. ஒவ்வொன்றும் மேற்பட்டதுவே. வாணிபத்துறையிலீடுபடும் பல வாலிப மனிதர்கள் வெற்றிக்கு இன்றியமையாதது எனத் தாம் மடமையாகக் கருதுகின்ற வீருப்புப் பேச்சாலும், பகட்டாலும் விரைவில் கவலையடைகின்றனர். ஆனுல், அது பிறரை யன்றி அவனையே ஏமாற்றி விரைவில் அழிவுக்கு வழிகாட்டுகின்றது. எத்துறையிலேனும் சரியே, ஒருவனுடைய தகுதியையும், முக்கியத்துவத்தையும் குறித்து மிகைப்படுத்தப்பட்ட விளம்பரத்தைக் காட்டிலும் அடக்கமானதும், உண்மையானதுமான தொடக்கமே வெற்றியை உறுதியாக்குகின்றது. முதலீடு சிறுதிறத்ததாக விருப்பின், தொழிற்படும் எல்லையும் சிறுதிறத்ததாகவே இருக்கவேண்டும்.

முதலீடும், வாய்ப்பும், கையும், கையுரையுமாகும்; அவை பொருந்தவேண்டும். நமது முதலீட்டை அதன் நடைமுறைச் சத்தியெனும் வட்டத்திற்குள் நாம் ஒருமுகப்படுத்தினல் போதுமானது. அந்த வட்டம் எத்துணை தான் எல்லை கட்டப்பட்டிருப்பினும், வளர்ந்து வரும் சத்தியின் இயக்கவிசை வெளிப்பட முனையும்போது வட்டம் தொடர்ச்சியாகப் பரந்து விரிந்து கொண்டுதானிருக்கும்.

அனைத்திற்கும் மேலாக, உலோபம், விரயம் எனும் இருதிறக் கோடிகளையும் தவிர்ப்பதில் கவனம் கொள்ளவேண்டும்.

உணவு, உயிர்க்கலை, உயிர்ச்சத்தி, உடல், மனம் இரண்டினுடையவும் வலிமை இவற்றைக் காட்டு கின்றது. பிற அனைத்தையும்போலவே உண்பதிலும், குடிப்பதிலும் கூட ஒரு நடுத்தரமான பாதையிருக் கின்றது. ஆக்கந் தேடவேண்டிய மனிதன் நன்கு பேணியூட்டப்படவேண்டியதுதான்; ஆனல், அளவை மிஞ்சி ஊட்டப்படுதல் கூடாது. கஞ்சத்தனத்தாலோ அன்றித் துறவு பூண்பதாலோ (இரண்டும் தவருன சிக்கன முறைகள்) தன்னுடலைப் பட்டினி போடு பவன் தன் மனவாற்றலைக் குறைத்துக் கொள்பவனு கின்ருன்; அதோடு, தன்னுடலை எந்த வலிமையான பேறும் பெறுதற்கான கருவியாகாத நிலையில் மிகவும் நலிவுற்றதாக்கிவிடுபவ னுகின்ருன். அத்தகு மனிதன் தோல்விக்கே ஏற்ற நிலையான நோயுற்ற மனநிலையை நாடுகின்ருன்.

எவ்வாறெனினும், பெருந்தீனிக்காரன் மிகைப் பட உண்பதிலேயே தன்னை அழித்துக் கொள்

கின்றான். முரட்டுத்தனம் ஊட்டப்பெற்ற அவனுடைய உடல், நோயையும் தீய தன்மையையும் ஈர்க்கின்ற நச்சுக்கள் சேமித்துவைக்கப்பட்டிருக்கின்ற களஞ்சியயாகிவிடுகின்றது. மேலும், மேலும் விலங்குத் தன்மையுடையதாகவும், குழப்பமுற்றதாகவும் மாறி அதன் காரணமாக மிகவும் திராணியற்றதாகவும் ஆகி விடுகின்றது. மிகையுண்ணும் ஆவல் கீழ்த்தரமானதும் மிகவும் விலங்கினப் பாங்குடையதுமான பாவங்களில் ஒன்றாகும்; ஒரு நடுத்தரப் போக்கைப் பின்பற்றுவோர் அனைவருக்கும் அது வெறுப்பூட்டுவதுமாகும்.

ஊணிலும், குடியிலும் மிகவும் நடுத்தரப் போக்குடையோரே சிறந்த உழைப்பாளர்களும், மிகவும் வெற்றியுறும் மக்களுமாவர். மிகைப்படாமல் போதுமான அளவு ஊட்டம் எடுத்துக்கொள்வதால் அவர்கள் உச்சநிலையான உடல், மனத் தகுதி பெறுகின்றனர். இவ்வாறு நடுத்தரப் போக்கால் நன்கு ஆயத்தம் செய்து கொள்வதால் அவர்கள் வாழ்க்கைப் போரை ஊக்கத்துடனும், களிப்புடனும் பொருதும் ஆற்றலைப் பெறுபவராகின்றனர்.

உடை, உடலுக்கான உறையும், பாதுகாப்புமாகும்; ஆனால், இந்தச் செட்டான குறிக்கோளினின்றும் அது அடிக்கடி பின்னிழுக்கப்பட்டுப் பயனற்ற பகட்டிற்கான கருவியாக்கப்படுகின்றது. இங்குத் தவிர்க்கப்பட வேண்டிய புறக் கோடிகள் மெத்தனமும், பகட்டுமாகும். வழக்கத்தைப் புறக்கணிக்கவியலாது; புறக்கணிக்கப்பட வேண்டியதுமில்லை; முக்கியத்துவம் அனைத்தும் துப்புரவிற்கே

யாகும். அழுக்குடையணிந்து, தலைமயிரும் வாரி விட்டுக்கொள்ளாத ஆணோ அன்றிப் பெண்ணோ தோல்வியையும், தனிமையையும் விரும்பியழைப் பவரேயாகின்றனர். ஒரு மனிதனின் ஆடை அவன் வாழ்வில் வகித்து வருகின்ற நிலைமையுடன் இசைவு படுவதாக இருக்கவேண்டும்; அது நல்ல தரத்தில் ஆக்கப்பெற்றதாயிருக்க வேண்டும்; நன்கு தைக்கப் பெற்றதாகவும், பொருத்தமுடையதாகவும் இருக்க வேண்டும். ஒத்துப்பார்க்கையில் புதிதாகவே இருக் கின்ற உடையைக் களைந்து எறிந்துவிடுதல் கூடாது; அதை நன்கு அணிந்து பயன்படுத்தவேண்டும். ஒரு மனிதன் ஏழையாகவிருந்து நைந்துபோன உடை யணிந்திருப்பினும் அது துப்புரவாகவும், அவனுடைய உடல் முழுவதும் துப்புரவாகவும், தூய்மையாகவும் இருக்குமெனின், அவன் தன் மதிப்பையோ அன்றிப் பிறர் காட்டும் மதிப்பையோ இழந்து விடுவதில்லை. ஆனால், உடையில் அளவுகடந்த சொகுசிற்கு வழி காட்டுகின்ற பகட்டு ஒரு பழிச்செயலாகும்; அறநெறி கொண்ட மக்கள் அதியக்கறையுடன் அதைத் தவிர்க்க வேண்டும். ஒரு மாது தமது பேழையில் நாற்பது உடை கள் வைத்திருந்தது எனக்குத் தெரியும்; அதே போன்று ஒரு மனிதர் இருபது கைத்தடிகளும், அதே எண்ணிக்கையான தொப்பிகளும், சில டஜன் மேற் சட்டைகளும் வைத்திருந்தார்; பிறிதொருவர் இரு பதோ அன்றி முப்பதோ இணைகள் செருப்புக்கள் வைத்திருந்தார். தேவைக்கு அதிகமான உடைகளைக் குவித்து வைப்பதில் பணத்தை விரயம் செய்கின்ற செல்வந்தர் ஏழ்மையை நாடுபவராகின்றனர்; ஏனெ னின், அது விரயமாகும்; விரயம், இன்மைக்கு வழி

காட்டி விடுகின்றது. இவ்வாறு கருத்தின்றிச் செல விடப்படுகின்ற பணத்தை நன்முறையில் பயன்படுத்த லாம்; ஏனெனின், வறுமை நிறைந்திருக்கின்றது. ஈகை மிகவுயர்ந்தது.

உடையிலும், நகையிலுமுள்ள எடுப்பான பகட்டு நாகரிகமற்ற வெறுமை மனத்தையே முன்மொழி கின்றது. அடக்கமும், நாகரிகமும் கொண்ட மக்கள் தம் உடையிலும் அடக்கமும், அவைத் தகுதியு முடையராயிருப்பர்; தம் நாகரிகத்தையும், அறத்தை யும் மேலும் பெருக்கவே அவர் தம் சேமஇருப்பான பணத்தைச் செலவிடுவர். பகட்டாகத் தேவையின்றி ஆடையணிவதைக் காட்டிலும் அவர்கள் கல்வியும், முன்னேற்றமும் அதிமுக்கியத்துவம் வாய்ந்ததாகக் கொள்வர். அதன் காரணமாக இலக்கியம், கலை, விஞ் ஞானம் இவை ஊக்குவிக்கப்படுகின்றன. உண்மை யான பண்புநயம் மனத்திலும், நடத்தையிலுமே இருக்கின்றது; அறத்தாலும், அறிவுக் கூர்மையாலும் அணிசெய்யப்பட்ட மனம், புறப்பகட்டாக உடலை அணிசெய்து கொள்வதால் தனது கவர்ச்சியை (குறைவுபடச் செய்யமுடியுமாயினும்) அதிகரித்துக் கொள்ள முடிவதில்லை. உடலைப் பயனற்ற வகையில் அணிசெய்வதில் செலவிடப்படுகின்ற பொழுதை அதைவிடப் பயன்தரும் வகையில் செலவிடலாம். பிற காரியங்களில் உள்ளதைப் போன்றே உடையிலும் எளிமையே சிறந்தது. பயனுடைமை, வசதி, உட லழகு இவற்றைப் பொறுத்த அளவில் எளிமை மேம் பாட்டின் உச்சநிலையை அடைந்து விடுகின்றது; அதோடு உண்மையான சுவையையும், பண்படுத்தப் பட்ட நடத்தை நயத்தையும் காட்டுகின்றது.

பொழுது போக்கு, வாழ்வின் இன்றியமையாத காரியங்களில் ஒன்ருகும். ஒவ்வோர் ஆண்மகனும் பெண்மணியும், குறிப்பிடத்தக்க அளவு பொழுதை ஒதுக்கி வைக்கின்ற ஏதேனும் திட்டமான பணியை வாழ்வின் முக்கிய நோக்கமாகக் கொண்டிருக்க வேண்டும்; அனுமதிக்கப்பட்ட குறிப்பிட்ட காலங் களில்தான் பொழுது போக்குக்காகவும், ஓய்வுக்காகவும் அவன் அதனின்றும் திரும்பவேண்டும். ஒருவனின் கருத்தூன்றிய பணியில் சத்திமீதூர, உடல், மனம் இரண்டிலும் பெருமளவு கிளர்ச்சியைப் பெறுதலே பொழுதுபோக்கின் நோக்கமாகும். எனவே, அது ஒரு கருவியேயன்றிக் காரிய சித்தியாகாது; இதை எப் பொழுதும் கருத்தில் கொள்ளவேண்டும்; ஏனெனின், தம்மில் குற்றமற்றவராகவும், நல்லவராகவும் இருக் கின்ற பலருக்குச் சில மாதிரியான பொழுதுபோக்கு கள் மிகவும் கவர்ச்சியுடையனவாகி விடுகின்றன. அவர்கள் அதை வாழ்வின் குறிக்கோளாகவேகொண்டு அதன் பொருட்டு மகிழ்ச்சிக்காகக் கடமையைப் புற மொதுக்கும் ஆபத்திற் குள்ளாகி விடுகின்றனர். வாழ் வில் நோக்கம் எதுவுமின்றி வாழ்வை விளையாட்டுக் கள், மகிழ்ச்சிகள் இவைகளின் தொடர்ச்சியான வரி சையாக ஆக்கிவிடுதல், உயிர்வாழும் மக்களை அப் படியே தலைகீழாகத் திருப்புவதாகும்; அது சலிப் பையும், நலிவையும் உண்டு பண்ணுகின்றது. அதைச் செய்யும் மக்களே மாந்தர்களில் மிகவும் மகிழ்ச்சி யற்றவராவர்; அவர்கள் சோர்வு, அலுப்பு, முன்கோபம் இவற்ருல் துன்புறுகின்றனர். சுவைச்சத்து செரிப் புக்கு உதவுமேயன்றி உணவாகக் கொண்டால் நோயுண்டு பண்ணும்; அதே போன்று உழைப்பின்

நடுநடுவே உற்சாக மூட்டிக்கொள்ளப் பொழுது போக்கே யன்றி, வாழ்வின் பணியாகவே அதைக் கொண்டுவிட்டால் துன்பத்திற்கு அது வழிகாட்டி விடும். ஒரு மனிதன் தனது அன்றாடக் கடமையை முடித்து விடுவானேயாயின், அவன் விட்டாற்றியான மனத்துடனும் கவலையற்றும் பொழுது போக்கை நாடலாம்; அவனுடைய உழைப்பு, மகிழ்ச்சி இரண்டும் களிப்பிற்கான ஒரு கருவியாகிவிடும்.

ஒருவனின் நேரம் முழுவதையும் உழைப்பிற்கோ அன்றிப் பொழுது போக்கிற்கோ ஒதுக்கிவிடாது, அவை ஒவ்வொன்றிற்கும் நேரத்தையும், இடத்தையும் பகிர்ந்து பல்லாண்டு பயனுடன் வாழ்தற்கு வேண்டிய இன்றியமையாத மாறுதல்களால் வாழ்வை நிரப்பிக் கொள்வதே உண்மையான சிக்கனமாகும்.

மனதிற்கொத்த மாற்றம் அனைத்தும் பொழுது போக்கேயாகும்; மனவுழைப்பில் ஈடுபடுபவர் ஓய்வும், உற்சாகமுந் தருகின்ற பொழுதுபோக்கிற்காகக் குறிப் பிட்ட பொழுதில் உழைப்பை நிறுத்தி வைப்பதால் தமது உழைப்பின் தரம், அளவு இரண்டிலும் பய னடைபவராவர்; அதேபோது உடலுழைப்பில் ஈடுபடு பவர் பொழுது போக்காகவோ அன்றிக் கல்வி பயிலும் வாய்ப்பாகவோ எதையேனும் வாசிப்பதை மேற் கொள்ளுவதால் ஒவ்வொரு வகையிலும் தமது உழைப் பைச் செம்மையாக்குபவராவர்.

உண்பதிலோ அன்றி உறங்குவதிலோ அன்றி ஓய் வெடுத்துக் கொள்வதிலோ நமது நேரம் முழுவதையும் நாம் செலவிடாததைப் போன்றே கடுவுழைப்பிலோ அன்றிக் களிப்பிலோ நாம் காலமுழுவதையும் செல

விட வேண்டியதில்லை; ஆனால், நமது வாழ்வின் சிக்கனக் கட்டுத்திட்டத்தின் இயற்கையான கற்பமாகப் பொழுது போக்கிற்கு, அதற்கு உரித்தான இடத்தைத் தந்தாக வேண்டும்.

உழைப்பிற்குப் பின்பு வலிமையைத் திரும்பப் பெறுதற்காகவே ஓய்வு. தன்மதிப்புள்ள ஒவ்வொரு மனிதனும் தனது உறக்கத்தை ஓய்வு நிறைந்ததாகவும், இனிமையானதாகவும் ஆக்கவும், துயிலெழுவதைப் புத்துணர்ச்சியுடையதாகவும், மகிழ்ச்சியுடையதாகவும் ஆக்கவும் ஒவ்வொரு நாளும் போதுமான அளவு உழைக்கவேண்டும்.

போதுமான அளவு உறக்கங்கொள்ள வேண்டியதுதான்; ஆனால் மிகுதியான அளவு கூடாது. ஒரு புறம் அளவிற்கு அதிகமாக அனுபவிப்பதோ அன்றி மற்றொருபுறம் இழந்து விடுவதோ இரண்டும் கேடு பயப்பனவே. ஒருவனுக்கு எத்துணையளவு உறக்கம் தேவைப்படுகின்றது என்பதை அறிந்து கொள்ளுதல் எளிதான சிறிய காரியமேயாகும். முன்னேரம் படுக்கச் சென்று முன்னேரம் எழுவதால் (அஃதாவது ஒருவன் படுக்கையிலேயே வெகு நேரத்தைக் கழிப்பவனுயிருப்பின் ஒவ்வொரு நாளும் சிறிது முன்னேரத்தில் எழுதல்.) அவனோ அன்றி அவளோ முழு வலிமையைத் திரும்பப் பெறுதற்கு எத்துணை மணிநேரம் தேவைப்படுகின்றது என்பதை விரைவில் நுட்பமாக அறிந்து ஒழுங்குசெய்துகொள்ளலாம். உறக்கங் கொள்கின்ற மணி நேரங்களைக் குறைத்துக்கொண்டால் தூக்கம் மிகமிக ஆழ்ந்ததும், இனிமை யுடையதாகவும் துயிலெழுதல் மிகமிகச் சுறு

சுறுப்பும், மகிழ்ச்சி யுடையதாகவும் இருப்பதைக் காணலாம். தமது பணியில் செழித்துக் கொழிக்க வேண்டியவர்கள் பழிக்கத் தக்க தளர்ச்சிக்கும், அளவிற்கதிகமான தூக்கத்திற்கும் இடங்கொடுக்க லாகாது. வாழ்வின் உண்மையான குறிக்கோள் பய னுடைய உழைப்பேயன்றி, இளைப்பாறுதலாகாது; உழைப்பின் பயன்களை எய்தற்குச் சார்பான உதவி யளிப்பது வரையில்தான் இளைப்பாறுதல் நன்மை தருவதாகவிருக்கும். சோம்பலும் ஆக்கமும் என்றுமே கூட்டாளிகளாக முடியாது; ஒன்றிற் கொன்று என்றுமே உறவுகொள்ள முடியாது. சோம்பேறி என்றுமே வெற்றியை ஓடிப்பிடிக்கவியலாது. ஆனால், தோல்வி அவனை விரைவில் ஓடிப்பிடித்து அவனைத் தோற்கடித்துவிடும். பெருமளவு உழைப்பிற்கு நம்மைத் தகுதியுடையவராக்கிக் கொள்வதற்கு ஓய்வேயன்றி, சோம்பலூட்டி நம்மைக் கெடுத்துக் கொள்வதற்காகவன்று. உடல் வலிமையைத் திரும்பப் பெற்றுவிடுகின்ற மாத்திரத்திலேயே ஓய்வின் பயன் நிறைவேறி விடுகின்றது. உழைப்பிற்கும், ஓய்விற்கு மிடையே நிறைவான சமநிலையைக் கொண்டிருத்தல் நலன், மகிழ்ச்சி, ஆக்கம் இவற்றைப் பெறக் குறிப் பிடத்தக்க உதவி செய்வதாயமையும்.

காலம் என்பது நாம் அனைவரும் சமமான அளவில் கொண்டிருக்கும் ஒன்றாகும். எந்த மனி தனுக்கும் தனிப்படையாக நாட்பொழுது நீடிக்கப் படுவதில்லை. எனவே, அதன் விலையுயர்ந்த நிமிடங் களைப் பயனற்ற பாழ்காரியங்களில் வீணே கழித்து விடாது நாம் கவனித்துக் கொள்ளவேண்டும். தன்னல நுகர்ச்சியிலும், இனிமை நாட்டத்திலும் காலத்தைக்

கழிப்பவன், விரைவில் முதுமைப் பருவத்தை எய்தி விடுகின்ருன். அவன் எதையும் சாதித்து நிறைவேற்று வதில்லே. வந்து போகின்ற நிமிடங்களைப் பயனுடைய நாட்டங்களால் நிறைவாக நிரப்புபவன் புகழிலும், ஞானத்திலும் முதுமையடைகின்ருன்; ஆக்கம் அவ னிடம் நிலைபெறு கொள்கின்றது. பாழ்படுத்தப் பட்ட பணத்தைத் திரும்பப் பெற்றுவிடலாம்; பாழ்படுத்தப் பட்ட நலத்தைத் திரும்பப் பெற்றுவிடலாம்; ஆனல் பாழ்படுத்தப்பட்ட காலத்தை என்றுமே திரும்பப் பெறமுடியாது.

"காலம் பொருளாகும்" என்பது ஒரு முது மொழி. அதேபோன்று, அதனைப் பயன்படுத்து கின்ற விதத்தைப் பொறுத்து அது நலம், வலிமை, திறமை, சான்ருண்மை, ஞானம் முதலியவையு மாகின்றது; அதைச் சரிவரப் பயன்படுத்த வேண்டு மெனின் வருகின்ற நிமிடங்களை நன்கு பயன் படுத்திக் கொள்ளவேண்டும்; ஏனெனின், ஒரு முறை அவை கடந்து சென்றுவிடின், என்றுமே அவற்றைத் திரும்ப வரவழைத்துக்கொள்ள வியலாது. நாட்பொழுதைப் பகுதிகளாகப் பிரித்துக்கொள்ள வேண்டும்; உழைப்பு, ஓய்வு, உணவு, பொழுதுபோக்கு ஒவ்வொன்றையும் குரித்த பொழுதில் செய்தாகவேண்டும்; ஆயத்தம் செய்வதற்கான பொழுதைத் தவிர்க்கவோ அன்றிப் புறக்கணிக்கவோ கூடாது. தனது பணிக்குத் தனது மனத்தை ஆயத்தம் செய்துகொள்வதற்காக நாட் பொழுதின் ஏதேனும் சிறுபகுதியைப் பயன் படுத்து வதின் மூலம் ஒரு மனிதன் எதைச் செய்வதெனினும் சரியே, அதை நன்முறையிலும், மிக வெற்றிகர மாகவும் செய்து முடிப்பான். காலையில் கடைசி

விநாடி வரையில் படுக்கையிலேயே புரண்டுவிட்டுக் காலையுணவைத் துவங்கும் நேரத்திற்குக் கண்விழிக்கும் மனிதனைக் காட்டிலும், சீர்தூக்கி ஆராய்ந்து வரு முன்னறியும் பொருட்டுச் சிந்திக்கவும், திட்டமிடவும் அதிகாலையில் துயிலெழும் மனிதனிடம், அவனது குறிப்பிட்ட முயற்சியில், மிக்க திறமையும், வெற்றியும் காணக் கிடக்கும். காலையுணவிற்கு முன்பு இவ்வகையில் செலவிடப்படுகின்ற ஒருமணி நேரம், ஒருவனுடைய முயற்சிகளைப் பயனுடையதாக்குவதில் மிகுந்த உதவியாயிருக்கும். மனத்தை அமைவுறுத்தித் தெளிவுடையதாக்கி ஒருவனின் ஆற்றல்களை மிகுந்த சத்தியும், பயனும் உடையனவாக்குதற்கு இது ஒரு கருவியாகும். காலையில் எட்டுமணிக்கு முன்பு பெறுகின்ற வெற்றியே சிறந்ததும், மிகுந்த நிலைபேறுடையதுமாகும். பிற சூழ்நிலைகள் அனைத்தும் சமமாயிருக்கின்ற நிலையில் ஆறுமணிக்குத் தனது உழைப்பில் ஈடுபடுகின்றவன் எட்டு மணிவரை படுக்கையிலே இருக்கின்ற மனிதனைவிட எப்போதும் நீண்ட தூரம் முன்னேறிவிடுவான். படுக்கைப் பிரியன் வாழ்வுப் பந்தயத்தில் தனக்குத் தான் பெரும் முட்டுக்கட்டை போட்டுக்கொள்பவனாகி விடுகின்றான். அதிகாலையில் துயிலெழுகின்ற போட்டியாளன் ஒவ்வொரு நாளும் இரண்டு அல்லது மூன்றுமணி நேரங்கள் முன்னரே உழைப்பைத் தொடங்குவதற்கு இடந் தந்துவிடுகின்றான். தனது பொழுதைப் பொறுத்துத் தனக்குத் தானே விதித்துக் கொண்ட அத்தகைய இடர்ப்பாட்டை வைத்துக்கொண்டு எவ்வாறு அவன் வெற்றியடைந்துவிடலாம் என நம்ப முடியும்? ஒவ்வொரு நாளும் இரண்டு அல்லது மூன்றுமணி நேரங்

கள் முன்னரே தொடங்கியதின் பயன் ஓராண்டு முடிவில் படிப்படியாகச் சேகரிக்கப்பட்ட விளைவுகளின் தொகுப்பாகிய வெற்றியின்பால் காணக் கிடக்கும். அவ்வாறெனின், இருபது ஆண்டுகள் முடிவில் இந்த இரு மனிதர்களின் முயற்சிகளுக் கிடையேயுள்ள வேறுபாடு எத்துணை யிருக்கும். படுக்கைப் பிரியனும் கூடக் கண் விழித்தெழுந்தபின்பு இழந்த பொழுதை ஈடு செய்தற் பொருட்டு எப் போதும் பரபரப்படைகின்றான்; அது மேலும் பொழுதை இழக்கும் நிலையிலேயே முடிகின்றது; ஏனெனின், பரபரப்பு எப்போதும் தான் குறிக் கொண்டதையே தோற்கடித்துவிடும். அதிகாலை துயிலெழுவதனால் தனது பொழுதைச் சிக்கனப் படுத்திக் கொள்பவன் பரபரப்படைய வேண்டிய தேவையேயில்லை; ஏனெனின், எப்போதும் அவன் குறித்த நேரத்திற்கு முன்பே ஆயத்தமாகி விடுகின்றான்; எப்போதும் அவன் தன் வேலையை நன்கு செய்து முடிக் கின்றான்; அவன் கைக்கொண்ட பணி எதுவாயினும் அதை அமைதியுடன் ஆழ்ந்து எண்ணி, கவனமுடன் நன் முறையில் செய்யவியலும்; ஏனெனின், அவ னுடைய நற் பழக்கம் நாள் முடிவில் மகிழ்ச்சி நிரம்பிய மனமெனுந் தோற்றத்திலும், திறமையுடன் வெற்றி கரமாகவும் செய்து முடிக்கப்பட்ட உழைப்பின் உருவ மெனும் பெரும் விளைவுகளிலும் தன்னை வெளிப் படுத்திவிடும்.

காலத்தைச் சிக்கனப் படுத்துவதிலுங்கூட ஒரு மனிதன் தன் வாழ்வினின்றும் நீக்க வேண்டிய காரியங்கள் பல இருக்கும்; அவன் ஆசை கொண்டு தான் கொண்டிருக்க வேண்டுமென்று விரும்புகின்ற

சில காரியங்களையும், நாட்டங்களையும் கூட வாழ்வின் முக்கியக் குறிக்கோளிற்காகத் தியாகம் செய்தாக வேண்டும். ஒருவனின் அன்றாட வாழ்வினின்றும் முக்கியமற்றவற்றை உற்றறிந்து ஒதுக்குதல் பெருஞ் சாதனைகள் அனைத்தின்கண்ணும் உயிர்நிலையான கூறாகும். மேன்மையுற்ற மனிதர் அனைவரும் சிக்கனத்தின் இப் பிரிவின்கண் திறமைசாலிகளாக இருக்கின்றனர்; அவர்களது மேன்மையைப் பெருக்குவதில் இது முக்கிய பங்கு கொள்கின்றது. மேலும், மனம், செயல்கள், பேச்சு ஆகியவற்றுள்ளும் புகுந்து அவற்றினின்றும் தேவையற்றவை, தடைவிதிப்பவை, குறிக் கொண்ட முடிவை யெய்த உடனிருந்து உதவாதவை இவற்றை நீக்குவது ஒருவனைச் சிக்கனமாகும். மடையரும், வெற்றி காணாத மக்களும் கவனமின்றிக் குறிக்கோளின்றிப் பேசுகின்றனர்; கவனமின்றியும், குறிக்கோளின்றியும் செயல் புரிகின்றனர். நல்லதோ, கெட்டதோ அன்றி இரண்டும் கெட்டதோவாக வழியில் எதிர்ப்படுகின்ற ஒவ்வொன்றும் தம் மனத்தில் தங்க இடந்தந்து விடுகின்றனர். உண்மையான செட்டுக்காரனின் மனம், வாழ்வெனும் வாணிபத்திற்குப் பயன்படுவன தவிர, பிற ஒவ்வொன்றும் நழுவிச் செல்ல விட்டுவிடுகின்ற சல்லடையாகும். மேலும், தேய்வையும், சத்தி பாழ்படுதலையும் வெகுவாகக் குறைக்கும் வண்ணம் அவன் தேவையான சொற்களை மட்டுமே கையாளுகின்றான்; தேவையான செயல்களை மட்டுமே செய்கின்றான்.

பொழுதோடு படுக்கச் சென்று பொழுதோடு விழித்தெழுந்து உழைக்கும் ஒவ்வொரு நிமிடத்தையும் பயன் நிறைந்த எண்ணத்தாலும், காரிய சித்தியுள்ள

செயலாலும் நிரப்புவது, இதுவே நேரத்தைப் பொறுத்த உண்மையான செட்டு.

நற்பழக்கங்களை உண்டுபண்ணிக் கொள்வதால் ஆற்றல் சிக்கனப் படுத்தப் படுகின்றது. பழிச் செயல்கள் அனைத்தும் ஆற்றலைக் கவனமின்றிச் செல விடுவதே யாகும். பேணிக் காத்துச் சரியான திசை களில் பயன்படுத்தினால் மனிதர் மாபெரும் வெற்றி யைப் பெறுவதை இயலுவதாக்கப் போதுமான ஆற்றல் சிந்தனையின்றித் தீய பழக்கங்களில் பாழ் படுத்தப் படுகின்றது. ஏற்கனவே எடுத்துக் காட்டப் பட்ட ஆறு முக்கிய காரியங்களில் சிக்கனம் கடைப் பிடிக்கப் பெற்றால், ஒருவனின் ஆற்றலைப் பேணிக் காப்பதில் பெருமளவு வேலை முடிந்துவிடும்; ஆனால், மனிதன் பின்னும் முன்னேற வேண்டும்; துன்னெறி வகைகள் அனைத்தையும் தவிர்ப்பதின் மூலம் தனது உயிர்ச் சத்தியைக் கவனமுடன் செட்டாக நடத்த வேண்டும்; இங்குத் துன்னெறி என்பது உடல் சார்ந்த இன்ப நுகர்ச்சிகள், தூய்மையின்மைகள் இவற்றின் வகைகள் அனைத்தையும் மட்டுமே குறிப்பதாகாது ஆனால், மனதை வெறுமையாக்கி, அதை எந்த முக்கியமான பணிக்கோ அன்றிப் பாராட்டத் தக்க சாதனைக்கோ தகுதியற்றதாக்கிவிடுகின்ற பரபரப்பு, கவலை, கிளர்ச்சி, சோர்வு, சினம், குறைகூறல், பொறாமை ஆகிய மனத் துன்னெறிகள் அனைத்தையுங் கூடக் குறிப்பதாகும். அவை மனச் சிதறலின் சாதாரணத் தோற்றங்களாகும். குணவியல்புச் சிறப் புள்ள மனிதன் அவற்றைத் தவிர்த்து வெற்றி காணு வது எவ்வாறு என்பதைக் கற்றுணர வேண்டும். மோசமான மனநிலை அடிக்கடி வந்துற்று வெறிகொள்

வதால் பாழ்படுத்தப்படுகின்ற ஆற்றலை அடக்கி யாண்டு நேர்பட இயக்குவித்தால், அது மனிதனுக்கு மனவலிமையும், குணவியல்புத் திட்பமும், சாதனைக் கான பெருஞ்சத்தியும் தரும். சினமிக்க மனிதன் தனது மனவாற்றல் சிதறியதால் வலுவிழந்தவனுக்கப்பட்ட வலிமையுடைய மனிதனேயாவான். தனது வலி மையை வெளிக்காட்ட அவனுக்குத் தன்னடக்கம் தேவைப்படுகின்றது. வாழ்வின் எத்துறையிலாயினுஞ் சரி, அமைதியான மனிதன் அவனைவிட எப்போதும் மேம்பட்டவனேயாவான்; வெற்றி, பிறரைக் குறித்த மதிப்பீடு இரண்டிலும் அவன் எப்போதும் முன்னவனை மிஞ்சிவிடுவான். எம்மனிதனுயினும் சரி, மனத்தின் தீய பழக்கங்களையும், தீய இயல்பு களையும் ஊட்டி வளர்க்கத் தன் ஆற்றல்களைச் சிதறடிக்க இடங்கொடுப்பவனுகை இருக்கவியலாது. தோற்றத்தில் எத்துணைதான் சிறிதாயிருப்பினும் ஒவ் வொரு தன்னெறியும் வாழ்வுப் போரில் அவனுக்கு எதிரிடையாகவே நின்று பொருதும். கேடுதரும் இன்ப நுகர்வு ஒவ்வொன்றும் ஏதேனும் ஒருவகைத் துன்பமாகவோ அன்றிக் குறைபாடாகவோ அவனி டமே திரும்பி வந்துவிடும். கலவரப்படவோ அன்றிக் கீழ்த்தரச் சார்புகளுக்குப் பரிந்து உதவவோ செய் கின்ற ஒவ்வொரு கணப்பொழுதும் அவனுடைய முன்னேற்றத்தை மேலும் கடினப் பாடுடையதாக்கி விடும்; அவன் அடையவேண்டுமென்று விரும்பிய உயர்ந்த வானுலகை எய்துவதினின்றும் அவனைப் பின்னிழுத்துப் பிடித்துக் கொள்ளும். நேர்மாருக, தனது ஆற்றல்களைச் செட்டுப் படுத்தித் தன் வாழ்வின் முக்கிய கடமையை நோக்கி அவற்றைத் திருப்பிவிடு

பவன் விரைவான முன்னேற்றமடைவான்; அவன் வெற்றியெனும் பொன்னகரத்தை யடைவதிலிருந்து அவனை எதுவும் தடுத்து நிறுத்த வியலாது.

சிக்கனம் என்பது வெறும் பணச் சேமிப்பு மட்டுமின்றி ஆழ்ந்த கருத்துடையதும் நெடுந்தூரம் எட்டக் கூடியதுமான ஒன்றாகும் என்பதை நாம் காணலாம் நமது இயல்பின் ஒவ்வொரு பகுதியையும், நமது வாழ்வின் ஒவ்வொரு பருவத்தையும் அது தொடுகின்றது. "சிறு நாணயங்களைக் கவனித்துக் கொண்டால் போதும், பெரு நாணயங்கள் தம்மைத்தாம் கவனித்துக்கொள்ளும்" என்னும் முதுமொழியை ஒரு நீதிக் கதையாகக் கொள்ளலாம்; ஏனெனின், மனிதரின் கீழ்த்தர இச்சைகளை இயற்கை யாற்றல் என்று கருதினால், அவை தம்மளவில் தீயனவல்ல; அந்த ஆற்றலைத் தவறாகப் பயன்படுத்துவதே தீயதாகும்; ஆனால், இச்சைப் போக்கான இந்த ஆற்றலைக் கவனித்துச் சேகரித்து உருமாற்றிவிட்டால் அது குணவியல்பின் சத்தியாகத் திரும்பத் தோன்றிவிடும். இந்த மதிப்பு வாய்ந்த ஆற்றலை, துன்னெறி நாட்டத்திற்காகப் பாழ்படுத்துவதென்பது சிறு நாணயத்தைப் பாழ்படுத்திப் பெரு நாணயத்தை இழந்து விடுவதற்கொப்பாகும்; ஆனால் நன்முறையில் பயன்படுத்துவதற்காக அதைக் கவனித்துக் கொள்வதென்பது இச்சைகளென்னும் சிறு நாணயத்தைச் சேகரித்து வைத்து நன்மையெனும் தங்கப் பெரு நாணயங்களைப் பெறுவதற்கேயாகும். எனவே, கீழ்த்தர ஆற்றல்களைக் கவனித்துக் கொண்டால் போதுமானது; மிக உயர்ந்த பேறுகள் தம்மைத் தாமே கவனித்துக் கொள்ளும்.

சிக்கனம் எனும் தூண் உறுதியாகக் கட்டப் பெற்றிருப்பின், அது பெருமளவும் இந்த நான்கு குணங்களைக் கொண்டிருப்பதைக் காணலாம்.

1. மட்டு 3. வளப்பம்
2. திறப்பாடு 4. உற்பவம்

மட்டு சிக்கனத்தின் வலுமிக்க உட்கருவாகும். அது காரியங்கள் அனைத்திலும் மையப் பாதையைக் கண்டு கொள்வதன் மூலம் புறக் கோடிகளைத் தவிர்த்து விடுகின்றது. தேவையற்றதிலும், கேடு பயப்பதிலுமிருந்து விலகி நிற்பதிலும் அதனியல்பு அமைந்து கிடக்கின்றது. தீயனவாய் இருப்பவற்றில் மட்டு என்ற ஒரு காரியம் இருக்கவே முடியாது; ஏனெனின், அது மட்டு மீறியதாகவே இருக்கும். உண்மையான மட்டு தீயவையினின்றும் விலகி நிற்கின்றது. நம் கைகளை நெருப்பினுள் காட்டுவது நெருப்பை நாம் மட்டாகப் பயன் படுத்துவதாகாது. பாதுகாப்பான தூரத்திற் கப்பாலிருந்து கொண்டு சூடேற்றிக்கொள்வதே அதை மட்டாகப் பயன்படுத்துவதாகும். மனிதன் அதைத் தொடுவதாயிருப்பினும் தீமை அவனை எரித்துவிடக் கூடிய ஒரு தீயேயாகும். கேடு பயக்கும் சொகுசினைத் துண்டாகத் தனியாகவிட்டு விடுவதே சிறப்பு. புகை பிடித்தல், பொடிபோடுதல், மதுவருந்தல், சூதாடல் மற்றும் இதுபோன்ற சாதாரணத் துன்னெறிகள் ஆயிரக் கணக்கானவர்களை நலக்குறைவு, துன்பம், தோல்வி இவற்றிற்கு இழுத்துத் தள்ளியிருப்பினும், நலம், இன்பம், வெற்றி இவற்றையடைய எவருக்கும் என்றும் உதவி செய்ததில்லை. திறமைகளும் வாய்ப்புக் களும் சமமாயிருக்கின்ற இருவரிடையே, அவற்றைத் தவிர்த்து நடக்கும் மனிதன் அவற்றை நாடியோடும்

மனிதனைவிட எப்போதும் முன்னேறியே யிருப்பான். நலமுடன் மகிழ்ச்சியோடு பல்லாண்டு வாழ்ந்த மக்கள் தம் பழக்கங்களில் எப்போதும் மட்டாகவும், செட்டாகவுமே இருந்து வந்துள்ளனர். வாழ்வுச் சத்திகள் மட்டால் பாதுகாக்கப்படுகின்றன; மிதமிஞ்சுதலால் அவை அழிக்கப்படுகின்றன. மேலும், மட்டைத் தம் எண்ணங்கள் பாலும் எடுத்துச் செல்லும் மனிதர் தம் இச்சைகளையும், உணர்ச்சிகளையும் தணிவுறுத்தி, நற்பயன் விளைக்காத புறக்கோடிகள், நோய்த்தன்மை கொண்ட உணர்ச்சிகள், மெய்ப்பாடுகள் இவையனைத்தையும் தவிர்த்து அதன் மூலம் உயர்ந்த மகிழ்ச்சியும், சத்தியும் பெறுகின்றனர். மட்டு மீறியவர்கள் தம் மடமையால் தம்மைத்தாமே அழித்துக் கொள்கின்றனர். அவர்கள் தம் ஆற்றல்களை வலுவிழக்கச் செய்து, தம் திறமைகளைக் குன்றச் செய்துவிடுகின்றனர். நிலைபேறு கொள்ளும் வெற்றியைப் பெறுதற்குப் பதிலாக, கூடிய அளவில் நிலைபேறற்ற, உறுதியற்ற ஆக்கத்தையே அடைகின்றனர்.

ஒருவனின் வலிமைகளையும், சத்திகளையும் சரிவரப் பேணிக் காப்பதினின்றுமே திறப்பாடு தோன்றுகின்றது. திறமை யனைத்தும் ஒரு முகப்படுத்தப்பட்ட ஆற்றலைப் பயன் படுத்துவதேயாகும். சிறப்புத் திறமையாகவும், தனித்திறமையாகவும் இருக்கின்ற மேம்பட்ட திறமை ஒருமுகப்படுத்தப்பட்ட வலிமையின் உயர்ந்த நிலையாகும். மனிதர் தாம் நாட்டங்கொள்கின்ற ஒன்றின் பால் எப்போதும் திறமையுடையவராகவே இருக்கின்றனர்; ஏனெனின், மனம் ஏறத்தாழ இடையறுது அதைச் சுற்றிய வண்ணமாகவே இருக்கின்றது. எண்ணத்தைப் புதுப்புனைவாகவும், செயலாகவும் உரு

மாற்றுகின்ற அந்த மனச் சிக்கனத்தின் விளைவே, திறப்பாடாகும். திறப்பாடின்றி ஆக்கம் இருக்கவே முடியாது; ஒருவனின் ஆக்கம் அவனுடைய திறமையின் அளவைப் பொறுத்தே அமைந்திருக்கும். திறப்பாடில்லாதோர், இயற்கையான தேர்வு முறையின்மூலம், குறைந்த ஊதியம் பெறுவோர் அன்றி வேலையற்ரோர் இவர்களின் வரிசையில் தமக்கொத்த இடங்களில் அமைவுற்று விடுகின்றனர்; ஏனெனின், தன்னுடைய வேலையைச் சரிவரச் செய்யவியலாத - செய்யத் தலைப்படாத ஒரு மனிதனை யாரே பணிக்கமர்த்துவர்? அத்தகு மனிதனை இரக்கச் சிந்தையால் எவரேனும் பணிமுதல்வர் சிற்சில சமயங்களில் வைத்துக்கொள்ளலாம். ஆனல், இது மிகவும் அரிதானது; ஏனெனின், வாணிப நிலையங்கள், அலுவலகங்கள், குடும்பங்கள் ஒழுங்கமைந்த செயல்முறையுடைய இடங்கள் ஆகிய அனைத்தும் ஈகைக்கான நிலையங்களல்ல; ஆனல், அவற்றின் தனித்தனி உறுப்பினர்களின் தகுதி, திறப்பாடு இவற்ருல் நிலைத்து நிற்கவோ அன்றி மடியவோ செய்கின்ற தொழில் நிறுவனங்களாகும்.

அமைந்தாய்வதிலும், கவனமுடனிருத்தலிலுமே தேர்ச்சி பெறப்படுகின்றது. குறிக்கோளற்றவரும், கவனமற்றவருமாய மக்கள் வழக்கமாக வேலையில்லாதாராகவே யிருப்பர்; தெருக்கோடியில் சோம்பித் திரிவோரைக் காணலாம். மிகச் சிறிய காரியத்தைக்கூட அவர்களால் சரிவரச்செய்ய முடிவதில்லை. ஏனெனின், சிந்தனைக்கும், கவனத்திற்கும் அவர்கள் தம் மனத்தைத் தூண்டுவதே யில்லை. அண்மையில், எனக்கு அறிமுகமானவர் ஒருவர் தம் பலகணிகளைத் துப்புரவு செய்யக் காலாடியொருவனை வேலைக்கமர்த்தி

யிருந்தார். ஆனுல், அம்மனிதன் அத்துணை நெடுங் காலம் உழைப்பு, ஒழுங்கமைதியுடைய சிந்தனை இவற்றைத் தவிர்த்து விட்டதன் விளைவாக, அவ்விரண்டையும் செய்யத் தகுதியற்றவனுகவே மாறிவிட்டிருந்தான்; ஒரு பலகணியைக்கூட அவனுல் துப்புரவு செய்ய இயலவில்லை. எவ்வாறு செய்யவேண்டும் என்று விளக்கிக் காட்டியும்கூட, கூறப்பட்ட எளிய போதனைகளையும் அவனுல் பின்பற்ற முடியவில்லை. மிகச்சிறிய காரியமாயினும் செயலிலிடுபடும்போது ஓரளவு திறமை தேவைப்படுகின்றது என்பதை விளக்கும் நிகழ்ச்சியாகும் இது. ஒருவன் தன் கூட்டாளிகளின் மத்தியில் வகிக்கின்ற இடத்தைத் திறப்பாடே பெரிதும் முடிவு செய்கின்றது; மிகுதியான சத்திகள் வளர வளர, அதுவே அவனைப் படிப்படியாக உயர்ந்த நிலைகளை யெய்தும் வழிகாட்டுகின்றது. நல்ல தொழிலாளி தன் கருவிகளைக் கொண்டு திறமையுடையவனுக இருக்கின்ருன்; அதேபோது, நல்ல மனிதன் தன் சிந்தனை கொண்டு திறமையுடையவனுக இருக்கின்ருன். ஒண்மையே திறமையின் மேன்மையான வடிவம். உளச்சார்பு தொடக்க ஒண்மை. மிகச்சிறிய காரியமுட்பட ஒவ்வொரு காரியத்தையும் செய்து முடிக்க ஒரே நேர்வழியும், ஆயிரம் தவருன வழிகளும் உண்டு. அந்த ஒரே நேர் வழியைக் கண்டுபிடித்து அதன்வழி யொழுகுவதிலேயே திறமை அடங்கியிருக்கின்றது. அந்த ஆயிரம் தவருன வழிகளின் நடுவே திறப்பாடற்றவன் குழப்பமுற்றுக் குளறுபடி செய்வதோடு நேரான வழியைச் சுட்டிக் காட்டியும் கூட அதைக் கைக்கொண்டொழுகுவதில்லை. சில வேளைகளில் அவர்கள் இவ்வாறு செய்துவிடக் காரணம்

என்னவெனின், தமக்கு எல்லாம் தெரியுமென அவர்கள் அறியாமையால் எண்ணுகின்றனர்; அவ்வாறு எண்ணுவதால், ஒரு பலகணியைத் துப்புரவு செய்வதோ அன்றித் தரையைத் துடைப்பதோ எவ்வாறு என்பதைத் தெரிந்து கொள்வதாயினும் கூட அதனையறிந்து கொள்வது இயலாது போய்விடுகின்ற ஒரு நிலையில் தம்மை வைத்துக் கொள்பவராகிவிடுகின்றனர். நிதானமின்மையும், திறப்பாடின்மையும் மிகவும் சாதாரணமேயாகும். நிதானமும், திறப்பாடும் கொண்ட மக்கட்கு உலகில் பெருமளவு வாய்ப்பிருக்கின்றது. சிறந்த வேலைப்பாட்டைப் பெறுவது எத்துணைக் கடினமானது என்பதைத் தொழில் நடத்தும் பணிமுதல்வர்கள் அறிவர். நல்ல தொழிலாளி தன்னுடைய கருவிகளைக் கொண்டோ அன்றிச் செயலைக் கொண்டோ தனது திறமையைக் கையாள ஓரிடத்தை எப்போதும் கண்டு பிடித்தே தீருவான்.

வளப்பம் திறப்பாட்டின் விளைவாகும். அது ஆக்கத்தின் ஒரு முக்கிய மூலக் கூறுகும்; ஏனெனின், வளப்பமுடைய மனிதன் என்றுமே குழப்பமடைவதில்லை. அவனுக்குப் பல வீழ்ச்சிகள் ஏற்படலாம்; ஆனல், அவன் எப்போதும் சந்தர்ப்பத்தைச் சமாளிப்பவனுகவு மிருப்பான்; வீழ்ந்த மாத்திரத்திலேயே தன் கால்களூன்றி எழுந்து விடுவான். ஆற்றலைப் பேணிக் காப்பதிலேயே வளப்பத்தின் அடியாதாரக் காரணம் அமைந்து கிடக்கின்றது. அது ஆற்றல் உருமாறப் பெற்றதேயாகும். ஒரு மனிதன் தனது ஆற்றலை வெறுமையாக்குகின்ற சில மனத் துன்னெறிகளையோ அன்றி உடல் துன்னெறிகளையோ தவிர்த்து விடுகையில், அவ்வாறு பேணிக் காக்கப்படுகின்ற

ஆற்றல் என்னவாகின்றது? அது அழிக்கப்படவுமில்லை, இழக்கப்படவுமில்லை; ஏனெனின், ஆற்றல் அழிக்கப் படுவதுமில்லை அன்றி இழக்கப்படுவதுமில்லை. அது உற்பத்தி யாற்றலாகவே உருமாறுகின்றது. பயனுடைய சிந்தனை எனும் வடிவத்தில் அது திரும்பத் தோன்றுகின்றது. அறநெறியுள்ள மனிதன் மறநெறியுள்ள மனிதனைவிட மிகுதியான வெற்றி அடைபவனாகவே இருக்கின்றான்; ஏனெனின், அவனிடம் வளப்பங்கள் கிளைத்து நிற்கின்றன. சேகரிக்கப்பட்ட ஆற்றல் செழித்திருக்க அவனுடைய மனப்பாங்கு முழுவதும் உயிர்ப்புடனும், ஊக்கத்துடனு மிருக்கின்றது. துன்னெறி கொண்ட மனிதன் பயனற்ற நுகர்ச்சிகளில் பாழ்படுத்துவதை நன்னெறிகொண்ட மனிதன் பயனுடைய உழைப்பில் செலவிடுகின்றான். விலங்கினத் துன்னெறி எனும் பழைய உலகினின்றும் தன்னைத் தனித்துப் பிரித்துவிடுகின்ற மனிதனுக்குக் கண்ணைக் கவரும் நாட்டங்கள், தூய்மையான களிப்புக்கள் அனைத்தும் செழித்திருக்கின்ற ஒரு புதிய வாழ்வும், புதிய உலகமும் திறக்கப்படுகின்றன; அவனகத்து நல்லுருப் பெற்றுவிடுகின்ற வளப்பங்கள் அவனுக்குரிய இடத்தை உறுதியாக்கிவிடும். பயனற்ற விதைகள் மண்ணிலேயே மறைந்துவிடுகின்றன; இயற்கையின் பயனுடைச் செட்டமைப்பில் அதற்கு இடமேயில்லை. பயன்படா மனங்கள் வாழ்வுப் போராட்டத்தில் அமிழ்ந்து விடுகின்றன. மனித சமூகம் நல்லோர்க்கே வாய்ப்பளிக்கின்றது; துன்னெறி தோற்றுவிக்கும் வெறுமைக்கு அங்கு இடமேயில்லை. ஆனால், பயனற்ற மனமும் முடிவின்றி மூழ்கி விடுவதில்லை. அது

விருப்பங் கொண்டால் பயனுடையதாக மாறித் தானிழந்ததைத் திரும்பப் பெற்றுவிடலாம். இயற்கையின் (உளதாந் தன்மையின்) இயல்புப்படி, முன்னேற்றத்தின் நிலையான விதியின்படி, துன்னெறி கொண்ட மனிதன் வீழ்ந்தேயாக வேண்டும்; ஆனால், வீழ்ந்த பின்பு அவன் திரும்ப எழுந்துவிடலாம். அவன் மறநெறியிலிருந்து அறநெறிக்கு மாறித் தன் மதிப்புடனும், தற்பாதுகாப்புடனும் தனது வளப்பங்களின்மீது நிலைபேறு கொள்ளலாம்.

வளப்பமுள்ள மனிதர் புதியது புனைகின்றனர், கண்டுபிடிக்கின்றனர், தொடங்கி வைக்கின்றனர். அவர்கள் தோல்வியடைய வியலாது; ஏனெனின், அவர்கள் முன்னேற்ற ஓட்டத்தில் இருக்கின்றனர். அவர்கள் புதுத் திட்டங்கள், புது வழிவகைகள், புது நம்பிக்கைகள் நிரம்பியவர்களா யிருக்கின்றனர்; அதன் காரணமாக அவர்கள் வாழ்வு அத்துணையளவு நிறைவும், செழிப்பும் கொண்டதா யிருக்கின்றது. அவர்கள் எளிதில் வளையும் உள்ளம் படைத்த மனிதர். மனிதன் தன் வாணிபத்தை, தன் உழைப்பை, தன் வழிவகைளைச் செம்மையானதாக்கத் தவறிவிடுவானெனின், முன்னேற்றக் கோட்டினின்றும் புறம் வீழ்ந்தவனாகி விடுகின்றான்; தோல்வியைத் துவங்கிவிடுகின்றான். வயது முதிர்ந்த மனிதனின் உடலைப்போன்று அவனுள்ளம் விறைப்பும், மந்தமும் கொண்டதாக மாறிவிடுகின்றது; ஆகவே, வளப்பமுற்ற மனங்களின் அதிவேகக் கருத்துக்கள், திட்டங்கள் இவற்றுடன் அவன் சமமாக முன்னேறத் தவறிவிடுகின்றான். வளப்பமுற்ற மனம் என்றுமே வற்றாததும், புத்துயிர் தருவதும், வரட்சியான வேளைகளில் புதிய ஊக்கம்

ஊட்டுவதுமான நிதியைப் போன்றதாகும். வளப்பம் கொண்ட மனிதர் புதுக் கருத்துக்கள்கொண்ட மனிதராவர்; பிறர் மங்கி மறைந்து போகின்ற வேளையில் புதுக் கருத்துக்கள்கொண்ட மனிதர் செழிப்படைகின்றனர்.

வளப்பம் பக்குவமாகி நிறைவு நிலையடைதலே உற்பவமாகும். உற்பவம் எங்குளதோ அங்கே தனித்திறமையு மிருக்கின்றது. தனித்திறமை படைத்த மனிதரே உலகின் ஒளிகளாவர். மனிதன் எந்த வேலையைச் செய்வதெனினும் சரியே, அவன் தன் சொந்த வளப்பங்களைக் கொண்டே அதைச் செய்ய வேண்டும். பிறரிடமிருந்து கற்றுக் கொள்கின்ற போது, அவன் அடிமைப் பான்மையில் அவர்களைப் போலப் பாவனை செய்தல் கூடாது; ஆனால் தனது வேலையில் உள்ளார்ந்து ஈடுபட்டு அதைப் புதியதாகவும், உற்பவமானதாகவும் ஆக்கிவிடவேண்டும். உற்பவ மனிதர் உலகினரின் காதினைக் கவர்ந்துவிடுகின்றனர். அவர்கள் முதன் முதலில் புறக்கணிக்கப் படலாம்; ஆனால், இறுதியில் அவர்கள் ஒப்புக் கொள்ளப்பட்டு மனித இனத்தின் இலக்குகளாகி விடுகின்றனர். மனிதன் உற்பவத் திறமையை ஒரு முறை பெற்றுவிட்டானெனின், தனது குறிப்பிட்ட துறையின் அறிவிலும், திறமையிலும் மக்களிடையே ஒரு தலைவராகத் தன்னிடத்தைப் பெற்றுவிடுகின்றான். ஆனால், உற்பவத்தைப் புகுத்தவியலாது; அதை வளரச் செய்யவே இயலும்: ஒருவனின் மனச் சத்திகளை நிறைவாகவும், நேராகவும் பயன் படுத்துவதால் திறமையின் அளவு கோலில் ஏற்றம் பெற்று, மேம்பாட்டிலிருந்து மேம்பாட்டிற்குச் செல்லுவ

தாலேயே அதை வளர்க்கமுடியும். மனிதன் தன்னைத் தானே தன் வேலைக்கென ஒப்படைத்துவிடட்டும்; அவ்வாறு ஒப்படைத்த பின்பு அதன்மீது தன் ஆற்றல்கள் அனைத்தையும் ஒப்படைத்துவிடட்டும்; உலகம் தன் வலிமை மிக்க மக்களுள் ஒருவனாக அவனை வாழ்த்தும் நாள் வந்தே தீரும்; பல ஆண்டுகள் விடா முயற்சியுடன் உழைத்த பின்பு "நான் ஒரு தனித்திறமை படைத்தவனாகப் போகின்றேன்" என்று விதந்துரைத்த பால்ஸாக் போன்று, தானும் உற்பவ மனங்கள் குழுவுடன், அஃதாவது மனித இனத்தைப் புதிய, உயர்ந்த, மிகுநலஞ்சூழ் வழிகளில் நெறிப் படுத்துகின்ற தெய்வங்களுடன் சேர்ந்து விட்டான் என்பதைக் களிப்போடு கடைசியில் கண்டு கொள்வான்.

எனவே, இரண்டாவது ஆதாரத்தின் கலப்புச் சேர்க்கை என்னவென்பது எடுத்துக் கூறப்பட்டது. தனது மன ஆற்றல்களைத் திறமையுடன் கையாள ஆயத்தமாயிருக்கின்ற தொழிலாளியையே அதன் கட்டிடம் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றது.

---

## 3. சால்பு

ஆக்கத்தை மலிவாகப் பேரம் செய்து கொள்ள முடியாது. கூரிய அறிவு கொண்ட உழைப்பினுல் மட்டு மன்றி ஒழுக்கச் சத்தியையும் கொண்டே அதை விலைக்கு வாங்கியாக வேண்டும். நீர்க்குமிழி நீடித்து நிலைபெற முடியாதவாறு போன்று, கபடன் செழிக்கவும் முடியாது. பணத்தைப் பெறுவதற்கு ஆர்வத் துடிப்புடன் அவன் பாய்கின்ருன், பின்பு படுத்து விடுகின்ருன். எத்துமானத்தால் என்றுமே எதையும் பெற முடிந்ததில்லை; என்றுமே பெறவும் முடியாது. அவ்வாறு அடையப் பெற்றவை எதுவாயினும், அது மிகுதியான வட்டியுடன் திரும்பத் தரப்படவேண்டிய நிலையில் குறிப்பிட்ட காலத்திற்குப் பலவந்தமாகப் பிடித்து வைத்துக் கொள்ளப்படுவதே யாகும். ஆனால், எத்துமானம் தீவினையஞ்சாத எத்தனிடம் மட்டுமே அடைபட்டுக் கிடக்கவில்லை. அவர்கள் அறிந்திருப்பினும் சரி, இல்லையெனினும் சரி, சரிசமமான ஒன்றைப் பதிலுக்குத் தராமல் பணத்தைப் பெறுவோர் அல்லது பெற முயல்வோர் அனைவரும் எத்துமானத்தைக் கையாளுபவரேயாவர். பெறுதற்கான உழைப்பை மேற்கொள்ளாது பணத்தைப் பெறுவது எவ்வாறு என்று பற்ருர்வமுடன் திட்டமிடும் மனிதர் எத்தர்களேயாவர்; இவர்கள் மனத்தால் திருடனேடும், மோசக்காரனேடும் நெருங்கிய நேசம் கொண்டவராகி விடுகின்றனர்; உடனேயோ அன்றிப் பின்போ இவர்கள் அவர்களின் வயப்பட்டுத் தம் கைமுதலை இழக்கும்படி அவர்கள் செய்து விடுகின்றனர். நேர்மையான கைம்மாறு செய்யாது கவர்ந்து

கொள்ள வேண்டுமென்ற விருப்பத்தை (அஃதாவது சட்ட மீறிய நிலையில்) அதன் எல்லைக்கே எடுத்துச் செல்லுகின்ற மனிதரையன்றி யாரே திருடர்? ஆக்கத்தின் மீது நாட்டங் கொள்கின்ற மனிதன் பருப்பொருளியலிலாயினுஞ் சரி, அன்றி மனவியலிலாயினுஞ் சரி தனது கொடுக்கல் வாங்கல் அனைத்திலும் தான் பெறுபவற்றிற்கு ஈடானதை எவ்வாறு பதிலுக்குக் கொடுப்பது என்பதைக் கற்றுக் கொள்ள வேண்டும். நேர்மையான வாணிபம் அனைத்திலும் இதுவே பெரிய அடியாதார நியதியாகும்; அதேபோது ஆன்மிகக் காரியங்களில் இது பிறர் நமக்குச் செய்ய வேண்டுமென்று நாம் எதிர்பார்ப்பதை நாம் பிறர்க்குச் செய்வதாகும்; பிரபஞ்சச் சத்திகளுடன் பொருத்திப் பார்க்கையில் "செயலும் செயல் விளைவும் சமமே யாகும்" என்னும் வாய்பாடாக விஞ்ஞானப் பாங்கில் கூறப்படுகின்றது.

மனித வாழ்வு பரிமாற்றத்திற் குட்படுவதே யன்றிப் பறித்தெடுத்துக் கொள்ளப்படுவதன்று; பிறர் அனைவரையும் தனது முறைப்படியான இரையாகக் கருதுகின்ற மனிதன், தான் ஆக்கப் பாதையினின்றும் மிகவும் அப்பாற்பட்டு அழிவென்னும் பாலைவனத்தில் முடங்கிக்கிடப்பதை விரைவில் கண்டு கொள்வான். மேலும், நாணயமான மனிதருடன் வெற்றிகரமாகக் கொண்டுசெலுத்த முடியாத அளவில் பரிணும முறையில் மிகவும் பின்தங்கி விடுகின்முன். தகுதியுடையோர், சிறந்தோர் எப்போதும் தொடர்ந்து வாழ்கின்றனர்; எனவே, இவன் உறு மோசமானவனுக இருப்பதால் தொடர்ந்து நடத்த முடிவதில்லை. இவன் காலத்தால் மாறிக் கொள்ள

வில்லையெனின், இவனுடைய முடிவு சிறைச்சாலை யாகவோ, அருவருப்பான குடிசையாகவோ அன்றி ஒதுக்கப்பட்ட போக்கிரிகளின் இடமாகவோ இருக்கும். அவனுடைய முயற்சிகள் அழிவுச் சார்புடை-யனவே யன்றி ஆக்கச் சார்புடையனவல்ல; இவன் அதனால் தன்னைத் தான் அழித்துக் கொள்கின்றான்.

உலகமெங்கணுமுள்ள கிறித்துவர்கள் மகமதுவைக் கபடன் எனக் கருதிய காலத்து, "கபடன் ஒரு சமயத்தையே தோற்றுவித்திருக்கின்றான், கபடன் ஒரு செங்கல் வீடுகூடக் கட்டவியலாது" என்று மகமதுவைக் குறித்துக் கார்லைல் கூறினார். கபடன், பொய்யன், ஏமாற்றுக்காரன், அஃதாவது நாணயமற்ற மனிதன் எதையும் கட்டவியலாது; ஏனெனின், கட்டுமானத்திற்கு வேண்டிய கருவிகளோ அன்றிச் செய்முதற் பொருளோ அவனிடம் கிடையாது. ஒரு சமயத்தைத் தோற்றுவிக்கவோ அன்றி ஒரு செங்கல் வீட்டைக் கட்டவோ இயலாதவாறு போன்று ஒரு வாணிபம், ஒரு குணவியல்பு, ஒரு வாழ்க்கை நெறி, ஒரு வெற்றி எதையுமே அவன் உருவாக்க முடியாது. அவன் உருவாக்க முடிவதில்லை என்பதோடு மட்டுமல்ல, பிறர் உருவாக்கி யிருப்பனவற்றிற்குத் தீங்கிழைத்து வீழ்த்துவதிலேயே அவனுடைய ஆற்றல்கள் அனைத்தும் திருப்பப்படுகின்றன; ஆனால், அது இயலாதுபோவதால் அவன் தன்னைத்தான் வீழ்ச்சியடையச் செய்துகொள்கின்றான்.

சால்பின்றேல் ஆற்றலும், சிக்கனமும் இறுதியில் தோல்வியுற்றுவிடும்; ஆனால், சால்பின் சார்பிருப்பின் அவற்றின் வலிமை பெரிதும் பெருகும். ஒழுக்கக்

கூறு முக்கிய பங்கெடுத்துக் கொள்ளாத தறுவாயே வாழ்வில் இல்லை. மிகச் சிறப்பான சால்பு எங்கிருப் பினும் தன்னை யுணர்த்தி நிற்பதோடு கொடுக்கல் வாங்கல்கள் அனைத்திலும் தனது முத்திரையைப் பொறித்துவிடும்; வியப்பிற்குரிய அவனுடைய இசைவுச் சீராலும், நிலையமைதியாலும், வெல்ல முடியாத வலிமையாலுமே அது அவ்வாறு செய் கின்றது. ஏனெனின், சால்புடைய மனிதன் காரியங் களின் நிலைபேறுகொண்ட விதிகளின் வழியே நடப் பவனுயிருக்கின்றான்; அவ்விதிகளாவது மனித சமூகம் நிலைபேறு கொண்டுள்ள அடியாதார நியதிகள் மட்டு மன்று, இப் பரந்த பிரபஞ்சத்தையே ஒன்ருக இணைத் திருக்கும் விதிகள். இவற்றை யாரே வெறுமை யாக்கிவிட முடியும்? அவன் என்றுமோடும் ஊற்றுக் களால் ஊட்டுவிக்கப்படுகின்ற வேர்களைக் கொண்ட வலிமையான மரத்தைப் போன்றவனுகும்; எந்தச் சூருவளியும் அதைச் சாய்த்து வீழ்த்திவிட முடியாது.

சால்பு முழுமைநிலை யெய்தியதாகவும், வலிமை உடையதாகவும் இருக்கவேண்டுமெனின், அது முழு மனிதனையும் தழுவி நிற்க வேண்டும்; அது அவ னுடைய வாழ்வின் நுணுக்கங்கள் அனைத்திலும் பரவி நிற்கவேண்டும்; நெறிப் பிறழ்ச்சிக்கு விட்டுக் கொடுக் கத் தூண்டும் அவா வெழுச்சிகள் அனைத்தையும் எதிர்த்துத் தடை செய்யுமளவிற்கு அது அத்துணை ஆழப் பதிந்ததாகவும், நிலையானதாகவுமிருக்க வேண் டும். ஒரு நிகழ்ச்சியில் தோல்வியுறுவது என்பது அனைத்திலும் தோல்வியுற்று விடுவதேயாகும்; எத் துணை தேவையானதாகவும், மிகச் சிறிய காரியமாகவும் தோற்றமளிப்பினும் நெருக்கடியானபோது பொய்ம்

மைக்கு விட்டுக் கொடுக்க ஒப்புக்கொள்வது, சால்பு எனும் கேடயத்தை வீசி எறிந்து விட்டுத் தீமையின் தாக்குதல்களுக்குத் தன்னைத் திறந்து காட்டுவதே யாகும்.

தனது பணி முதல்வரின் நேரடிப் பார்வையில் உழைப்பது போலவே அவர் இல்லாதபோதும் அத்துணை கவனமுடனும் மனச் சான்றிற்குக் கட்டுப் பட்டும் உழைக்கும் மனிதன் தனது கீழான நிலையில் நெடுநாள் இருக்கமாட்டான். தனது கடமையில், தனது வாழ்வின் நுணுக்கங்களை நிறைவேற்றுவதில் அவன் காட்டுகின்ற அத்தகைய சால்பு, விரைவில் ஆக்கத்தின் செழிப்பான பகுதிகளுக்கு அவனை யழைத்துச் சென்றுவிடும்.

அதற்கு மாருக, தனது பணி முதல்வர் அண் மையில் இல்லாதபோது தன் உழைப்பைப் புறக் கணிக்கத் தயங்காதவனுய், அதன் காரணமாகத் தனக்கு ஊதியம் தரப்படுகின்ற தனது பொழுதையும், உழைப்பையும் பணி முதல்வரிடமிருந்து பறித்துக் கொள்ளுபவனுமாய்க் கடமையில் தவறுபவன் விரை வில் வேலையின்மையின் தரிசான பகுதிகளுக்கு வந்து சேருவதுடன், தேவைப்படுகின்ற உழைப்பிற்காகப் பயனற்றுப் பார்த்திருப்பான்.

சால்பின்கண் ஆழ்ந்து வேரூன்ருத மனிதன் தனது நல்வாய்ப்புக்களுக்காகவும், ஆக்கத்திற்காகவும் ஒரு பொய்யைப் பேசுவதோ அன்றி நேர்மையிலாத ஒரு செயலைச் செய்வதோ தேவையெனத் தோன்று கின்ற காலமும் வந்துறும்; (நான் கூறுவது, இந்த நியதியின்கண் ஆழ்ந்து வேரூன்ருத மனிதனையே

யாகும்; ஏனெனின், பொய்யும், புரட்டும் எந்தச் சூழ்நிலையிலும் வேண்டப்படுவனவல்ல என்பதை நிலை யானதும், அறிவொளி யேற்றப்பட்டதுமான சால் புடைய மனிதன் அறிவான்; எனவே, இக்குறிப் பிட்ட காரியத்தில் அவன் ஆவல் கொள்ளத் தேவையு மில்லை; அவனுக்கு அவாவூட்டவும் இயலாது.) ஆனால், அவ்வாறு அவாவூட்டப் பெற்றுவிடுகின்ற ஒருவன் உறுதியற்றதும், திகைப்புற்றதுமான வேளையில் தன்னகத்திருந்தே எழுகின்ற பொய்ம்மை யின் நுட்பமான சூழ்ச்சித் திறத்தை உதறியெறிந்து விட முடியவேண்டும்; நடத்தைப் பிசகில் அமிழ்ந்து விடுவதைக் காட்டிலும் இழந்துவிடவும், இன்னல் படவும் சித்தமாயிருக்கின்ற வகையில் நியதியின் வழியில் உறுதியாக நிற்கவேண்டும். இந்த ஒழுக்க நெறியினைக் குறித்து இவ்வழியில்தான் ஒருவன் அறி வொளியூட்டப் பெற்றவனாகவும், சால்பு ஆதாயத் திற்கும், இன்பத்திற்கும் வழிகாட்டுகின்றதேயன்றி இழப்பிற்கும், துன்பத்திற்கு மன்று எனும் உண் மையைக் கண்டுகொள்ளவும் முடியும்; நாணயமும், இழப்பும் காரண காரியத் தொடர்பு கொண்டன வல்ல, கொள்ளவும் முடியாது.

மெய்ம்மைக்கு மாறாக நடப்பதைக் காட்டிலும் தியாகஞ் செய்யச் சித்தமாயிருப்பதே வாழ்வின் கடமைகள் அனைத்திலும் அறிவொளியூட்டும் வழி காட்டியாகின்றது; ஏதேனும் தன்னல நோக்கை விட்டுக் கொடுப்பதைவிடப் பொய் மொழியவோ அன்றி ஏமாற்றவோ துணிகின்ற மனிதன் ஒழுக்கநெறி அறிவைப் பெறும் உரிமையைப் பறிகொடுத்தவனா கின்றான். அவன், வஞ்சகப் பக்தர்களின் நடுவே,

இரண்டக நிலையான பரிமாற்றங்கள் செய்பவர்களின் நடுவே, குணவியல்பும், நன்மதிப்புமில்லா மனிதர்களின் நடுவே கீழ்வரிசையில் இருப்பவனாகின்றான்.

பொய்மொழிவதோ அன்றிச் சைகையால், சொல்லால் அன்றிச் செயலால் ஏமாற்றுவதோ இயலாத காரியமாக ஆகும் வரையில், ஒழுக்கமிலா இழிகுணத்தின் மிகக் கேடான விளைவுகளைத் தெளிவாக மறைவின்றி, ஐயம் எதுவுமின்றிக் காணுவது வரையில், மனிதன் சால்பு எனும் கவசம் பூண்டவனாக மாட்டான். அவ்வாறு ஒளியூட்டப் பெற்ற மனிதன் திக்குகள் அனைத்திலுமிருந்து பாதுகாக்கப் படுபவனாகின்றான்; கிறுக்கு மனிதரால் விண்ணிலிருந்து திங்களை இழுத்துக் கொணருதல் இயலாதவாறுபோல, நேர்மையில்லா மனிதரால் அவனை மேற்கொண்டு வீழ்ச்சியுறச் செய்யவியலாது; அவன்மீது எய்யப்படுகின்ற தன்னலம், நம்பிக்கைக் கேடு இவற்றின் அம்புகள் அவன்மீது படாமலும், அவனுக்குத் தீங்கிழைக்காமலும் சால்பு எனும் வலிமையான கவசமும், நேர்மை எனும் ஒள்ளிய கேடயமும் தடுத்து எதிர்த்தடித்து விடுகின்றன.

கடுமையான போட்டி நிறைந்த இந்த நாட்களில் நாணயமுடனிருந்து எந்த மனிதனும் செழிப்படையவியலாது என்று பொய்பேசும் ஒரு வணிகர் நம்மிடம் கூறக்கூடும். அத்தகைய மனிதன் என்றுமே நாணயத்துடனிருக்க முயன்றதில்லை என்றிருக்கையில் அவன் எவ்வாறு இதை யறிந்துகொள்ள முடியும்? மேலும், அத்தகைய மனிதனுக்கு நாணயத்தைப் பொறுத்த அறிவு எதுவும் கிடையாது; எனவே,

அவனுடைய வாசகம் அறியாமையின் வாசகமே யாகும்; தன்னைப்போலவே பிறர் அனைவருமே அறியாமையும், பொய்ம்மையும் நிறைந்தவரே என மூடத்தனமாக எண்ணுகின்ற அளவிற்கு அறியாமை யும், பொய்ம்மையும் ஒருவனைக் குருடனாக்கிவிடு கின்றன. நான் அத்தகைய வணிகரை அறிந்திருக் கின்றேன்; அவர்கள் அழிந்துவிட்டதையும் கண் டிருக்கின்றேன். ஒருமுறை பொதுக் கூட்டமொன்றில் கீழ்க்காணும் வாசகத்தை வணிகனொருவன் கூறு வதை நான் கேட்டேன். அஃதாவது, "வாணிபத்தில் எந்த மனிதனும் முழுக்கவும் நாணயமுடையவனாக இருக்க முடியாது; அவன் ஏறத்தாழவே நாணய முடையவனாக இருக்கமுடியும்" என்பதே வாசகம். தனது வாசகம் வாணிப உலகத்தின் நிலையை விளக்கிக் காட்டுவதாக அவன் எண்ணிக்கொண்டான்; அது நடக்கவில்லை; அது அவனுடைய சொந்த நிலை யினையே எடுத்துக் காட்டியது. தான் ஒரு நாணயமற்ற மனிதன் என்பதை அவையோரிடத்து வெறுமனே அவன் கூறிவிட்டான்; ஆனால், அவனது அறியாமை, ஒழுக்க நெறிகுறித்த அறியாமை, இதனைக் காணுவதி னின்றும் அவனைத் தடுத்துவிட்டது. ஏறத்தாழ நாணயமாக விருப்பது என்பது நாணயமின்மையைக் குறிக்கும் பிறிதொரு சொல்லேயாகும். நேரான வழியினின்றும் சிறிது விலகுபவன் மேலும் அதிக மாகவே விலகுவான். நேர்மையெனும் நிலையான நியதி அவனுக்குக் கிடையாது; தனது சொந்த நலனையே எண்ணிக் கொண்டிருக்கின்றான். தனது குறிப்பிட்ட நாணயமின்மை வெண்மையானதும், கேடு பயக்காததுமான தரத்தது என்றும், தனது

அண்டை வீட்டானைப்போல் தான் அத்துணைத் தீயவனல்லன் என்று தன்னைத்தான் தேற்றிக் கொள்வது, ஒழுக்க நியதிகளைக் குறித்து அறியாமை உண்டுபண்ணுகின்ற பலவகையான மயக்கங்களில் ஒன்றேயாகும்.

வாழ்வின் பல்வேறுபட்ட தொடர்புகளிலும் கொடுக்கல் வாங்கல்களிலும் மனிதனுக்கு மனிதன் நேர்மையுடன் நடந்துகொள்வதே சால்பின் உள்ளுயிர். அது நாணயத்தைத் தன்னுள் கொள்வதாகின்றது; எனினும் அது நாணயத்தைவிட மேம்பட்டதாகும். அதுவே மனித சமூகத்தின் முதுகெலும்பு; மனித நிறுவனங்களின் ஆதாரமும் அதுவே. அஃதின்றி நம்பிக்கையிராது; வாணிப உலகம் வீழ்ச்சியடையும் வகையில் தலைகீழாகக் கவிழ்ந்து விடும்.

பொய்யன் மனிதர் அனைவரையுமே பொய்யர்கள் என்று எண்ணி அவர்களை அவ்வாறே நடத்துவது போன்று சால்புடைய மனிதன் பிற மனிதர் அனைவரையுமே நம்பிக்கையுடன் நடத்துகின்றான். இவன் அவர்களை நம்புகின்றான்; அவர்கள் இவனை நம்புகின்றனர். இவனுடைய தெளிவான கண்ணும், திறந்த கரமும், திருட்டுத்தனமாகச் செல்லும் எத்தன் அவனுடைய எத்துமானத்தைத் தன்னிடம் கையாள முடியாதபடி அவனை அவமானப் படுத்திவிடுகின்றன. எமர்சன் வெகு அழகாகக் கூறியிருக்கின்றனர்: "மனிதர்களை நம்பு, அவர்கள் தம் வாணிபவிதிகள் அனைத்திலிருந்தும் உன் சார்பாக ஒரு விதி விலக்கைச் செய்வதாயினும், உன்னிடம் உண்மையுடனிருப்பர்"

நேர்மையான மனிதன் தான் வெறுமனே உட னிருப்பதனுலேயே தன்னைச் சுற்றியிருப்போர் முன் பிருந்ததைவிடச் சிறந்தோராக இருக்கும் வகையில் அவர்களின் ஒழுக்க நெறியினைக் கட்டுப்படுத்துபவனு கின்ருன். மனிதர் ஒருவருக்கொருவர் சத்திவாய்ந்த அளவில் வயப்படுவோராகின்றனர்; தீமையை விட நன்மை அதிகச் சத்தி வாய்ந்ததாக இருப்பதைப் போன்று, வலிமையும் நன்னோக்கமுமுடைய மனிதன் தனது தொடர்பால் வலுவற்ருேரையும், தீயோ ரையும் அவமானப் படுத்தவோ அன்றி மேம்பா டுறவோ இரண்டும் செய்யலாம்.

வியப்பு, ஊக்கம் இரண்டையும் உண்டு பண்ணு கின்ற தன்னுணராத சிறப்பைச் சால்புடைய மனிதன் தன்னிடத்தே கொண்டிருக்கின்ருன். சிறியவை, இழிந்தவை, தவருனவை இவற்றிற்கு மேம்படத் தன்னை உயர்த்திக் கொண்டபின்பு இக்கோழைத் தனமான நேர்மைக் கேடுகள் அவன் முன்னிலையில் குழப்பத்தால் பதுங்கிச் செல்கின்றன. மிகவுயர்ந்த இந்த ஒழுக்கச் சிறப்புடன் உயர்ந்த ஆய் பண்புத் திறமும் ஒப்புமை காட்ட முடியாது. தனித் திறமை வாய்ந்த மனிதனைவிடச் சால்புடைய மனிதனே மக்கள் நினைவிலும், உலகத்தின் மதிப்பீட்டிலும் உயர்ந்த இடத்தை வகித்து வருகின்ருன். “தன் னுரிமையான சால்பின் ஒழுக்கச் சிறப்பே இயற்கை யின் விழுமிய பொருளாகும்” என்று பக்மின்ஸ்டர் கூறுகின்ருர். அதுவே வீரர்களை உண்டுபண்ணு கின்ற மனிதப் பண்பு. நெறி திறம்பாத நேர்மை யுடைய மனிதன் இயல்பாக எப்போதும் ஒரு வீரனுக வி்ளங்குகின்ருன். அந்த வீரப் பான்மையை வெளிக்

கொணரத் தறுவாயே தேவைப்படுகின்றது. மேலும், அவன் எப்போதும் நிலேயான மகிழ்ச்சியுடையவ ஞகவே இருக்கின்முன். தனித்திறமை வாய்ந்த மனிதன் மிகவும் மகிழ்ச்சியற்றவஞக இருக்கலாம்; ஆஞல் சால்புடைய மனிதன் அவ்வாறில்லே. நேர்மை யின் உள்ளார்ந்த பண்பாயிருக்கின்ற நிலேயான மன நிறைவை நோயோ அன்றிப் பேரிழப்போ அன்றி இறப்போ கவர்ந்துவிட முடியாது.

நேர்மை அடுத்தடுத்த நான்கு படிகளில் அவனே ஆக்கத்திற்கு அழைத்துச் சென்றுவிடுகின்றது. முதன் முதலில் நேர்மையான மனிதன் பிறருடைய நம்பிக் கையைப் பெற்றுவிடுகின்முன். இரண்டாவதாக அவர்கள் அவன்மீது பொறுப்பாண்மை கொள்கின் றனர். மூன்முவதாக இந்தப் பொறுப்பாண்மை என்றுமே மீருத நிலேயில் ஒரு நற்பெயரை உண்டு பண்ணுகின்றது; நான்காவதாக, நற்பெயர் மேலும் மேலும் பரவுகின்றது; எனவே, வெற்றியைக் கொணருகின்றது.

நாணயமின்மை நேர்மாமுன விளேவையுடைய தாக விருக்கின்றது. பிறருடைய நம்பிக்கையை அழித்துவிடுவதால் அது அவர்களிடையே ஐயப் பாட்டையும், நம்பிக்கைக் கேட்டையும் உண்டு பண்ணுகின்றது; இவை தோல்வியில் முடிவு பெறு கின்ற ஒரு மோசமான பெயரை உண்டு பண்ணு கின்றது.

சால்பெனும் தூண் வீரியமுள்ள இந்த நான்கு கூறுகளாலும் ஒருமித்து வைக்கப்படுகின்றது.

1. நாணயம் 3. இலக்கு
2 அஞ்சாமை 4. வெல்லக் கூடாமை.

**நாணயம்** வெற்றிக்கான உறுதியான வழியாகும். நாணயமற்ற மனிதன் துன்பத்திலும், துயரத்திலும் கழிவிரக்கம் கொள்கின்ற நாள் வந்தே 'தீருகின்றது; ஆனால், நாணயமுடன் இருந்துவிட்டதற்காக எந்த மனிதனும் என்றுமே கழிவிரக்கம் கொள்ளத் தேவையில்லை. நாணயமுள்ள மனிதன் தோல்வியடைந்து விடினும் கூட, (ஆற்றல், சிக்கனம் அல்லது முறைப்பாடு போன்ற பிற ஆதாரங்கள் இல்லாது போனதால் சில வேளைகளில் அந்நிலை ஏற்பட்டுவிடுகின்றது) நாணயமற்ற மனிதனுக்கு இருப்பதைப் போன்று அத் தோல்வி அவனுக்குத் துக்கந் தருகின்ற காரியமன்று; ஏனெனின், தன்போன்றோன் ஒருவனை அவன் என்றுமே வஞ்சித்ததில்லை எனும் உண்மையில் அவன் மகிழ்ச்சியடையலாம். அவனுடைய இருண்ட நேரத்திலும் அவன் தெளிவான மனச்சான்றுடன் இளைப்பாறுதல் பெறுகின்றான்.

நாணயமின்மை ஆக்கத்தைப் பெறும் ஒரு குறுக்கு வழியென அறிவற்ற மனிதர் எண்ணுகின்றனர். இது காரணமாகவே அவர்கள் அதைக் கையாளுகின்றனர். நாணயமற்ற மனிதன் ஒழுக்க நெறியைப் பொறுத்த அளவில் அணுக்கப் பார்வைக் கோளாறு கொண்டவனேயாவான். இறுதியில் ஏற்படும் இழிவை எண்ணிப்பார்க்காமல் தனது பழக்கத்தின் உடனடி மகிழ்ச்சியைக் காணுகின்ற குடிகாரனைப் போன்று, அவன் நாணயமற்ற செய்கையின் "மிகுந்த ஆதாயம்" போன்ற உடனடி விளைவைக் காணுகிறானேயன்றி அதன் இறுதி விளைவை

எண்ணுவதேயில்லை; அத்தகைய செயல்கள் அதிகரித்துக் கொண்டே போகும் எண்ணிக்கை தனது குணவியல்பைத் தவிர்க்கமுடியாத நிலையில் வீழ்த்தி விடுவதோடு, தன் காதுகளில் ஒலிக்கும் வண்ணம் தனது வாணிபம் அழிவினுள் கவிழ்ந்து வீழும் நிலைக்கும் கொணர்ந்துவிடும் என்பதை அவன் காணுவதில்லை. ஆதாயங்களைத் திருட்டுத் தனமாக எடுத்துக் கொள்ளும்போதும், தான் எவ்வளவு திறமையுடனும், வெற்றிகரமாகவும், ஏமாற்றுகின்றான் என்று எண்ணிக் கொள்ளும்போதும், அவன் முழுக்கத் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்கின்றான்; அவ்வாறு பெறப்பட்ட ஒவ்வொரு காசையும் வட்டியுடன் சேர்த்துத் திரும்பக் கொடுத்தேயாகவேண்டும்; நீதிப்படியான இப்பழி வாங்கலினின்றும் தப்பித்துக் கொள்வதை இயலுவதாக்குகின்ற வழியெதுவுமே கிடையாது. கல்லைப் பூமிக்கு இழுக்கின்ற பருப்பொருள் சார்ந்த மைய ஈர்ப்பைப் போன்றே ஒழுக்க நெறி மைய ஈர்ப்பும் அத்துணை உறுதியானதும் மாறுபடாததுமாகும்.

தன் கீழ்ப் பணியாற்றுபவர்கள் பொய்மொழிந்து வாடிக்கைக்காரர்களிடம் தனது சரக்கைக் குறித்துத் தவறுதலாக எடுத்துக் கூறவேண்டுமென்று ஒரு வணிகன் வேண்டிக்கொள்வது ஐயப்பாடு, நம்பிக்கையின்மை, வெறுப்பு இவை தன்னைச் சுற்றிக் கரங்கள் கோத்து நிற்குமாறு செய்துகொள்வதாகும். அவனுடைய கட்டளைகளை நிறைவேற்றுகின்ற ஒழுக்க வலிமையற்றோர்கூட அவனது தூய்மையற்ற வேலையால் தம்மைக் கறைப்படுத்திக் கொள்கின்ற அதே வேளையில் அவனை எள்ளி நகையாடுவர். அத்தகைய

நச்சுச் சூழ்நிலையில் வெற்றி நிலைத்து நிற்றல் எவ்வாறு கூடும்? அத்தகைய வாணிபத்தில் அழிவின் சாயல் ஏற்கனவே ஏற்பட்டிருக்கின்றது; அதனுடைய வீழ்ச்சியின் நாளும் குறிக்கப்பட்டு விடுகின்றது.

நாணயமான மனிதனும் தோல்வியடையலாம்; ஆனால், அவன் நாணயமாக இருந்து வருவதால் தோல்வி யடையவில்லை; அவனுடைய தோல்வி தகைசான்றதாகவே இருக்கும் என்பதோடு அவனுடைய குணவியல்புக்கும் புகழுக்கும் ஊறு விளைவிக்காது. குறிப்பட்ட திசையில் அவனுக்குத் திறமையில்லாததன் விளைவாக ஏற்படும் தோல்வியும் கூட, அவனுடைய திறமைகளுக்குப் பொருத்தமான ஏதேனும் ஒன்றிற்கும், அதன் காரணமாக இறுதியான வெற்றிக்கும் வழிகாட்டும் வகையுமாகவே இருக்கும்.

நேர்மையான நடத்தை அனைவராலும் போற்றப் படுகின்றது; நாணயமற்றவனும் கூடப் பிறரிடம் அதனைக் கண்டு பாராட்டுகின்றான்; தனது வாணிபத் தொடர்புகள் அனைத்திலும் பிறரோடு நீதியுடன் உறவு கொள்பவனும், தனது சொந்த இழப்புக்கே வழிகோலுவதாயினும் உண்மைகள் பேசித் தன் ஒப்பந்தங்கள்படியே உறுதியாக நிற்பவனுமான மனிதன் எந்தத் தீமையைக் கண்டும் அஞ்சவேண்டியதில்லை; ஏனெனின், அவனுடைய செயல்கள் அவனுக்கும், அவன் அக்கறை கொள்கின்ற அனைவர்க்கும் நன்மையே செய்யும்.

அஞ்சாமை நாணயத்தைத் தொடர்ந்தே வருகின்றது. நாணயமுள்ள மனிதன் தெளிவான கண்ணும், மனவுறுதியுடன் நிற்கும் பார்வையும்

கொண்டிருக்கின்றான். அவன் தன் கூட்டாளிகளை முகத்திலேயே உற்றுப்பார்ப்பதுடன், அவனுடைய பேச்சு நேரடியானதாகவும், அமைதியுடையதாகவுமிருக்கும். பொய்யனாகவும், ஏமாற்றுபவனாகவும் இருப்பவன் தனது தலையைத் தொங்கவிடுகின்றான்; அவனுடைய கண்கள் குழம்பிக் கலக்க முற்றுப் பார்வைக் கோணலுடன் இருக்கின்றன. அவன் பிறிதொரு மனிதனைக் கண்ணில் ஏறிட்டுப் பார்க்க முடிவதில்லை; உறுதியற்றதாகவும், நிறைவற்றதாகவும் இருப்பதால் அவனுடைய பேச்சு அவநம்பிக்கையையே உண்டுபண்ணுகின்றது.

மனிதன் தன் கடப்பாடுகளை நிறைவேற்றி விடுகின்றபொழுது அவன் எதற்கும் அஞ்சவேண்டுவதில்லை. அவனுடைய வாணிபத் தொடர்புகள் அனைத்தும் பாதுகாப்புடனும் உத்திரவாதமுடனும் இருக்கின்றன. அவனுடைய முறைகளும் செயல்களும் பகலின் ஒளியைக் கண்டு பதுங்குந் தரத்தனவல்ல. அவன் ஒரு கடினமான காலத்தைக் கடக்க நேரிட்டுக் கடன்பட்டு விடுவானேயாயின் ஒவ்வொருவரும் அவனை நம்புவர்; கடனைத் திருப்பிப் பெறக் காத்திருக்க ஒப்புவர்; அவனுடைய கடன்கள் அனைத்தும் செலுத்தப் பட்டுவிடும். நாணயமற்ற மக்கள் கடனைத் திருப்பித்தராது கடத்துவர்; அவர்கள் அச்சத்திலேயே வாழ்கின்றனர். ஆனால், நாணயமற்ற மனிதன் கடன்படுவதைத் தவிர்க்கவே முயலுவான்; எனினும், கடன் அவனைத் தொடர்ந்து பற்றிக் கொண்டால் அவன் அஞ்சுவதில்லை; தன் முயற்சிகளை இருமடங்காக்கிக் கொள்கிறான். அதனால் அவனுடைய கடன்கள் செலுத்தப் பட்டுவிடுகின்றன.

நாணயமற்ற மனிதர் எப்போதும் அச்சத்துடனேயே இருக்கின்றனர். அவர்கள் கடன் பட்டதற்காக அஞ்சுவதே யில்லை; ஆனால், தம் கடன்களைச் செலுத்த வேண்டுமே என்பதற்காகவே அஞ்சுகின்றனர். அவர் தம் கூட்டாளிகளைக் கண்டு அஞ்சுகின்றனர்; அதிகாரிகளைக் கண்டு அஞ்சுகின்றனர்; தம் செயல்களால் விளையும் விளைவுகளுக்காக அஞ்சுகின்றனர்; மேலும் தம் குற்றச் செயல்கள் வெளிப்பட்டுவிடக்கூடாதே என்பதற்காகவும், எந்த விநாடியிலும் தம்மைச் சூழ்ந்துவிடக்கூடிய அவற்றின் விளைவுகளுக்காகவும் இடைவிடாது அச்சம் கொண்டிருக்கின்றனர்.

நாணய முள்ள மனிதன் அச்சத்தின் இச் சுமையனைத்தும் களைந்தவனாக இருக்கின்றான். அவன் கவலையற்றுத் தன் கூட்டாளிகளிடையே நிமிர்ந்து நடப்பவனாகவு மிருக்கின்றான்; எந்தக் குணத்தையும் பாவனை செய்து கொள்ளாதவனாகக் கடமையில் தவறாதவனாகக் கெஞ்சுதல் இல்லாதவனாகத் தன்னியல்போடு இருப்பவனும், கண்ணுக்குக் கண் காணுபவனுமாக இருக்கின்றான். எவ்வித வஞ்சனையோ அன்றி ஊறுவினைத்தலையோ செய்யாத நிலையில் அஞ்ச வேண்டியவர் யாருமிலர்; அவனுக் கெதிராகக் கூறப்படுவது எதுவாயினும் அது அவன் நற்பயனுக்காகவே சேர்ந்துதவும்.

நெருக்கடிகள் அனைத்தின்போதும் உதவி புரிந்து, இடர்ப்பாடுகளை ஆண்மையுடன் பொருது வெல்ல உதவி செய்து முடிவில் அவனிடமிருந்து கவரப்பட முடியாத மேன்மையையும் தரவல்ல இந்த அஞ்சாமையே மனித வாழ்விற்கு ஒரு வலிமையான அரணாகும்.

இலக்கு, சால்பு ஊட்டி வளர்க்கின்ற குணவியல்பு வலிமையின் நேரடியான விளைவேயாகும். சால்புடைய மனிதன் நேரடியான குறிக்கோள்களும், வலிமையும் அறிவுக் கூர்மையுமுடைய உட்கோள்களும் கொண்ட மனிதனுவான். அவன் ஊகிப்பதுமில்லை, இருளில் உழைப்பது மில்லை. அவனுடைய திட்டங்கள் அனைத்தும் அவனுடைய குணவியல்பு வார்த்தெடுக்கப் பட்டிருக்கின்ற குணவியல்புத் திறத்தில் சிறிதளவைக் கொண்டதாகவே இருக்கும். ஒரு மனிதனின் உழைப்பு எப்போதும் அவனியல்பை ஏதேனும் ஒரு வகையில் உருநிழல் காட்டுவதாகவேயிருக்கும்; ஊறு படாத சால்புடைய மனிதன் ஊறுபடாத திட்டங் களுடைய மனிதனுவான். அவன் சீர்தூக்கிச் சிந் தித்து முன்னேறுகின்முன்; எனவே கேடளவாய தவறுகள் செய்வதோ, தப்புவது கடினமாகவிருக்கும் இரண்டக நிலையில் சிக்கிக்கொள்வதோ நிகழ் கின்ற வாய்ப்பு குறைவாகும். காரியங்கள் அனைத் துடையவும் ஒழுக்கப் பான்மையைக் கருதியும், ஒழுக்கநெறி சார்ந்த வினைபயன்களை எப்போதும் சிந் தித்தும் வெறும் கோட்பாடும் வேளைக்கேற்ற பொருத் தமும் கொண்ட மனிதனைக்காட்டிலும் அவன் உறுதி யானதும், மேம்பட்டதுமான ஆதாரத்தில் நிற்பவனு கின்முன். எந்தச் சூழ்நிலையைப் பொறுத்தும் மிகவும் பரந்த நோக்கத்தைக் கொண்டிருக்கின்ற அதே வேளையில் நுணுக்கங்களையும் அவற்றுள்ளடங்கிய நியதிகளையும் விரிபொருள் அகங்கொள்ளும் வகையில் புரிந்துகொள்ளும்நிலை அவனுக்கு அளிக்கின்ற உயர்ந்த சத்தியையும் கையாளுகின்முன். ஒழுக்க நெறி எப்போதும் வேளைக்கேற்ற பொருத்தமெனும்

அனுகூலத்தை யுடையதாயிருக்கின்றது. அதனுடைய உட்கோள்கள் எப்போதும் மேற்பரப்பினின்றும் மிகுந்த ஆழத்தை யடைந்து விடுகின்றது; எனவே, அது மிகுந்த உறுதிப்பாடும், உத்திரவாதமும் மிகுந்த வலிமையும், நீடித்த நிலைபேறும் கொண்டதாயிருக்கின்றது. சால்பைப் பொறுத்த வரை அதில் ஓர் இயற்கையான நேர்முகப் பாங்கும் இருக்கின்றது; இது, மனிதன் செய்வது எதுவாயினும் அவன் நேராக இலக்கை நோக்கிச் செல்ல உதவியளிப்பதுடன், தோல்வியை ஏறத்தாழ இயலாத தாக்கிவிடுகின்றது.

வலிமைமிக்க மனிதர் வலிமைமிக்க இலக்குகளைக் கொண்டிருக்கின்றனர்; வலிமைமிக்க இலக்குகள் வலிமைமிக்க பேறுகளுக்கு வழிகாட்டுகின்றன. சால்புடைய மனிதன் பிற மனிதர் அனைவரையும் விட உயர்ந்த வலிமையுடையவனாக இருக்கின்றான்; தனது வாழ்வெனும் வாணிபத்தை அவன் நடாத்துகின்ற தீர்க்கத்தின்கண் அவனுடைய வலிமை காணக்கிடக்கின்றது; மதிப்பு, பாராட்டு, வெற்றி இவற்றைப் பணிக்கின்ற தீர்க்கமாகும் அது.

வெல்லக் கூடாமை ஒரு மேம்பட்ட பாதுகாப்பாகும்; ஆனால், நிறைவான தூய்மையும், அழிக்க முடியாத சால்புமுடைய மனிதனையே அது காக்கின்றது. மிகமிகச் சிறு திறமான நுட்பத்திலும் கூடச் சால்பின் நியதியை என்றுமே மீறாதிருத்தலாவது, மறைமுகக் குத்தல் பேச்சு, அவதூறு, பொய்யான விளக்கம் இவற்றின் தாக்குதல்கள் அனைத்தும் தன்னை வெல்லக்கூடாத நிலையிலிருப்பதாகும். இவற்றில் ஒரு பகுதியிலேயாயினும் தோல்வியுற்று

விடுகின்ற மனிதன், ஊறுபடத் தக்கவனேயாவான் ; ஆச்சிலின் குதிகாலில் பாய்ந்த அம்பைப்போன்று தீமையெனும் அம்பு அப்பகுதியில் புகுந்து அவனைக் கீழே வீழ்த்திவிடும். தூய்மையானதும், நிறைவானது மான சால்பு, தாக்குதல், ஊறு அனைத்திற்கும் எதிரான சான்றாகும் ; அதனைக் கொண்டிருப்போர் எதிர்ப்பு, கொடுமை அனைத்தையும் அச்சமில்லாத் தீரமுடனும், விழுமிய உள்ளச் சமநிலையுடனும் பொர வகை செய்கின்றது. உன்னதமான ஒழுக்க நியதிகளை மெய்யறிவுடன் ஏற்றுக் கைக் கொண்டொழுகுவதினின்றும் பிறக்கின்ற உள்ளச் சத்தியையும், இதய அமைதியையும், எத்துணையளவு திறமையும், அறிவாற்றலும் அல்லது வாணிப மதிக் கூர்மையும் தர இயலாது. ஒழுக்க வாற்றலே உயர்ந்த சத்தியாகும். உண்மையான ஆக்கத்தை நாடுபவன் இச்சத்தியைக் கண்டறியட்டும் ; தன் மனத்திலும், தன் செயல்களிலும் அவன் அதை யூட்டி வளர்க் கட்டும் ; அவன் வெற்றியுறுகிறபோது வையகத்தின் வலிமைமிக்க தலைவர்களின் வரிசையில் தானும் இடம் பெற்றுவிடுவான்.

சால்பெனும் தூண் அத்துணை வலிமையும் திண்மையும் கொண்டதாகும். தனது வாழ்வெனும் கோயிலுள் அதன் நடுநிலை பிறழாத வேலைப் பாட்டைக் கட்டி முடிப்பவனே மனிதர் அனை வரையும்விட மேலான அருளும் ஆக்கமும் பெற்றவ னாவான்.

---

# 4. முறைப்பாடு

குழப்பத்திற்கு இடமின்றிச் செய்துவிடுகின்ற ஒழுங்கமைப் பென்னும் நியதியே முறைப்பாடு. இயற்கையான பிரபஞ்ச ஒழுங்கமைப்பின்கண் ஒவ்வொன்றும் அதனதன் இடத்திலேயே அமையப் பெற்றிருக்கின்றது; எனவே, மிகவும் சரிநுட்பமான இயந்திரத்தைவிடக் கூடுதலான சரி நுட்பத்துடன் பிரபஞ்சம் இயங்கிக் கொண்டிருக்கின்றது. விண்ணின் கண் ஒழுங்குக்கேடு பிரபஞ்ச அழிவையே குறிக்கும்; மனிதன் செய்யும் காரியங்களில் ஒழுங்குக்கேடு அவனுடைய வேலைப்பாட்டையும், ஆக்கத்தையும் அழிக்கின்றது.

பல்கலப்பான நிறுவனங்கள் அனைத்தும் முறைப்பாடு மூலமே உருவாக்கப் பட்டிருக்கின்றன. முறைப்பாடின்றி எந்த வாணிபமும் அன்றிச் சமூகமும் பெரிய உருவளவைகளுக்கு வளர்ச்சியடைய வியலாது; வணிகர், நிறுவனங்களை ஒழுங்கமைப்பவர், இவர்க்கு இந்த நியதியே முதன்மையான கருவியாகும்.

ஒழுங்கமைப்பின்கண் கருத்தூன்றுங்கால் அது வெற்றியைப் பெருக்கும் என்பது ஒருபுறமிருக்க, ஒழுங்கமைப்பில்லா மனிதனும் வெற்றியடைந்துவிடக் கூடிய பல துறைகளும் உள்ளன; ஆனால், முறைப்பாடுள்ள ஒரு மேலாளரின் கரங்களில் தனது வாணிபத்தை முழுமையாக ஒப்படைக்க வில்லையெனின் வாணிபத்தில் அவன் வெற்றி காண வியலாது; அதன் மூலம் அவன் தன் சொந்தக் குறைபாட்டிற்கும் கழுவாய் கண்டுகொள்பவனாகின்றான்.

பெரிய வாணிப நிறுவனங்கள் அனைத்தும் திட்ப முடன் வரையப்பெற்ற முறைப்பாட்டு நெறிகளின் போக்கிலேயே படி வளர்ச்சியுறுவிக்கப் பெற்றிருக் கின்றன; அதில் எதையேனும் மீறுதல் வாணிபத் தின் திறமைக்கும், சேமத்திற்கும் அழிவுண்டாக்கி விடும். இயற்கையின்கண் ணுள்ள பல் கலவைப் பிழம்புகளைப் போலவே, நுணுக்கங்களில் அதிநுட்பக் கருத்துச் செலுத்துவதன் மூலமே, சிக்கலான வாணிபமோ அன்றிப் பிற நிறுவனங்களோ கட் டமைக்கப் பெறுகின்றன. முக்கியமான குறிக் கோளைத் தவிர பிற ஒவ்வொன்றைப் பொறுத்தும் அக்கறையற்றிருக்கலாம் என ஒழுங்கமைவில்லா மனிதன் எண்ணுகின்றான்; ஆனால், வழிவகைகளைப் புறக்கணிப்பதன் காரணமாக அவன் குறிக்கோளையே முறியடித்துவிடுகின்றான். நுணுக்கங்கள் சீர் கெடுக்கப் படுவதால் அங்கக் கட்டுப்பாடு அழிகின்றது; நுணுக் கங்களைக் கருத்தூன்றிக் கவனியாது புறக்கணிப்பதால் எந்தப் பணியினுடையவும், அன்றி நிறுவனத்தி னுடையவும் வளர்ச்சி தடைபடுகின்றது.

ஒழுங்கமைவில்லா மக்கள் மிகப்பெரிய அளவில் நேரத்தையும், ஆற்றலையும் பாழ்படுத்துகின்றனர். பொருட்களைத் தேடுவதில் சிதறடிக்கப்பட்ட நேரம் ஒழுங்கமைவுடன் பேணிக் காக்கப்பட்டிருப்பின் எவ் விதமான வெற்றியையும் பெறுதற்கு அவர்களுக்கு உதவி புரியப் போதுமானதாகும்; ஏனெனின், எதைப் பெறுவதாயினும் சோம்புதலுடைய மக்கட்கு என்றுமே இடமிருப்பதில்லை; அவர்களுக்குத் தேவைப் படுகின்ற எப்பொருளாயினும் அவர்கள் தேடியே ஆகவேண்டும், அதுவும் வழக்கமாக நெடுநேரம்

தேடியாக வேண்டும். ஒரு பெரும் வாணிபத்தை நிறுவுவதற்கோ அன்றி எத்திசையிலாயினுஞ் சரியே, சாதனையின் உச்சிகளை அளந்து காணுதற்கோ தேவைப் படுகின்ற அத்துணையளவு ஆற்றல், பொருட்களை நாடும் இந்தத் தினப்படியான தேட்டம் உண்டுபண்ணு கின்ற எரிச்சல், மோசமான உள்ளநிலை, ஏமாற்றம் இவற்றில் வீணுக்கப்படுகின்றது.

ஒழுங்கமைவுடைய மக்கள் தம் நேரம், ஆற்றல் இரண்டையுமே பேணிக் காக்கின்றனர். அவர்கள் எதையுமே இழப்பதில்லை; எனவே, எதையுமே தேடிக் கண்டுபிடிக்கத் தேவையுமில்லை. ஒவ்வொன்றும் அதற் குரிய இடத்திலேயே இருக்கின்றது; இருளிலாயினும், அதன் மீது உடனேயே கையை வைத்துவிடலாம். அவர்கள் அமைதி யுடையோராகவும், ஆழ்ந்து ஆராய்பவராகவும் இருக்க நன்கு தகுதிபெற்றவரே யாவர்; எனவே, எரிச்சல், மோசமான உள்ளநிலை, தம் சொந்த ஒழுங்கமைவின்மைக்காகப் பிறரைத் தூற்றுதல் ஆகியவற்றைக் காட்டிலும் மிகுந்த நல னுடைய எதிலேனும் தம் மனவாற்றல்களைப் பயன் படுத்தலாம்.

முறைப்பாட்டின்கண் ஒருவகையான தனித் திறமை உள்ளது; அது எளிதாக வெளிப்படையான விந்தைகள் புரியும். முறைப்பாடான மனிதன் அத் துணைப் பெருமளவு வேலைப்பாட்டை, அருஞ் செயல் விளைவாகத் தோன்றுகின்ற வகையில், அத்துணைக் குறுகிய காலத்தில் அத்துணைக் களைப்பினின்றும் அத்துணை விடுதலை பெற்றவனாகச் செய்து முடித்து விடுவான். சோம்புதலுடைய இவனுடைய எதிராளி

குழப்பமெனும் சதுப்பு நிலத்தில் நம்பிக்கைக்கு இட மின்றித் தத்தளித்துக் கொண்டிருக்கையில், இவன் வெற்றியின் உச்ச நிலையை அடைந்துவிடுகின்ருன். ஒழுங்கமைப்பு விதியைக் கண்டிப்பாகப் பின்பற்றுகை, தடங்கலோ அன்றி நேரம் வீண்படுதலோ இன்றி விரைவாகவும், அமைதியுடனும் தன் குறிக்கோள்களை அடைய உதவி புரியும்.

ஒரு துறவியின் புனிதமான நேர்ச்சைகளைப்போன்று வாணிப உலகத்தின் துறைகள் அனைத்திலும் முறைப் பாட்டின் தேவைகள் அத்துணை கண்டிப்பானதும், துல்லியமானதுமாகும்; ஒருவனின் செல்வச் செழிப்பு களுக்கு இடையூறு ஏற்படாத வண்ணம் மிகச் சிறிய தனிப்பட்ட காரியத்திலும் அவற்றை மீறவியலாது. செல்வமெனும் உலகில் ஒழுங்கமைப்பு விதி ஓர் இரும்புத்தேவையாகும்; அதைத் தவருது கடைப் பிடிப்பவன் நேரம், மனநலம், பணம் இவற்றைச் சேமிப்பவனுகின்ருன்.

மனித சமூகத்தில் நிலைபேறு கொண்டுள்ள ஒவ் வொரு சாதனையும் முறைப்பாடென்னும் அடி யாதாரத்திலேயே அமைவுறப் பெற்றிருக்கின்றது; எனவே, முறைப்பாடு பின்னிழுக்கப்படின் முன் னேற்றம் முடிவுற்றுவிடும் என்பது உண்மையே. உதாரணமாக, இலக்கியத்தின் பெருஞ்சாதனைகளை எண்ணிப் பார்க்கலாம்; புகழ் சான்ற ஆசிரியர்கள், மேதகு மேதைகளின் நூல்கள், மாபெரும் கவிதைகள், எண்ணிலடங்கா உரைநடை நூல்கள், பெரும்புகழ் கொண்ட வரலாறுகள், உள்ளுயிர் தூண்டும் சொற் பொழிவுகள், மனித இனத்தின் சமூகத் தொடர்புகள்,

அதன் சமயங்கள், சட்டஞ் சார்ந்த அதன் கட்டளைகள், நூலறிவெனும் பரந்த சேமவளம் இவற்றையெல்லாம் எண்ணிப் பாருங்கள்; மொழியின் வியப்பிற்குரிய இந்த வளப்பங்கள், சாதனைகள் அனைத்தையும் எண்ணிப் பாருங்கள்: பின்பு, இவை யனைத்தும் தமது தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும், தொடர்ச்சிக்கும் இருபத்தாறு எழுத்துக்களின் முறைப்பாடான பாகு பாட்டுத் திட்டங்களையே சார்ந்திருப்பதை ஆழ்ந்து நினைத்துப்பாருங்கள்; சில நிலையான விதிகளின் கண்டிப்பான எல்லைக் குட்பட்டிருப்பதால் இப் பாகு பாட்டுத் திட்டம் அழிவில்லாத, அளவில்லாத பயன்களை உடையதாயிருக்கின்றது.

மேலும், கணிதத்தின் வியப்பிற்குரிய சாதனைகள் அனைத்தும் பத்து இலக்கங்களின் முறைப்பாடான பாகுபாட்டுத் திட்டத்திலிருந்தே தோன்றியுள்ளன; அதேபோன்று, திட்டஞ் செய்யப்பட்டுள்ள குறிக் கோளைச் சாதித்துவிடுகின்ற வகையில் ஆயிரக் கணக் கான உறுப்புக்களும் ஒன்று சேர்ந்து இதமாகவும், ஏறத்தாழ ஓசையின்றியும் இயங்குகின்ற மிகவும் சிக்கலான இயந்திரப் பொறி, பொறியியல் விதிகள் சிலவற்றை முறைப்பாடாகக் கடைப்பிடிப்பதினின் றும் கண்டுபிடிக்கப்பட்டதாகும்.

சிக்கல் மிகுந்த ஒன்றை முறைப்பாடு எவ்வாறு சிக்கலறுக்கின்றது, கடினமானதை அது எவ்வாறு எளி தாக்குகின்றது, எல்லையில்லாத் தரத்தவான நுணுக் கங்களை அது எவ்வாறு ஓர் ஒழுங்கமைதியின் மைய விதியுடன் தொடர்புபடுத்தி, முழுமையான சீர்மை யுடனும், குளறுபாடு ஒரு சிறிதும் இல்லாத நிலையிலும்

கையாண்டு காரணங்காட்ட வழிவகுக்கின்றது என் பதையும் நாம் இங்குக் காணலாம்.

விஞ்ஞானி முறைப்பாட்டின் நியதியைக் கண்டறி வதன் மூலம் நுண் நோக்காடியால் மட்டும் காணக் கூடிய ஊருபுழுவிலிருந்து தொலை நோக்காடியால் மட்டும் காணக் கூடிய விண்மீன் வரை பிரபஞ்சத்தின் கண்ணுள்ள மிகப்பல நுணுக்கங்களைப் பெயரிட்டு இன வாரியாகப் பிரித்துவிடுகின்றான்; அதன் காரண மாகப் பல ஆயிரக்கணக்கான பொருள்களிடையே எதேனும் ஒருபொருளைச் சில விநாடிகளுக்குள் குறிப் பிட்டுக் காட்டிவிடலாம். விரைவாகக் குறிப்பிட்டுக் காட்டுதல், விரைவாகக் காரிய முடித்தலுமான இந்த வினைத்திறனே அறிவு, தொழில் இவற்றின் ஒவ்வொரு துறையிலும் அத்துணை அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாக விருக்கின்றது; மனித இனத்திற்கு இவ் வகையில் சேமித்துத் தரப்படுகின்ற நேரம், உழைப்பு இவற்றின் அளவு கணக்கிலடங்காத பெருமள வினதாகும். மனித சமூகத்தின் காரியங்கள் அனைத் தும் ஒழுங்கமைதியின் சார்புப் பண்புகளால் ஒன்றாகப் பிணைக்கப்பட்டுள்ளன என்பதைச் சுட்டிக்காட்டும் வண்ணம், சமயம், அரசியல், வாணிபம் ஆகிய முறைப் பாடுகளைக் குறித்தும், சிந்தனை, கல்வி, பயணம், ஆட்சி ஆகிய முறைப்பாடுகளைக் குறித்தும் நாம் பேசு கின்றோம்.

முறைப்பாடு, முன்னேற்றத்திற்கும், உலகிலுள்ள கோடிக்கணக்கான மக்களில் ஒவ்வொருவரும் தமக் கெனவோர் இடத்தை நாடி மாறுபட்ட குறிக்கோள் களும், விருப்பங்களும் கொண்டு போட்டியிடுகின்ற

அதே வேளையில் அவர்களை நிறைவான ஒரே முழு மையில் ஒருசேரப் பிணைப்பதற்கும் அடியாதாரமாக விருக்கின்ற நியதிகளில் ஒன்ருகும் என்பது உண் மையே.

முறைப்பாடு எவ்வாறு மேம்பாட்டுடன் உறவு கொண்டுள்ளது என்பதை இங்கு நாம் காணலாம்; ஏனெனின், வாணிபம், சட்டம், சமயம், விஞ்ஞானம் அல்லது அரசியல், ஏன் மனித முயற்சியின் ஒவ்வொரு துறையிலும் நிலைபேறு கொண்டதும், மீறக் கூடா ததுமான விதிகளை நிறுவுவதில் உடனடியானதும், தப்பமுடியாததுமான இன்றியமையாமையை உணரு கின்ற ஒருசிலரின் ஒழுங்கமைப்புச் சத்தியால் முறைப் பாடென்னும் ஒழுங்கில் பயிற்றுவிக்கப்படாத பல தனித்தனி யான நபர்கள் அவரவர் இடத்திலேயே அமர்த்தப்பட்டு விடுகின்றனர்; ஏனெனின், இரு மனிதர்கள் சந்தித்த மாத்திரத்திலேயே குழப்பத்தைத் தவிர்த்தற் பொருட்டு இருவரும் ஒத்துணருகின்ற ஏதேனும் பொது ஆதாரம் தேவைப்படுகின்றது. ஒரே சொல்லில் கூறுவதெனின் அவர்களுடைய செயல்களை ஒழுங்குபடுத்த ஏதேனும் முறைப்பாடு தேவைப்படுகின்றது.

குழப்பத்திற்கு இடங்கொடுக்க வியலாதபடி வாழ்க்கை மிகவும் குறுகியதாகும்; தடையையும், தாழ்வையும் நீக்குகின்ற முறைப்பாடென்னும் சாலையின் வழியே அறிவுவளர, முன்னேற்றம் முன் செல்கின்றது; எனவே, தனது அறிவையோ அன்றி வாணிபத்தையோ முறைப்படுத்துபவன், தன்பின் மரபினர் தான் விட்டுச் சென்ற இடத்திலிருந்து திறந்த

மனதுடன் அதைத் துவங்க உதவும் வகையில் அதைச் சிக்கலறுத்து மேன்மையுடையதாக்கித் தருபவனு கின்ருன்.

ஒவ்வொரு பெரிய வாணிபமும், அதன் பரந்த அமைப்புமுறை நன்கு சமனுக்கப்பட்டதும், நன்கு எண்ணெயிடப்பட்டதுமான இயந்திரம் போன்று இயங்கிட உதவுகின்ற முறைப்பாடு கொண்டதாகவே யிருக்கின்றது. தமது பெரிய வாணிபத்தைத் தாம் பன்னிரண்டு மாதங்களுக்கு விட்டுச் சென்ருலும் திரும்பி வரும்வரையில் சிக்கலெதுவுமின்றி அது நடைபெற்றுக் கொண்டிருக்குமென்று குறிப் பிடத் தக்க வணிக நண்பர் ஒருமுறை என்னிடம் கூறினுர்; எப்போதாகிலும் பயணத்தின்போது அவ்வாறு அவர் விட்டுச் செல்வது முண்டு; ஆனுல், அவர் திரும்பிவந்தவுடன் ஒவ்வொரு மனிதனும், சிறு வனும், சிறுமியும், ஒவ்வொரு கருவியும், புத்தகமும், இயந்திரமும், மிகச்சிறிய அளவினதாய ஒவ்வொரு நுணுக்கமும் அதனதன் இடத்தில் அமர்ந்து தான் விட்டுச் செல்லுகையில் இருந்தது போலவே அத னதன் பணியைச் செய்து கொண்டிருந்தன; அதில் இடையூறில்லை, கடினப் பாடில்லை, குழப்பமெதுவும் ஏற்பட்டதில்லை.

ஒழுங்கு முறைக்கும், கட்டுப்பாட்டிற்குமான ஓர் உள்ளார்ந்த விருப்பும், அத்தகைய ஒழுங்கு முறையி னின்றும் தோன்றுகின்ற மன அமைதியும், திறப் பாடும் கொண்டு பொருத்தமின்மையத் தவிர்க்காத நிலையில்எவ்விதமானகுறிப்பிடத்தக்கவெற்றியுமிருக்க வியலாது. ஒழுங்கு முறையை வெறுப்போர், கட்டுப்

பாடற்றுக் குழப்பமுற்றதா யிருக்கின்ற மன முடையோர், தமது சிந்தனை பழக்க வழக்கங்கள், தம் காரியங்களை நிறுவகித்துக் கொள்ளுதல் இவற்றில் கவனமின்றியும், ஒழுங்கின்றியும் இருப்போரான மக்கள் மிகுந்த வெற்றி கொள்ளவோ, ஆக்கம் பெருக்கவோ இயலாது; தமது வாழ்வைத் தொந்தரைகள், துன்பங்கள், இடர்ப்பாடுகள், சிறிய நச்சரிப்புக்கள், இவற்றால் நிரப்பிக்கொள்கின்றனர்; ஏற்புடைப் போக்கில் வாழ்வை ஒழுங்கு படுத்துங்கால் இவை அனைத்தும் அழிந்துபடும்.

முறைப்பாடற்ற மனம் பயிற்சியற்ற மனமே; உடற்பயிற்சிப் போட்டிகளில் பயிற்சி செய்யாத போட்டியாளர் கவனமுடன் பயிற்சி செய்துள்ள எதிராளியுடன் வெற்றிகரமாகப் போட்டியிட முடியாதவாறு போல, பயிற்சியற்ற மனம் வாழ்வெனும் போட்டியில் நன்கு ஒழுங்குறுத்தப்பட்ட மனங்களுடன் ஈடுசெலுத்தவியலாது. எதுவாயினும் சரியே என்றெண்ணுகின்ற ஒழுங்குறுத்தப்படாத மனம் நன்கு ஒழுங்குறுத்தப்பட்ட மனங்களின் பின்னேதுங்கி விரைந்து வீழ்ச்சியடைகின்றது; ஆனால், சடப்பொருள் சார்ந்ததோ, மனஞ்சார்ந்ததோ அன்றி ஒழுக்கநெறி சார்ந்ததோவான வெகுமதிகளாயினும், வாழ்வின் வெகுமதிகளைப் பெறும் கடுமையான போட்டியில் மிகச் சிறந்தனவே. அதற்குத் தகுதியுடையன என்பதை ஒழுங்குறுத்தப்பட்ட மனங் கொண்டோர் நன்கறிவர். ஒரு மனிதன் தன்னுடைய வேலையைச் செய்யவருங்காலையில் தன் கருவிகளைக் காண முடியாமலோ அன்றித் தனது கணக்கில் இலக்கங்களைச் சமநிலைப்படுத்த முடியாமலோ அன்றித்

தனது மேசையின் திறவுகோலைக் காணமுடியாமலோ அன்றித் தன் சிந்தனைகளுக்கு விடைகாண முடியாமலோ போய்விடின் அவன் தானே உண்டுபண்ணிக் கொண்ட துன்பங்களில் தத்தளிப்பவனுவான்; அதே போது, ஒழுங்குமுறையான போக்குடைய அண்டை வீட்டுக்காரன் தன்னுரிமையுடனும், களிப்புடனும் வெற்றிகரமான சாதனையின் ஊக்கமூட்டும் உச்ச நிலைகளை அளந்துகொண்டிருப்பான். கவனமற்றதோ அன்றிச் சிக்கலானதோ அன்றித் திறமை வாய்ந்த மனங்களின் மிகவும் அண்மைக் காலத்திய வளர்ச்சிகளுக்குப் பின் தங்கி நிற்பதோவான வழிமுறையைக் கொண்டுள்ள வணிகனுடைய நல் வாய்ப்புக்கள் நலிவுற்றதாக விரும்பின், அவன் தன்னைத் தானே குறைகூறிக்கொள்ள வேண்டியதுதான்; அதனோடு, மிகவும் உயரிய தனிப்பயிற்சியுடையதும், பயனிறுதியுடையதுமான வழிமுறைகளைத் தனது நிறுவனத்தில் கையாள வேண்டிய தேவையையும் அவன் அறிந்துகொள்ள வேண்டும். காலத்தையும் உழைப்பையும் குறைத்து முழுநிறைவு, முதிர்சிந்தனை, காரியவிரைவு இவற்றைப் பெருக்க உதவுகின்ற ஒவ்வொன்றையும், அஃதாவது ஒவ்வொரு புதினத்தையும் கருத்தையும் கைக்கொள்ள வேண்டும்.

உயிரினம், வாணிபம், குணவியல்பு, நாடு, பேரரசு ஆகிய ஒவ்வொன்றும் கட்டமைக்கப் பட்டிருக்கின்ற சட்டம் முறைப்பாடேயாகும். உயிரணுவிற்கு உயிரணு, துறைக்குத் துறை, கருத்துக்குக் கருத்து, சட்டத்திற்குச் சட்டம், குடியினத்திற்குக் குடியினம் ஓர் ஒழுங்கான வரிசையிலும், தரவாரியாகவும் ஒன்று சேர்க்கப்படுவதாலேயே தொழில் நிலையங்கள், நிறு

வனங்கள் அனைத்தும் பெருமளவில் பெருகி வளர்ந்து முழுநிறைவு நிலையெய்துகின்றன. தனது வழிமுறைகளைத் தொடர்ச்சியாகச் சீர்ப்படுத்திக் கொண்டிருக்கின்ற மனிதன் சத்தியைப் பெருக்குவதில் பயனடைபவனாகின்றான்; எனவே, வணிகன் தன் வழிமுறைகளைப் பயன்படுத்துவதில் வளப்பமுடையவனாகவும், புதியது புனைபவனாகவுமிருக்க இந்நிலை அவனைத் தகுதியுடையவனாக்குகின்றது; ஏனெனின், கோயில்களையோ அன்றிக் குணவியல்புகளையோ, வாணிபங்களையோ அன்றிச் சமயங்களையோ கட்டமைப்போர் புவியில் தீரர்களாயிருக்கின்றனர்; அவர்களே மனித இனத்தின் காவலர்களாயும், முன்னோடிகளாகவும் இருக்கின்றனர். முறைப்பாட்டுடன் கட்டமைப்பவன் ஒரு படைப்பாளியும், பாதுகாப்பாளனுமாவான்; அதே போது, ஒழுங்கற்ற மனிதன் சிதைத்துச் சின்னாபின்னப் படுத்திவிடுகின்றான்; ஒருவன் கட்டுப்பாடு எனும் ஒழுங்குமுறையைக் கைக்கொண்டு, பாதுகாத்து, ஒவ்வொரு நுணுக்கத்தையும் அதற்குரிய இடத்தில் வைத்து, ஒவ்வொரு துறையையும் அதன் குறிப்பிட்ட கடமையில் ஈடுபடுத்தித் தனது குறிப்பிட்ட பணியையொட்டிய மிகச் சாதாரண விபரத்தையும் எக் கணத்திலும் பரிசோதனைக்காகவோ அன்றித் தேவையைப் பொறுத்தோ கொண்டுவருதல் இயலுவதாக இருக்கும் நிலையில் அத்துணைத் திறப்பாட்டுடனும் நிறைவுடனும் வரிசையும், வகையும் படுத்திக் கொள்வானேயாயின், அம் மனிதனுடைய சத்திகளின் வளர்ச்சிக்கோ, குணவியல்பின் நிறைவுக்கோ, அவனுடைய நிறுவனத்தின் செல்வாக்கிற்கோ அவனுடைய வாணிபத்தின் செழிப்பிற்கோ எல்லை கட்டவே இயலாது.

இந்நான்கு கருப்பொருட்களும் முறைப்பாட்டின் கண் அடங்கியிருக்கின்றன.

1. ஆயத்தம் 3. பயன்
2. சரிநுட்பம் 4. கவிவாற்றல்

உணர்வூக்கமே ஆயத்தம். அது, ஒரு சூழ்நிலையை உடனடியாக உய்த்துணர்ந்து செயலிலீடுபடுவதான சுறுசுறுப்புணர்ச்சியாகும். முறைப்பாட்டைக் கைக் கொண்டொழுகுகின்ற நிலையே இவ்வுணர்ச்சியை ஊட்டி வளர்க்கின்றது. பகைவனிடமிருந்து வரக் கூடிய புதியதும், எதிர்பார்க்காததுமான எந்தத் தாக்குதலேயும் ஆயத்தமாகப் பொருதற்குரிய சத்தியை வெற்றிவீரனுன படைத்தளபதி கொண்டிருக்க வேண்டும்; அதேபோன்று, தன் வாணிபப் போக்கைப் பாதிக்கக் கூடிய எதிர்பார்க்காத எந்த எதிரிடைக்கும் வழிகாணும் ஆயத்தம் வணிகனிடம் இருக்கவேண்டும். அதைப் போலவே சிந்தனையாளனுன மனிதனுக்கு ஏற்படக்கூடிய எந்தப் புதிய சிக்கலின் நுணுக்கங் களுக்கும் ஏற்ப நடவடிக்கை மேற்கொள்ளுதல் இயலுவதாயிருக்க வேண்டும். ஆயத்தமான கரங் களும், ஆயத்தமான இதயங்களும், ஆயத்தமான மூளை களும் கொண்டு தாம் என்ன செய்கின்றோம் என்பதை யறிந்து அதை ஒழுங்கு முறையாகவும், திறமை யாகவும், மெருகுடனெனினும் விரைந்து நிறை வேற்றும் வகையிலும் செய்து முடிக்கும் மனிதர், ஆக்கத்தை ஒரு குறிக்கோளாகச் சிறிதும் கருத வேண்டிய மனிதரல்லர்; ஏனெனின், அவர்கள் அதை நாடுகின்றனரோ இல்லேயோ, அது அவர்களை வந்துற்று விடும்; வெற்றி அவர்களை நாடி ஓடி அவர்கள் வாயிலைத் தட்டுகின்றது; அவர்கள் தம் செயல் திறன்

களுடையவும், வழிமுறைகளுடையவும் மிகச் சிறந்த மேம்பாட்டைக் கொண்டு அதைத் தன்முனைப் பின்றியே தம் ஆணைக்குட்படுத்துகின்றனர்.

தொழில் நிலையங்கள், நிறுவனங்கள் அனைத்திலும் சரிநுட்பமாயிருத்தல் அதி முக்கியத்துவம் வாய்ந்ததாகும்; ஆனல், முறைப்பாடில்லாத நிலையில் சரிநுட்பம் இருக்கவியலாது; ஏறத்தாழ முழுமையற்றதாக விருக்கின்ற முறைப்பாட்டை, அதைத் தொடங்கியவர், சீர்மைப் படுத்தாத வரையில், ஏறத்தாழப் பெருங்கேடு பயக்கும் குற்றங்களுக்கு அவனை உட்படுத்திவிடும்.

சரி நுட்பமின்மை சாதாரணக் குறைபாடுகளில் ஒன்ருகும்; ஏனெனின், சரி நுட்பம் தன்னொழுக்கமுடன் நெருங்கிய தொடர்பு கொண்டதாகும்; புறவொழுக்கப் பான்மையுடன் களிப்புடன் சார்புறுகின்ற தன்னொழுக்கப் பான்மை, பெரும்பான்மையோர் இன்னும் எய்திடாத உயரிய ஒழுக்க நாகரிகத்தின் குறியீடாக விளங்குகின்றது. சரி நுட்பமில்லாத மனிதன் தன் பணிமுதல்வருடையவோ அன்றி ஆசிரியருடையவோ ஒழுங்கு முறைக்குச் சார்புருது தனக்கு அதைவிட மிகுதியாகத் தெரியுமெனஎண்ணுவானேயெனின், அவனுடைய குறைபாட்டைச் சீர்ப்படுத்தவே இயலாது; அதன் காரணமாக, வாணிக உலகமாயிருப்பின் கீழான நிலையிலேயோ அன்றிச் சிந்தனையுலகமாயிருப்பின் நிறைவுருத அறிவிலேயோ அவன் தன்னைப் பிணைத்துக் கொள்பவனுகின்ருன். ஒரு சூழ்நிலையை விவரிப்பதிலோ அன்றி ஒரு நிகழ்ச்சியை எடுத்துரைப்பதிலோ பெரும்பான்

மையோர் கையாளுகின்ற முறையின்கண்ணுள்ள குற்றப்பாடு உற்றுநோக்குவோர் ஒவ்வொருவருக்கும் வெள்ளிடையாகப் புலனாகின்றது. (சரிநுட்பமின்மை சிறுதரத் தீவினைகளில் ஒன்றேயெனினும், பெருங் கேடு தரும் அதனுடைய விளைவுகளைப் பொறுத்து அதை ஒரு தீவினையாகவே கருத வேண்டும்). குறிப் பிடத் தக்க சரிநுட்பப் பிழைகள் காரணமாகவே கிட்டத்தட்ட எப்போதுமே அது பொய்யாகவே ஆக்கப்பட்டு விடுகின்றது. (உள்ளமறியப் பொய் யுரைப்போரைக் கணக்கில் கொள்ளாது விடின்) தாம் கூறுவதைச் சரிநுட்பமுடன் கூறவோ அன்றித் தான் தவறிழைக்கக் கூடுமென்பதை ஒத்துக்கொண்டு அதனை அறிவிப்பதில் கவனமுடனிருக்கவோ ஒருசில மக்களே தம்மைப் பயிற்றுவித்திருக்கின்றனர்போலும்; இம்மாதிரியான சாதாரண சரிநுட்பப் பிழையினின்றே பல பொய்களும் தப்பெண்ணங்களும் தோன்று கின்றன.

தாம் கூறுவதைக் காட்டிலும் தாம் செயல் படுவதில் சரிநுட்பமுடனிருக்கப் பல மக்கள் முயற்சி யெடுத்துக் கொள்கின்றனர்; ஆனால், இங்குக் கூடப் பலரைத் திறப்பாடற்றவராகவும், தகுதியற்றவராகவும் ஆக்கி, விடாமுயற்சியும் தாங்குகையும் வேண்டப்படு கின்ற எந்த உழைப்பிற்கும் அவர்களைத் தகுதியற்ற வராக்கி விடுகின்ற சரிநுட்பப் பிழை சாதாரணமே யாகும். தன்னுடையவோ அன்றித் தனது பணி முதல்வருடையவோ நேரத்தின் ஒரு பகுதியைத் தன் தவறுகளைத் திருத்தும் முயற்சியில் வழக்க மாகச் செலவிடுகின்ற மனிதனோ அன்றித் தன் தவறுகளைத் திருத்தும் பொருட்டுப் பிறிதொருவன்

பணிக்கமர்த்தப் படவேண்டிய நிலையிலுள்ளவனே நடைமுறை உலகில் எப்பதவியையும் வகிக்கத் தக்க மனிதனன்று; அவர்கள் ஆக்கம் படைத்தோரின் வரிசைகளின் நடுவே ஓரிடத்தைப் பெறுகின்ற வாய்ப்பு அதனினும் குறைவு.

தனது குறிப்பிட்ட வெற்றியை நோக்கிச் செல்லும் வழியில் சில தவறுகளேனும் இழைக்காத மனிதன் என்றுமே வாழ்ந்ததில்லை; ஆனால், தன் தவறுகளைக் கண்டறிந்து அவற்றை விரைந்து நீக்கி, அவை சுட்டிக் காட்டப்படுகின்றபோது மகிழ்ச்சியடைபவனே திறமைவாய்ந்தவனும், நேர்மனச் சார்புடைய மனிதனுமாவான். வழக்கமானதும், நிலையாக நீடிப்பதுமான சரிநுட்பமின்மையே மறம்; தன் தவறுகளைக் கண்டறியாமலோ அன்றி ஒப்புக்கொள்ளாமலோ இருப்பவனும், அவை சுட்டிக்காட்டப்படுகின்றபோது பொல்லாங்கு கொள்பவனும் திறமையற்றவனும், தவறான மனச் சார்புடைய மனிதனுமாவான்.

முன்னேற்ற நோக்குடைய மனிதன் தன் தவறுகளைக் கொண்டும், அதே போன்று பிறருடைய தவறுகளைக் கொண்டும் திருந்தி விடுகின்றான். நல்ல அறிவுரையை நடைமுறைப் படுத்திச் சோதனை செய்ய அவன் எப்போதுமே ஆயத்தமாகவிருக்கின்றான்; தன் வழிமுறைகளில் என்றென்றும் பெருகுவதான சரிநுட்பத்தைக் குறியாகக் கொள்கின்றான்; அது மேன்மைக்கும் மேன்மையான நிறைவு நிலையினையே குறிக்கும்; ஏனெனின், சரிநுட்பம் நிறைவு நிலையாகும்; ஒரு மனிதனின் தனித் தன்மையுடையவும், நிறைவு

நிலையுடையவும் அளவே அவனுடைய சரிநுட்பத்தின் அளவுமாகும்.

பயனே அன்றிப் பயனுடைமையோ ஒருவன் உழைப்பிலுள்ள வழிமுறையின் நேரடி விளைவே யாகும். முறைப்பாடாகப் பின்பற்றப்படுகின்றபோது தான் உழைப்பு பயனுடையதும், ஆதாயமுடையது மான விளைவுகளுக்கு வந்துறுகின்றது. தோட்டக் காரன் நல்ல விளைச்சலில் வருவாய் தேடவேண்டி யிருப்பின் விதைத்து நட்டுவிட்டால் மட்டும் போதாது; சரியான நேரத்தில் விதைக்கவும், நடவும் வேண்டும்; எந்த உழைப்பினுடையவும் விளைவுகள் பயனுடையதாயிருக்க வேண்டுமெனின், அது பருவத்திற் கேற்பச் செய்யப்பட வேண்டும்; ஒரு காரி யத்தைச் செய்து முடிக்கின்ற வாய்ப்பினைக் கடந்து போக விடுதல் கூடாது.

பயன், நடைமுறைப் படுவதான விளைவைக் கருதி, அந்த விளைவையடையச் சிறந்த வழிகளைக் கைக்கொள் கின்றது. அது பிற கிளைவழிகளைத் தவிர்க்கின்றது: கோட்பாடுகளைத் துறக்கின்றது. வாழ்வுச் சிக் கனத்தின் நற்பயன்களுக்காகக் கைக்கொள்ளத் தக்க காரியங்களில் மட்டுமே தனது பிடியைக் கொண்டிருக் கின்றது.

நடைமுறைப் பயன் கருதா மக்கள் பயனற்றதும், ஒத்துக் காணக் கூடாததுமான கோட்பாடுகளால் தம் மனங்களில் சுமையேற்றிக் கொள்கின்றனர்; தத்தம் இயல்பின் காரணமாகவே நடைமுறையில் செயற் படுத்த முடியாத கோட்பாட்டாராய்ச்சிகளைக் கைக் கொண்டு தோல்வியை நாடுபவராகின்றனர். வெறும்

பேச்சிலும், வாதாட்டத்திலுமின்றித் தாம் செய்து முடிப்பதிலேயே தம் சத்திகளை வெளிக் கொணர வல்ல மனிதர் மறைபொருளாராய்ச்சிப் புரட்டல்களையும், இக்கட்டு நிலைகளையும் தவிர்த்து, ஏதேனும் நன்மையானதும் பயனுடையதுமான விளைவை நிறைவேற்றத் தம்மைச் செயல்படுத்து கின்றனர்.

நடைமுறைக்குக் கொண்டுவர முடியாத ஒன்று மனத்திற்கு ஊறு செய்ய இடந்தருதல் கூடாது. அது தொலைவில் எறியப்பட வேண்டும்; கைவிடப்பட வேண்டும்; புறக்கணிக்கப்பட வேண்டும். தன்னுடைய கோட்பாடு எவ்விதப் பயனுடைய விளைவையும் கொண்டதன்று என்பதை மெய்ப்பித்துக் காட்ட வேண்டுமெனின், அஃது ஓர் அழகான கோட்பாடு எனும் பிடியை அவன் நிலையாகக் கொண்டிருக்க வேண்டும் என்று அண்மையில் ஒருவர் கூறினார். வாழ்வில் எவ்விதப் பயனும், மெய்ம்மையின்கண் எவ்விதத் திண்ணமான அடிப்படையும் இல்லாதன வாய் மெய்ப்பிக்கப்பட்டுவிட்டனவும், பெயரளவில் "அழகானவை"யாக இருக்கின்ற கோட்பாடுகளைப் பற்றிக்கொண்டிருக்க ஒருவன் விரும்புவானெனின் அவன் உலகியல் சார்ந்த தன்னுடைய முயற்சி களில் தோல்வியடைந்தால் வியப்படைதற்கில்லை; ஏனெனின், அவன் நடைமுறைப் பயன் கருதா மனிதனுவான்.

சடப்பொருள் சார்ந்ததோ அன்றி ஒழுக்கநெறி சார்ந்ததோவான எத்திசைகளிலாயினுஞ் சரியே, ஆழ்ந் தாயும்கோட்பாட்டாராய்ச்சியிலிருந்து மனச் சத்திகள்

நடைமுறைச் செயல்பாடுக்குத் திருப்பப்படும்போது திறமை, சத்தி, அறிவு, ஆக்கம் ஆகியவை பெருகுகின்றன. மனிதனின் ஆக்கம் அவன் சமூகத்திற்குப் பயனுடையவனுய் இருப்பதைப் பொறுத்தே அளவிடப் படுகின்றது; செயற்படுவதைப் பொறுத்தே மனிதன் பயனுடையவனுகின்ருனேயன்றி அவன் விரும்பிக் கடைப்பிடிக்கின்ற கோட்பாடுகளைக் கொண்டன்று.

தச்சன் நாற்காலியைப் படைக்கின்ருன்; கொத்தன் வீட்டைக் கட்டுகின்ருன்; கம்மியன் இயந்திரத்தைக் கண்டுபிடிக்கின்ருன்; அறிவுடை மனிதன் குணவியல்பை உருவாக்குகின்ருன். உழைப்பாளிகள், உருவாக்குபவர்கள், செயற்படுபவர்கள், இவர்களே புவியின் சத்து ஆவர்; சமயவாதிகளோ, கோட்பாட்டாளர்களோ, வாத நிபுணர்களோ அல்லர்.

அறிவாற்றல் கோட்பாட்டாராய்ச்சியாகிய கானல் நீரினின்றும் மனிதன் திரும்பி எதையேனும் செயலாற்றத் துவங்கட்டும்; அதுவும் தன் வலிமையனைத்தையும் கொண்டு செயலாற்றட்டும்; அதன் காரணமாக அவன் ஒரு தனிப்பட்ட அறிவைப் பெறுகின்ருன்: ஒரு தனிப்பட்ட சத்தி கைவரப் பெறுகின்ருன்: தன் கூட்டாளிகளின் நடுவே தனக்கெனத் தனிப்படையான நிலையையும், ஆக்கத்தையும் அடைந்து விடுகின்ருன்.

தொடர்புள்ள விபரங்கள் பலவற்றைப் புழங்கவும், அவற்றை இயக்கி ஒன்ருகப் பிணைக்கின்ற தனித்த நியதியுடன் சேர்த்து அவற்றை முழுமை

யாகப் புரிந்து கொள்ளவும் உதவுகின்ற மனப்பண்பே கவிவாற்றலாகும். இது, உருவாக்கவும், கட்டிக்காக்கவு மான சத்தியைத் தருகின்ற ஓர் ஆண்மைப் பண்பாகும்; நுணுக்கமான விவரங்களில் முறைப்பாடான கவனஞ் செலுத்துவதால் இது வளர்ச்சியடைகின்றது. வெற்றியை விரும்பும் வணிகன் தனது வாணிபத்தின் விவரங்கள் அனைத்தையும் அவை யுள்ளவாறே மனத்தில் கொண்டு, தனது குறிப்பிட்ட வாணிப முறைக் கேற்பச் சரிசெய்து கொள்ளப்படுகின்ற ஒரு முறைப் பாட்டின் மூலம் அவற்றை ஒழுங்கு படுத்துகின்ருன். புதிய மெய்ம்மை கண்டுபிடிப்பவன் தனது இயந்திரத்தின் விவரங்கள் அனைத்தையும், இயந்திரத்தின் அடிப்படை இயக்க விதியுடன் அவற்றின் தொடர்பையும் ஒருசேர மனத்தில் கொள்கின்ருன்; எனவே, தான் கண்டுபிடித்த புதிய மெய்ம்மையை முழுமையாக்குகின்ருன். ஒருபெரிய கவிதையினுடையவோ அன்றிக் கதையினுடையவோ ஆசிரியர், தமது கதையுறுப்புக்களையும், நிகழ்ச்சிகளையும் ஒரு மையமான கதைத் திட்டத்துடன் தொடர்புபடுத்தி, பல்கலவையானதும், நிலைபெறுவதுமான ஓர் இலக்கியப்பணியை உருவாக்குகின்ருர். பகுத்துணர்வதும், தொகுத்துணர்வதுமான திறமை ஒரே மனிதனிடத்தில் ஒரு சேரப் பொருந்தியிருப்பதே கவிவாற்றலாகும். தனது ஆழமான அடிநிலைகளில் விவரங்களின் ஓர் அணிவகுப்பையே அவற்றின் சரியான அமைப்பு முறையிலும் உண்மையான இயக்க வரிசையிலும் தன்னகத்தே கொண்டுள்ள மனமே, சிறப்புத் திறமையை இதுவரையில் அடைந்துவிடவில்லையெனினும் அதை அடுத்தேனும் உள்ள மனமாகும். ஒவ்வொரு

மனிதனும் சிறப்புத் திறமையுடையவனுக இருக்க முடியாது; அவ்வாறு இருக்க வேண்டுவதுமில்லை. ஆனுல், தன் சிந்தனைகளிலும், வாணிபத்திலும் முறைப்பாடு உண்டுபண்ணுவதில் கவனமுடன் கருத்தூன்றுவதால் தனது மனத் திறமையை அவன் சிறுகச் சிறுகப் பெருக்கிக் கொள்ள முடியும்; அவனுடைய நுண்ணறிவு ஆழ்ந்து படரும்போது, அவனுடைய சத்திகள் மிகுதியாவதுடன், ஆக்கமும் சிறப்படைகின்றது.

எனவே, ஆக்கமெனும் கோயிலின் நான்கு மூலைத் தூண்கள் இத்தகையனவே; கோயிலை என்றென்றும் நிலையாகத் தாங்குதற்குப் பின்னுள்ள நான்கு தூண்களைச் சேர்க்காமலே இவை போதுமானதாகும். வாழ்வில் தான் முயலும் உழைப்பு எத்தகைமைத்தாயிருப்பினும் சரியே, ஆற்றல், சிக்கனம், சால்பு, முறைப்பாடு இவற்றில் தன்னை நிறைவுபடுத்திக் கொள்பவன் தன் வாழ்க்கையின் உழைப்பில் நிலைபேறு கொள்ளும் வெற்றியடைவான். முழுமையான ஆற்றலுள்ளவன், தனது நேரத்தையும் பொருளையும் கவனமுடன் சிக்கனப்படுத்துபவன், தனது வலிமையை, நன்னடத்தையில் பெருக்குபவன், திசை மாருத சால்பைக் கைக் கொண்டொழுகுபவன், முதலில் தன் மனதை முறைப்படுத்துவதன் மூலம் தனது உழைப்பையும் முறைப்படுத்துபவனுமான ஒருவன் தோல்வியடைதல் இயலாத காரியமாகும்.

அத்தகைய மனிதனின் முயற்சிகள் நேர்முறையில் செலுத்தப்படுகின்றன; அதுவும், அவை பயனுடையதாகவும், நன்மை பயப்பதாகவும் இருக்கும்

வகையில் ஒருமுகப் படுத்தப்பட்ட சத்தியால் செலுத்தப்படுகின்றன. இதற்கும் மேலாக, தன் முனைப்பின்றியே மதிப்பையும், வெற்றியையும் கொணருகின்ற ஓர் ஆண்மையும், தனித்தன்மையுடைய மேன்மையும் அவனை வந்தடைகின்றன; வலிவற்றவர்களின் நடுவே அத்தகையோன் வெறுமனே தோன்றுதலே அவர்களுக்கு வலிமை யூட்டும். "வாணிபத்தில் விடா முயற்சியுடனிருக்கும் மனிதனைப் பாருங்கள். அவன் அரசர்களுக்கெதிரே நிற்பானேயன்றி இழி மக்களின் முன்னிற்பதில்லை" என அத்தகையோன் ஒருவனைக் குறித்து ஸ்கிரிப்சர் கூறுகின்றார். அவன் இரப்பதோ, அன்றிச் சிணுங்குவதோ, அன்றி முறையிடுவதோ, அன்றி நசுநாறித்தனமாகப் பிறரைப் பழிப்பதோ இல்லை; ஆனால், அத்துணைக் கீழ்நிலைக்குத் தன்னைத் தாழ்வுறுத்திக் கொள்ளாத வகையில் அத்துணை வலிமை, தூய்மை, நேர்மை உடையவனா யிருக்கின்றான். ஆகவே, தன் குணவியல்பின் மேன்மையிலும், செம்மையிலும் உயர்நிலையில் நின்றுகொண்டு உலகிலும், மக்களின் மதிப்பீட்டிலும் ஓர் உயரிய இடத்தை வகிப்பவனாகின்றான். அவனுக்கு வெற்றி உறுதியானது; அவனுடைய ஆக்கம் நிலைபேறு கொள்ளும். "வாழ்வுப் போர்க்களத்தில் அவன் நிமிர்ந்து நிற்பானேயன்றி, வீழ்ச்சியடைவதில்லை."

---

# 5. இரக்கம்

மீதமுள்ள தூண்கள் ஆக்கமெனும் கோயிலின் நடுப்பகுதித் தூண்களாகும். அவையே அதற்கு மிகுதியான வலிமையும், உறுதிப்பாடும் அளிக்கின்றன; அதனோடு அதனுடைய அழகு, பயன் இரண்டையும் பெருக்குகின்றன. அதனுடைய கவர்ச்சியை அவையே பெரிதும் அதிகரிக்கின்றன. ஏனெனின், அவை மிக வுயர்ந்த ஒழுக்கநெறித் துறையைச் சார்ந்தனவாக இருப்பதால் பேரழகையும், குணவியல்பு மேம்பாட்டையும் சார்ந்தனவாகவுமிருக்கின்றன. உண்மையில் அவை ஒரு மனிதனைப் பெரியவனுக்கி, அரிதானதும், ஒளிருந் தூய்மையானதும், ஒள்ளிய அறிவுடையது தனித்து மின்னுவதுமான மனங்களைக்கொண்ட ஒரு சிலரின் நடுவே அவனையும் அமர்த்திவிடுகின்றன.

விரைவில் அழிந்துபட்டு விதையோ அன்றிக் கனியோ விட்டுச் செல்லாத வேரற்ற ஓர் அழகான மலரையொத்து, எளிதில் கண்ணீர் சிந்துவதும், மேலெழுந்தவாரியாக உள்ளதுமான மெய்ப்பாட்டை இரக்கமெனத் தவருகப் புரிந்துகொள்ளக் கூடாது. நண்பனெருவனைப் பிரியும்போதோ, அன்றி வெளியிலுள்ளஏதேனும் துன்பத்தைச் செவியுறுகின்ற போதோ நரம்புத்தளர்ச்சி கொண்டாற்போல் அழுதல் இரக்கமாகாது. பிறருடைய கொடுமைகளுக்கும், நீதியின்மைகளுக்கும் எதிராகத் தோன்றுகின்ற மூர்க்கமான சீற்றமும் இரக்கமான மனத்தின் எடுத்துக் காட்டாகிவிடாது. ஒருவன் தன் மனைவியைத் துன்புறுத்தவோ அன்றித் தன் குழந்தைகளை அடிக்கவோ அன்றித் தன் பணியாட்களைப் பழிக்கவோ அன்றி

வெறுத்து ஏளனம் செய்யும் சொல்லம்புகளால் தன் அண்டை அயலாரைப் புண்படுத்தவோ செய்பவனாக வீட்டில் கொடுமைக்காரனாக இருப்பவன் அண்மைத் தொடர்பிற்கு அப்பாற்பட்டிருக்கும் அல்லல்படும் மக்களிடம் காட்டும் அன்புக்கடமை எத்துணை வஞ்சகமானதாக விருக்கும்; அவனையடுத்துள்ள உலகின்கண் காணக்கிடக்கும் நீதியின்மைக்கும், கல்நெஞ்சத்திற்கும் எதிராகத் தோன்றுகின்ற சீற்றங்கள் எத்துணை ஆழமற்ற மெய்ப்பாட்டை அறிவுறுத்துகின்றன.

அத்தகையோரைக் குறித்து எமர்சன் கீழ்க்கண்டவாறு கூறுகின்றார்: "போ. உன் குழந்தையிடம் அன்பு செலுத்து; உன் விறகு வெட்டியிடம் அன்பு செலுத்து; நல்லியல்பு கொண்டவனாகவும், அடக்கமுள்ளவனாகவும் இரு; அந்த மேம்பாட்டைக் கொண்டிரு; உனது கடினமானதும், ஈவிரக்க மற்றதுமான பேராசையை ஆயிரம் மைல்களுக்கப்பாலுள்ள கருப்பு நிற மக்கள்மீது காட்டுவதான நம்ப முடியாத பரிவால் என்றுமே மெருகு பூசாதே. தொலைவிலுள்ளோர்க்கு நீ காட்டும் அன்பு வீட்டோர்க்குப் பகையாகும்." ஒருவனின் உரைகல் அவனுடைய உடனடியான செயல்களின் கண்ணேயே யிருப்பதன்றி அவனுடைய முனைப்பாடான மெய்ப்பாடுகளின் கண்ணே யிருப்பதன்று. அச் செயல்கள் இடைவிடாது தன்னலமும், பகைமையும், கொண்டதாகக் கூறப்படின், அஃதாவது வீட்டிலுள்ளோர் அவனுடைய காலடியோசையைக் கேட்டதும் அஞ்சிக்கலங்கவும், அவன் நீங்கியதும் மகிழ்ச்சி தரும் விட்டாற்றியாகக் கருதவுமான நிலையிருப்பின், துன்பப்படுவோர்க்கும், தாழ்த்தப்படுவோர்க்கும் அவன் கூறும் இரக்கச்சொற்கள் எத்துணை வெறுமையானது!

மக்கட் பணிக் கழகத்தில் அவன் வகிக்கும் உறுப்பினர் பதவி எத்துணை நன்மை பயக்கும்?

இரக்கமெனும் கிணறு கண்ணீரெனும் ஊற்றைப் பெருக்கக் கூடுமெனினும், பெரும்பாலும் அவ்வூற்று தன் தேவையைத் தன்னலமெனும் இருண்ட மடுவிலிருந்தே பெறுகின்றது; ஏனெனின், தன்னலம் தடைப்படும்போது, அது கண்ணீராகத் தன்னைக் கரைத்துவிடுகின்றது.

நிலையாகத் தன்னலமறந்ததும், படிமானமுடையதுமான குணவியல்பின்கண் வெளிப்படுகின்ற ஆழப்பதிந்ததும், அமைதியானதும், விவரிக்க வியலாததுமான மென்மையே இரக்கமாகும். இரக்கச் சிந்தையுடைய மக்கள் பீரிட்டுப் பாய்கின்ற பான்மையும், துடிப்பும் கொண்டவர்களன்று; ஆனல், நிலையாகத் தன்னடக்கம், உறுதி, அமைதி, தன்முனைப்பில்லாத் தன்மை, பெருந்தன்மை கொண்டவர்கள். பிறருடைய துன்பத்தைப் பொறுத்து இவர்கள் குழப்பமற்றிருக்கும் பாங்கைக் கருத்தின்மை எனக் குறுகிய மனம்படைத்தோர் தவறுதலாகப் புரிந்து கொள்ளும் நிலை அடிக்கடி ஏற்படுகின்றது; ஆனல், பிறர் அழுது கொண்டும், தங்கள் கரங்களைப் பிசைந்துகொண்டும் இருக்கையில், இவர்கள் காட்டும் அமைதியான வலிமையிலும், உதவிபுரியும் வேகத்திலும் ஆழ்ந்ததும் நிறைவுற்றதுமான இரக்கத்தை இரக்கச் சிந்தையும், தெளிந்த அறிவும் கொண்ட கண்ணேக்கு கண்டு கொள்கின்றது.

சினக்கத்திலும், தீய தன்மையுடைய ஏளனத்திலும், வெறுப்பான பழிப்பிலும், வசையிலும்,

வக்கணையிலும், சினத்திலும், கண்டனத்திலும், அதே போன்று, நடைமுறை ஆதாரம் எதுவுமின்றிக் கொள்கை அளவினதானதும், பாவனை செய்து கொள்ளப்படுவதுமான இரக்கமாகிய பதனிழந்ததும், பொய்த் தேற்ற முடையதுமான மெய்ப்பாட்டிலுமே இரக்கமின்மை காணக்கிடக்கின்றது.

தன்னலத்திலிருந்தே இரக்கமின்மை தோன்றுகின்றது; அன்பிலிருந்து இரக்கம் தோன்றுகின்றது. தன்னலம் அறியாமையில் அமிழ்ந்திருப்பது; அன்பு அறிவுடன் தொடர்புற்றிருப்பது. தமக்கெனத் தாம், தனிப்பட்ட குறிக்கோள்களும் அக்கறைகளும் கொண்டவராகவும், தம்மைத் தம் கூட்டாளிகளிடமிருந்து தனிப்பட்டவராகவும் கற்பனை செய்துகொள்வதும், அவரவர் பின்பற்றும் வழிகளில் தாம் நேரான போக்குடையவராகவும், பிறர் தவருன போக்குடையவராகவும் இருப்பதாகக் கருதிக் கொள்வதும் மக்களிடையே காணப்படும் சாதாரண நிலையாகும். தனிப்பட்டதும், தன்காரியத்தில் ஈடுபாடுடையதுமான இத்தகைய வாழ்வினின்றும் மனிதனை உயர்வடையச் செய்து அவன் தன் கூட்டாளிகளின் இதயங்களில் வதிந்து அவர்களுடன் ஒன்றுபட்டு எண்ணவும், உணரவும் இரக்கம் வகை செய்கின்றது. அவன் தன்னை அவர்களிடத்திலே வைத்து, அப்போதைக்கு அவர்களாகவே ஆகிவிடுகின்ருன். "காயமுற்ற மனிதனிடம் அவன் எவ்வாறிருக்கின்ருன் என்று நான் கேட்பதில்லை. நானே காயமடைந்தவனுக மாறிவிடுகிறேன்" என்று மருத்துவமனை வீரனுன விட்மேன் இந் நிலையினை விளக்குகின்ருர். துன்பப்படுகின்ற ஒருயிரை வினவுதலே ஒருவகையான துடுக்குத் தன

மாகும். துன்பப்பாடு எதிர்பார்ப்பது உதவியும், இரக்கச் சிந்தையுமேயன்றிக் காரியமறியும் ஆர்வமன்று; இரக்கச் சிந்தையுடைய ஆண்மகனோ அன்றிப் பெண்மணியோ துன்பத்தையுணர்ந்து அதைத் தணிவுறுத்தும் வகையில் தொண்டுபுரிகின்றனர்.

இரக்கம் தற்புகழ்ச்சி கொள்ளவும் இயலாது; தற்புகழ்ச்சி எங்கெங்கு உள்நுழைகின்றதோ, அங்கிருந்து இரக்கம் வெளியேறி விடுகின்றது. ஒருவன் அன்பு ததும்பும் தன் செயல்கள் பலவற்றைக் குறிப்பிட்டு விட்டு அதற்குப்பதிலாகத் தனக்குக்கிடைத்த உபசாரக் கேட்டைக் குறை கூறுவானெனின், அவன் அன்பு ததும்பும் செயல்களைச் செய்தவனாக மாட்டான்; இரக்கத்தின் இனிமையாகிய தன்னை மறந்த பணியை அவன் இனித்தான் அடையவேண்டும்.

இரக்கத்தை அதன் இயல்பான, ஆழ்ந்த பொருள் கொண்டு பார்க்குங்கால், அது பிறருடைய முயற்சிகளிலும், துன்பப்பாடுகளிலும் அவர்களுடன் ஒன்றி விடுவதாகும்; அவ்வகையில்தான் இரக்கச்சிந்தை கொண்ட மனிதன் ஒரு கலவைப் படைப்பாகின்றான்; அவன் பல மனிதர்களுள் ஒருவன்; ஒரு காரியத்தை அவன் பல மாறுபட்ட கோணங்களிலிருந்து நோக்குகின்றானேயன்றி ஒரே ஒரு கோணத்திலிருந்து மட்டும் நோக்குவதில்லை; அதுவும் தன் சொந்தக் குறிப்பிட்ட கோணத்திலிருந்து மட்டும் நோக்குவதோ டமைவதில்லை. அவன் பிறருடைய கண்களைக் கொண்டு நோக்குகின்றான்; அவர்களுடைய காதுகளைக்கொண்டு கேட்கின்றான்; அவர்களுடைய மனங்களைக் கொண்டு சிந்திக்கின்றான்; அவர்களுடைய இதயங்களைக்

கொண்டு உணர்ச்சியடைகின்றான். எனவே, தன்னிலிருந்து பெரிதும் மாறுபட்ட மனிதரையும் அவன் புரிந்துகொள்ள முடிகின்றது: அவர்களுடைய வாழ்க்கையின் பொருள் அவனுக்குப் புலனாகின்றது; நல்லெண்ணம் என்னும் உணர்ச்சியில் அவன் அவர்களுடன் ஒன்றுபட்டவனாகிவிடுகின்றான். "எளியோர் என் கவனத்தை ஈர்க்கின்றனர்; அவர்களுடைய பசி என்னுடைய பசி; நான் அவர்களுடைய இல்லங்களில் அவர்களுடனேயே இருக்கின்றேன். அவர்களுடைய வறுமையில் நானும் பங்கு கொள்கின்றேன். இரப்போருடைய கந்தலுடைகள் என் உடல்மீது இருப்பன போலுணர்கின்றேன்; அந்த நேரத்திற்கேனும் நான் ஏழையாகவும், இகழ்ச்சிக்குரிய மனிதனாகவும் ஆகிவிடுகின்றேன்" என்று பால்ஸாக் கூறியுள்ளார். துன்பப்படுகின்ற கதியற்றவன் ஒருவனுக்குச் செய்யப்படுகின்ற உதவி இறைவனுக்கே செய்யப்பட்டதாகும் என்று பால்ஸாக்கை விடப் பெரியவராகிய ஒருவர் கூறியிருப்பதை இது நினைவு படுத்துகின்றது.

அவ்வாறேதான் இருக்கின்றது; இரக்கம் எல்லா மனிதர்களின் இதயங்களுக்கும் நம்மை அழைத்துச் சென்றுவிடுகின்றது; எனவே, நாம் அவர்களுடன் உணர்ச்சிப் பிணைப்புடையவர்களாகி விடுகின்றோம்; அவர்கள் துன்புறும்போது அந்த நோவை நாமும் உணருகின்றோம்; அவர்கள் களிப்புடனிருக்கும்போது அவர்களுடன் நாமும் மகிழ்ச்சி யடைகின்றோம்; அவர்கள் ஏளனத்திற்கும், தொல்லைக்கும் உள்ளாகும்போது நாம் உணர்ச்சியளவில் அவர்களுடன் ஆழ்ந்து படிந்து அவர்களுடைய தாழ்வுணர்ச்சிகளையும், துயரங்களையும் நம் இதயங்களில் ஏற்றுக்கொள்கின்றோம்;

பிணைக்கின்ற, ஒருமைப்படுத்துகின்ற இரக்கமெனும் இந்த உணர்ச்சியுடைய எவனும் சிறிவிழுவதும், பழிப்பதுமான செயல்களுடையவனுக என்றுமே இருக்க மாட்டான்; அவன் தன் கூட்டாளிகளைக் குறித்துச் சிந்தனையற்றதும், கொடுமையானதுமான கருத்துக்களை என்றுமே வெளியிடமாட்டான்; ஏனெனில் இவனுடைய இதயத்தின் மெல்லிய இயல்பு காரணமாக அவர்களுடைய துன்பத்தின்போது இவன் அவர்களுடனேயே இருப்பவனுகின்ருன்.

ஆனல், பக்குவமடைந்த இந்த இரக்கத்தைப் பெறுவதெனின், ஒருவன் மிகுதியான விருப்பமுற்று, மிகுதியான துன்பமுற்று, துயரத்தின் இருண்ட ஆழங்களைத் தேர்ந்தறிந்தவனுக இருப்பது தேவையாகின்றது. ஆழ்ந்த அறிவூட்டும் அனுபவங்களின் தொடர்பிலிருந்தே அது தோன்றுவதால், மனிதன் தன் இதயத்தினின்றும், இறுமாப்பு, சிந்தனையின்மை, தன்னலம் இவற்றை ஒழித்திடுதலே அங்கிலையாகின்றது. துன்பங்கள் சூழ்ந்த மனிதனைகத் துயருடன் தொடர்புகொள்ளாத எம்மனிதனும் உண்மையான இரக்கம் கொண்டிருக்க முடியாது; ஆனல், அத் துன்பமும், துயரமும் மறைந்துபோயிருக்கவேண்டும்; அஃதாவது நிலையான அன்பாகவும், வழக்கமான அமைதியாகவும் பக்குவப்பட்டிருக்க வேண்டும்.

ஒரு குறிப்பிட்ட திசையில் அத்துணையளவு துன்பமுற்றுப் பின்பு துன்பம் முடிவுற்று, அதன் குறிப்பிட்ட படிப்பிணையாகிய அறிவு மட்டுமே மீந்திருக்கின்ற நிலை, எங்கெங்கு அத் துன்பம் தோன்றினும் அதைப் புரிந்துகொண்டு தூய்மையான இரக்கத்

துடன் நடவடிக்கை மேற்கொள்ளும் வகை செய்கின்றது; இவ்வாறு பல திசைகளில் ஒருவன் "துன்பத்தின்மூலம் நிறைவு நிலையெய்திவிட்ட" பின்பு, அவன் அனுபவித்து வெற்றிகண்ட வேதனைகளைக் கொண்டு, அலைக்கழுற்றுத் துயரமுற்றோர்க்கும், இதயமுடைந்தோர்க்கும் அமைதியும், ஆறுதலும் அளிக்கும் ஓரிடமாகிவிடுகின்றான். துன்பமுறும் தன் குழந்தையின் கடுந்துயர் கண்டு கலங்குந் தாய்போன்று துன்பமுறும் மனிதரின் கடுந்துயர் கண்டு இரக்கமுள்ள மனிதன் வருந்துகின்றான்.

உயர்வானதும், நிலையானதுமான இரக்கம் அத் தன்மையதேயாகும்; ஆனால் அதைவிட மிகக் குறைந்த அளவு நிறைவு நிலையெய்திய இரக்கமும் மனிதவாழ்வில் நன்மைக்கான ஒரு பெரிய சத்தியே; சிறிதளவில் அஃது ஒவ்வோரிடத்திலும் ஒவ்வொரு நாளும் தேவைப்படுகின்றது. ஒவ்வொரு வாழ்க்கைப் போக்கிலும் உண்மையான இரக்கச் சிந்தையுடைய மனிதர் இருந்து வருகின்றனர் எனும் உண்மையைக் கண்டு களிப்படையும் வேளையில், கடுமை, கோபம், கொடுமை இவையனைத்தும் மிகவும் மலிந்து கிடப்பதையும் ஒருவன் காணுகின்றான். கடினமான இக் குணங்கள் அவற்றிற்குரிய துன்பங்களையும் கொணருகின்றன; தம் வாணிபத்திலோ அன்றிக் குறிப்பிட்ட பணியிலோ, முழுக்க முழுக்கத் தமது கடினமான மனநிலை காரணமாகவே தோல்வியடைபவர் இருந்து வருகின்றனர். சீற்றமும், சினமும் கொண்ட மனிதனோ, அன்றித் தன் நெஞ்சத்தில் கடுமையும், தண்மையும், தன்னலச் சூழ்ச்சியும் கொண்டு இரக்கத்தின் ஊற்றுக்கண்கள் வற்றிவிட்டவனாக இருப்

பவனை, பிற வகையில் திறமை வாய்ந்த மனிதனாக இருப்பினும்கூட, முடிவில் தன் காரியங்களில் அழிவைத் தவிர்ப்பது அரிதேயாகும். ஒரு நிகழ்ச்சியில் சினம் தோய்ந்த மடமையும், மற்றொன்றில் தண்ணிய கொடுமையும் அவன் காட்டுகின்ற நிலை, அவனுடைய கூட்டாளிகளிட மிருந்தும், அவனது குறிப்பிட்ட தொழிலோடு நெருங்கிய தொடர்புடையோரிடமிருந்தும் அவனைப் படிப் படியாகத் தனித் தொதுக்கிவிடும்; எனவே, தன்னந்தனியான தோல்வியுடனும், ஒருவேளை நம்பிக்கையற்ற மனமுறிவுடனும் அவனை விட்டு விட்டு ஆக்கக் கூறுகள் அவன் வாழ்வினின்றும் விட்டொழிந்து விடும்.

சாதாரண வாணிபத் தொடர்புகளில் கூட இரக்கம் ஒரு முக்கியமான ஆக்கக் கூருகும்; ஏனெனின், கடுமையும், தடைகூறு மியல்பும் கொண்டோரைவிட அன்பும், மகிழ்ச்சியான இயல்பும் கொண்டோருடனேயே தொடர்பு கொள்ள மக்கள் விரும்பி அவர்கள்பால் ஈடுபாடு கொள்கின்றனர். நேரடியாகத் தாமே தொடர்பு கொள்ளுதல் முக்கியமானதாக இருக்கின்ற துறைகள் அனைத்திலும், நடுத்தரமான திறமையுடன் இரக்கச் சிந்தையும் கொண்ட மனிதன், மிகுதியான திறமையிருப்பினும் இரக்கமற்றவனுயிருக்கின்ற மனிதனை முந்தி விடுவான்.

ஒரு மனிதன் ஓர் அமைச்சராக இருப்பினும், ஒரு சமய குருவாக இருப்பினும் அவரிடமிருந்து வெளிப்படுகின்ற எந்தக் கொடுமையான சிரிப்பும், அன்றி அன்பில்லா வாக்கியமும் அவனுடைய புகழையும், செல்வாக்கையும் மிகவும் ஊறுபடுத்திவிடும்;

குறிப்பாக அவனுடைய செல்வாக்கையே பெரிதும் பாதிக்கும். ஏனெனின், அவனுடைய நல்லியல்புகளைப் பாராட்டுவோர்கூட, அவன் அன்பில்லா திருத்தலைக் கண்டு, தமது சொந்த மதிப்பீட்டில் தம்மை யறியாமலே அவனைக் குறைத்து மதிப்பிடுகின்றனர்.

வணிகன் ஒரு சமயத்தை ஆதரித்து முன்மொழிவானேயாயின், அவனுடைய வாணிபத் தொடர்புகளில் அச் சமயத்தின் நற்பான்மையைக் காணலாம் என மக்கள் எதிர்பார்ப்பர். மெல்லியல்பினரான ஏசுநாதரை வணங்குபவனாக ஞாயிறன்று உரிமை கொண்டாடிவிட்டு, வாரத்தின் பிற நாட்கள் அனைத்திலும் கடுமையான போக்குடன் மாம்மனை வணங்குபவனாக இருப்பவன் தனது வாணிபத்திற்கு ஊறு விளைவிப்பதோடு, தனது ஆக்கம் குறிப்பிடத் தக்க அளவு குறைவடையச் செய்பவனுமாவான்.

இரக்கம் விலங்குகளும் உட்பட அனைவரும் இயல்பாகவே புரிந்து போற்றுகின்ற பிரபஞ்ச ஆன்மீகப் பண்பாகும்; மனிதர் முதல் உயிரினங்கள் அனைத்தும் துன்பத்திற்குட்படுவனவே; துன்பகரமான அனுபவத்தின் ஒருமைப்பாடு இரக்கம் என்னும் உணர்ச்சியை உண்டுபண்ணுகின்றது.

தன்னலம் பிறருடைய பொறுப்பில் தம்மைக் காப்பாற்றிக் கொள்ள மனிதரைத் தூண்டுகின்றது. ஆனால், இரக்கம் தன்னலத் தியாகத்தால் பிறரைக் காப்பாற்ற அவர்களைத் தூண்டுகின்றது; இத்தன்னலத் தியாகத்தில் உண்மையானதும், முடிந்த முடிவானதுமான இழப்பு எதுவுமேயில்லை; ஏனெனின்,

தன்னல மகிழ்ச்சிகள் சிறியதும், ஒரு சிலவாகவுமிருக்க, இரக்கத்தின் நன்மைகள், பெரியவும், பல்வகைப் படுவனவாகவும் இருக்கின்றன.

"தனது சொந்தவாணிபத்தைப் பெருக்குவதையே குறிக்கோளாகக் கொண்டுள்ள ஒருவணிகன் தன்னலத் தியாகத்தை எவ்வாறு கடைப் பிடிக்க முடியும்?" என வினவப் படலாம். தானிருக்கும் இடத்திலிருந்தே தான் அதைப் புரிந்து கொள்ள முடிகின்றதிறமையின் அளவிற்கேற்ப ஒவ்வொரு மனிதனும் தன்னலத்தைக் கடைப்பிடிக்கலாம். தன் சூழ்நிலைகள் காரணமாக ஓர் அறத்தைக் கடைப்பிடிக்க முடியவில்லையென ஒருவன் கூறுவானெனின், அவன் என்றுமே அதைக் கடைப்பிடிக்க மாட்டான்; ஏனெனின், அவனுடைய சூழ்நிலைகள் மாறுபட்டனவாயிருப்பினும், அவன் அப்போதும் அதே சாக்குப் போக்கையே கூறிக் கொண்டிருப்பான். வாணிபத்தில் தளரா வூக்கம் கொண்டிருத்தல் தன்னலத்தியாகத்துடன் முரண்படுவ தன்று; ஏனெனின், கடமையின் கண்ணுள்ள ஈடுபாடு கடமை, வாணிபமாக இருப்பினுங் கூட, அது தன் னலமன்று; ஆனால், அது தன்னலமற்ற ஈடுபாடாகவும் இருக்கலாம். வாணிபத்திலிருந்து, தன்னையொழித்து விட வேண்டுமென்று போட்டியாளரான வணிக ரொருவர் முயற்சி செய்த போது, தானே ஒதுங்கித் தோல்வியடைந்து, அதே போட்டியாளரைத் திரும்ப வும் வாணிபத்தில் உயர்வடையச்செய்த ஒரு வணிகரை நானறிவேன்; உண்மையில், அஃது அழ கான தன்னலத் தியாகச் செயலாகும்; அவ்வாறு செய்த மனிதர், இன்று வெற்றிகரமான, ஆக்கஞ் சேர்ந்த வணிக மக்களில் ஒருவராக இருக்கின்றார்.

நான் இதுவரை கண்டறியாத மிகுந்த செழிப்புடைய வாணிபப் பயணி ஒருவர் ஏராளமான அன்பும், மகிழ்ச்சியும் பொங்கி வழிபவராக இருந்தார். பிறந்த குழந்தையைப் போன்று "வாணிபத் தந்திரங்கள்" எதையுமே அறியாத அத்துணை மாசற்றவராக இருந்தார்; ஆனால், அவருடைய ஆன்ற இதயமும், ஆண்மையான நேர்மையும் அவர் எங்குச் சென்றாலும் அவருக்கு விரைவில் நண்பர்களை உண்டு பண்ணித்தந்தன. தம் பணிமனைக்கோ அன்றிக் கடைக்கோ அன்றி ஆலைக்கோ அவர் வருவதைக் காண மக்கள் மகிழ்ச்சியடைந்தனர்; இந்த மகிழ்ச்சி அவர் தம்முடன் கொண்டு வந்த நன்மையானதும், திண்மை தருவதுமான செல்வாக்கிற்காக மட்டுமன்று; ஆனால், அவருடைய வாணிபம் நலன் வாய்ந்தது; நம்பிக்கைக்குப் பாத்திரமானது என்பதற்காகவுமாகும். வெறும் இரக்கத்தின் வாயிலாகவே இம்மனிதர் வெற்றியடைந்தார்; ஆனால், தமது வெற்றிக்குக் காரணமாக அதைக் காட்டக்கூடும் என்பதை ஒரு வேளை அவரே மறுத்துரைத்திருக்கக்கூடிய அளவில் இரக்கம் அத்துணைத் தூய்மையானதும், சூழ்ச்சித் திறமற்றதுமாகும். இரக்கம் என்றுமே வெற்றிக்கு இடையூறு செய்யவியலாது. கெடுப்பதுவும், அழிப்பதுவும் தன்னலமே. நல்லெண்ணம் பெருகுகின்ற போது மனிதனின் ஆக்கமும் பெருகும். நலன்கள் அனைத்தும் ஒன்றுக்கொன்று ஆதாரமானவை; அவை நிலைபெறுவதோ அன்றி வீழ்ச்சியடைவதோ ஒருமிக்கவே ஏற்படுகின்றது. இரக்கம் இதயத்தை விரிவடையச்செய்கின்றபோது, ஆன்மீகம், பருப்பொருள் ஆகிய இரண்டுஞ் சார்ந்தனவான அருட்பேறுகள்

மேலும் பெருமளவிற்கு மல்கி நிற்கும் வகையில் அவற்றையுண்டுபண்ணி, அதன் செல்வாக்கின் சுற்று வட்டத்தையே விரிவாக்குகின்றது.

இரக்கம் என்னும் இப்பெரிய அறத்தை நால் வகைக் குணங்கள் உருவாக்குகின்றன. அவையாவன:

1 அன்பு
2. பெருந்தன்மை
3. படிமானம் (பதமை)
4. நுண்புலம்

அன்பு முழுமையான வளர்ச்சியடைகின்ற போது, அது தோன்றி மறையும் உணர்ச்சி வேகமன்று, நிலை பெற்ற குணமேயாகும். பெரும்பாலும் அன்பெனும் பெயரில் அழைக்கப்படுவதாயினும், இடையிடையே தோன்றிமறைவதும், நம்பக்கூடாததுமான உணர்ச்சி வேகம் அன்பாகாது. புகழுரையைப் பழிப்புரை பின் தொடர்வதாயின் புகழுரையில் அன்பே இல்லை. இயல்பாயெழுகின்ற கொஞ்சுதலைத் தூண்டுவதாகத் தோன்றுகின்ற அன்பு இயல்பாயெழுகின்ற வெறுப்புடனும் தொடர்பு கொண்டிருப்பின் அந்த அன்பு சிறிதளவே கருத்திற் கொள்ளற்பாலதாகும். நன் கொடை தருபவன் பின்பு அதன் மதிப்பீடு தனக்குத் திரும்பக் கிடைக்க வேண்டுமென்று விரும்புவானே யாகில், எத்துணையோ மேம்பட்டதாகத் தோன்றிய நன்கொடையும் தன் மதிப்பை இழந்துவிடும். ஒருவன் தனக்கு மகிழ்ச்சியுண்டு பண்ணுகின்ற ஏதேனும் வெளிப்புறத் தூண்டுதல் காரணமாகப் பிறிதொருவனுக்கு அன்புப்பணி செய்தற்பொருட்டுத் தன் உணர்ச்சிகளை எழுச்சியுறச் செய்துவிட்டுச் சிறிது நேரத்திற்குப் பிறகு அவனுக்கு வெறுப்புண்டுபண்ணு கின்ற ஏதேனுமொரு வெளிப்புற நிகழ்ச்சி காரண

மாக அதே மனிதர்பால் அன்பின் மறுகோடிக்குச் சாய்ந்துவிடுவதைக் குணவியல்பின் குறைபாடாகவே கொள்ளவேண்டும். மேலும், அஃது ஒரு தன்னலச் சூழ்நிலையேயாகும். ஏனெனின், நமக்கு மகிழ்ச்சி யுண்டு பண்ணுகின்ற ஒருவனுக்கு மட்டும், அதுவும் அவன் மகிழ்ச்சியுண்டுபண்ணுகின்றபோது மட்டும் அன்புச்செயல் செய்வதென்பது அவன் தன்னலத்தை மட்டும் கருதுவதையே காட்டும்.

உண்மையான அன்பு மாற்றப்பட முடியாதது. அதைச் செயற்படுத்த வெளிப்புறத் தூண்டுதல் தேவையில்லை. அது, தாகங் கொண்ட ஆன்மாக்கள் எப்போதும் எடுத்துப் பருகத்தக்க கிணறுகும்; அஃது என்றுமே வற்றுவதில்லை. அன்பு ஒரு வலிமை வாய்ந்த அறமாகும் போது, நமக்கு மகிழ்ச்சியுண்டு பண்ணு வோர்க்கு மட்டும் வழங்கப்படுவதன்று; ஆனல், நமது விருப்பத்திற்கும், கருத்திற்கும் எதிராகச் செயல் படுவோர்க்கும் வழங்கப்படுவதாகும்; அஃது இடை விடாததும், என்றுமே மாறுததுமான மகிழ்ச்சியார் வத்தின் ஒளியாகும்.

மக்கள் எண்ணி இரக்கப்படுகின்ற சில செயல்கள் உள்ளன; அத்தகையன அன்பில்லாச் செயல்கள். மக்கள் எண்ணி இரக்கப்படாத பிறசெயல்கள் உள் ளன; அத்தகையன அன்புச் செயல்கள். மக்கள் தாம் மொழிந்த, செய்த கொடுமையான காரியங்களுக்காக வருத்தப்படுகின்ற நாள் வந்து சேருகின்றது; ஆனல் அவர் மொழிந்த, ஆற்றிய அன்பான செயல்களுக் கான மகிழ்ச்சிகரமான நாள் எப்போதும் அவர்களுட னேயே இருக்கின்றது.

அன்பின்மை, மனிதனின் குணவியல்பைக் கெடுத்துவிடுகின்றது; காலப்போக்கில் அவனுடைய முகத்தைக் கெடுத்துவிடுகின்றது; அன்பிஞல் அவன் அடைந்திருக்கக் கூடிய வெற்றியின் நிறைவுடைமையைக் கெடுத்துவிடுகின்றது.

அன்புடைமை குணவியல்பை அழகு படுத்துகின்றது; ஆண்டுகளின் வளர்ச்சிக்கேற்ப அவனுடைய முகத்தை அழகு படுத்துகின்றது; மனிதனின் நுண்புலத் திறமைகள் அவனுக்கென உரிமைப்படுத்துகின்ற வெற்றியின் நிறைவுடைமையைப் பெற வழி கோலுகின்றது. மனிதன் அன்பு தோய்ந்த செவ்வியின் பயனுக அவனுடைய ஆக்கம் கனிவுற்றுச் செழிக்கின்றது.

பெருந்தன்மை பரந்த இதயங்கொண்ட அன்புடைமையோடு பொருந்தியிருக்கின்றது. அன்புடைமையைப் படிமான மிக்க தங்கையெனக் கொண்டால் பெருந்தன்மை வலிமை மிக்க தமையனுவான். தன்போக்கானதும், திறந்த நோக்குடையதும், தகைமை வாய்ந்ததுமான குணவியல்பு எப்போதும் கவர்ச்சியுடையதாகவும், செல்வாக்குடையதாகவுமே இருக்கின்றது. கஞ்சத்தனமும், இழிந்த நோக்கும் எப்போதும் எதிரிடையானவை; அவை இருள்படர்ந்தவை; இடுக்கப் பட்டவை; குறுகியவை; கருத்தற்றவை. அன்புடைமையும், பெருந்தன்மையும் எப்போதும் கவர்ச்சியுடையவை; அவை ஒளி படர்ந்தவை; வளர்ச்சி யுறுபவை; வெளிப்படையானவை; கருத்துடையவை. தடைபடுத்தும் ஒன்று தனிமைக்கும், தோல்விக்கும் வழிகாட்டுகின்றது;

கவர்ச்சியுறுத்தும் ஒன்று ஒற்றுமைக்கும் வெற்றிக்கும் வழிகாட்டுகின்றது.

பெறுவதைப் போன்றே வழங்குவதும் அத்துணை முக்கியமான ஒரு கடமையாகும்; தன்னால் இயன்ற அளவு பெறக் கூடியவையனைத்தையும் பெற்றுவிட்டு, வழங்க மறுப்பவன் கடைசியில் பெறமுடியாத நிலையடைந்து விடுவான்; ஏனெனின், நாம் பெறக்கூடவில்லையெனின் நாம் வழங்க முடியாதவாறு போல, நாம் வழங்கவில்லையெனின் நாம் பெற முடியாது என்பதும் ஓர் ஆன்மீக விதியாகும்.

வழங்குவது என்பது மேன்மையானதும், முக்கியமானதுமான ஒரு கடமை என்றே சமய ஆசிரியர்கள் அனைவராலும் எப்போதும் கற்பிக்கப்பட்டிருக்கின்றது. இதற்குக் காரணம் என்னவெனின் தன்னைப் பொறுத்த வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்குமான தலையாய வழிகளில் ஒன்று வழங்குதலாகும். மேலும், மேலும், மேம்பாடுறுகின்ற தன்னலத் துறவை நாம் அடைதற்கும், தன்னலத்திற்குத் திரும்பவும் வீழ்ச்சியடைந்து விடுவதைத் தடுத்தற்குமான கருவி அதுவே. உடன் வாழும் மக்களுடன் நமக்குள்ள ஆன்மீகஞ் சார்ந்ததும், சமூகஞ் சார்ந்ததுமான உறவை நாம் உணர்ந்து, பிறருடைய நன்மைக்காகவும், நன்னிலைக்காகவும் நமது தேட்டத்திலிருந்தோ அன்றி உடைமையிலிருந்தோ ஒரு பகுதியை இழக்கச் சித்தமாயிருக்கின்றோம் என்பதை அது குறிப்பாலுணர்த்துகின்றது. எத்துணை மிகுதியாகப் பெறினும், பின்னும் மிகுதியாக வேண்டுமெனப் பசி கொள்பவனும், கொடுமையான விலங்கொன்று தன் இரையைப்

பற்றிக்கொண்டிருத்தல் போன்று, திரண்டு வரும் சேமிப்பின் மீதுள்ள தனது பிடியைத் தளர்த்த மறுப்பவனுமான பேராவல் கொண்ட மனிதன் கீழ் மண்டிப் போகின்றவனே யாவான்; அவன், உயர் வானதும், உவகைதரும் குணங்கள் அனைத்திலிருந்தும், தன்னலமற்ற, மகிழ்ச்சிகரமான மனித இதயங்களுடன் கொள்கின்ற தன்னுரிமையானதும், உணர்ச்சி தரு வதுமான இணைப்பிலிருந்தும் தன்னைப் புறமொதுக்கி விடுகின்றான். டிக்கன்ஸுடைய "கிறிஸ்துமஸ் மகிழ்ச்சிப் பாடலில்" வரும் ஸ்கூர்ஜ், கவர்ச்சிகரமான வருணனைத் தெளிவும், நாடகப்பாங்கான வலியுறுத் தலும் கொண்டு அத்தகைய மனிதனின் நிலையைச் சித்திரித்துக் காட்டுவதேயாகும்.

இன்று இங்கிலாந்திலுள்ள நம் பொது மக்களில் (ஒரு வேளை அமெரிக்காவில் உள்ளவர்களும் கூட) ஏறத்தாழ அனைவரும் பெரும் கொடையாளிகளே யாவர். (அனைவரும் என்று கூடக் கூறிவிடலாமென எண்ணுகிறேன்: ஏனெனின், இது வரையில் அதற்கு விதிவிலக்காய் நான் எவரையும் கண்டதேயில்லை.) நகரமாமுதல்வர்கள், தண்டலாளர்கள், நகர் மன்ற உறுப்பினர்கள் மற்றும் பொறுப்பு வாய்ந்த பொதுநல அலுவலகங்களை நிருவகிப்பவருமான மக்கள், தமது சொந்தத் தனிப்பட்ட காரியங்களை நிருவகிப்பதில் தனிச்சிறப்புடைய வெற்றிகண்ட மனிதராயிருப்பதா லேயே அவர்கள் பொதுநலக் காரியங்களையும் நிருவகிக் கக்கூடிய சிறந்த மனிதர்களாகக் கருதப்படுகின்றனர்; அவர்களுடைய திறமைகளின் வளப்பத்திற்கு நாடு முழுவதிலுமுள்ள பல சிறந்த நிறுவனங்கள் நிலையான சான்றுகளாகும். அதோடு, அவர்களின் செல்வம்

நேர்மையற்ற வகையில் ஈட்டப் பெற்றதாகும் என்று அவர்கள்மீது அடிக்கடி காட்டப்படுகின்ற குற்றச் சாட்டில் எவ்விதமான ஆதாரரீதியான உண்மை இருப்பதாகவும் நாம் காண முடிவதில்லை. நிறைவுநிலை யெய்திய மனிதர் அல்லரெனினும், கடுவுழைப்பு, திறமை, நேர்மை இவற்றால் மட்டுமே தம்முடைய பொருளையும் புகழையும் தேடிக் கொண்ட அவர்கள் ஆண்மை, ஊக்கம், பெருந்தன்மை, வெற்றி ஆகியவை பொருந்திய பாராட்டுக்குரிய மக்கட் டொகுதியின ராவர்.

பேராவல், இழிநோக்கு, பொறாமை, ஐயப்பாடு இவற்றிற்கெதிராக மனிதன் எச்சரிப்புடனிருக்கட்டும்; ஏனெனின், இவை வளர இடந்தந்தால், அவனுடைய வாழ்வில் சிறப்புடையனவாக இருப்பவையனைத்தை யும் இவை பறித்துவிடும்; ஏன், பருப்பொருளியலான காரியங்களில் சிறப்புடையனவாக இருப்பன அனைத் தையும், அதேபோன்று குணவியல்பினும், மகிழ்ச்சி யிலும் சிறப்புடையனவாக இருப்பவை அனைத்தையும் கூட இவை பறித்துவிடும்.

அவன் தாராளமான இதயமும், வாரி வழங்கும் கரமும், பெருந்தன்மையும், பிறரை நம்பும் பான்மை யும் உடையவனாக, மகிழ்ச்சியுடன் வழங்குவது, அதுவும் பெரும்பாலும் தனது உடைமையிலிருந்தே வழங்குவது மட்டுமன்றி, தனது நண்பர்களுக்கும் கூட்டாளிகளுக்கும் கருத்திலும், செயலிலும் தன் னுரிமை வழங்குபவனாகவும் இருக்கட்டும்; அவ்வா றிருப்பின், நண்பரும் விருந்தினரும்போல, புகழும், செழிப்பும், ஆக்கமும் நுழைவுகோரி அவன் கதவைத் தட்டி நிற்கும்.

பதமை தெய்வத் தன்மையுடன் உறவு கொண்டதாகும். கரடுமுரடானதாகவும், கொடுமை மிகுந்ததாகவும், தன்னல நோக்குடையதாகவும் இருப்பவை அனைத்தினின்றும் பதமையைப்போன்று வேறு எக்குணமும் அதிகத் தொலைவில் இருக்காதுபோலும்; எனவே, ஒருவன் பதமையுடையவனாகும்போது அவன் தெய்வீகத் தன்மையுடையவனாகின்றான். மிகுதியான அனுபவத்தின்மீதும், உயர்ந்த ஒழுக்கத்தின் மூலமுமே அதைப் பெற முடியும். தன்னுடைய விலங்கின இச்சைகளைக் கட்டுப்படுத்தி அவற்றை அடக்கியாளுகின்றபோதுதான் அஃது ஒருவ னிதயத்தில் நிலைபெறு கொள்கின்றது. மெல்லோசையுடைய தெளிவான குரல், தனிக்குறிப்புடையதாகவும், உறுதியுடையதாகவுமிருப்பினும் அமைதியாக விளக்கிக் கூறும் பாங்கு, குறிப்பாக இக்கட்டான சூழ்நிலைகளில் பரபரப்பு, உணர்ச்சிமேலீடு, சினம் இவற்றிலிருந்து விடுபட்டிருத்தல் ஆகியவையே அதன் வெளிப்புற அடையாளங்களாகும்.

பிற குணங்கள் அனைத்தையும்விடச் சமயச் சார்புடைய மனிதனைத் தனித்துக் காட்டுகின்ற ஒரு குணம் உண்டெனின், அது பதமைக்குணமே யாகும்; ஏனெனின், ஆன்மீகச் சீரமைப்பின் தரக்குறியீடு அதுவே. முரட்டுத்தனமாக வலுச்சண்டை செய்யும் மனிதன் பண்புநயம் வாய்ந்த மனங்களுக்கும், தன்னலமற்ற இதயங்களுக்கும் ஓர் இகழ்ச்சி. நன்மகன் என்னும் நமது சொல் அதன் இயல்பான பொருளினின்றும் அடியோடு பிறழ்வுற்றுவிடவில்லை. பணிவும், தன்னடக்கமும் கொண்டு பிறருடைய உணர்ச்சிகளையும், சேமத்தையும் கருதி நடக்கின்ற ஒருவனுக்கு அச்சொல்

இன்றும் வழங்கப்பட்டே வருகின்றது. ஒரு நன்மகன், அஃதாவது தனது நன்னடத்தை சிந்தனையுடைமையாலும், அன்புடைமையாலும் தூண்டப்பெற்றவனாக இருக்கின்ற ஒருவன், அவனுடைய பிறப்பிடம் எதுவாயிருப்பினும், எப்பொழுதும் விரும்பிப் போற்றப்படுபவனாகவே இருக்கின்றான். சச்சரவு செய்யும் மக்கள் தாமிழைக்கும் கலகங்கள், குற்றச்சாட்டுகளின் வாயிலாகத் தம்முடைய அறியாமையையும், பண்புநயமின்மையையும் வெளிக்காட்டுகின்றனர். பதமையால் தன்னைத்தானே நிறைவு செய்து கொள்கின்ற மனிதன் என்றுமே சண்டையிடுவதில்லை. அவன் கடுமையான சொல்லைப் பதிலுக்குப் பதிலாகக் கூடக் கூறுவதில்லை; அவன் அதை அப்படியே விட்டுவிடுவான்; அல்லது, சீற்றத்தைவிட மிகுதியான சத்திவாய்ந்த மென்மைச் சொல்லால் அதை மடக்கி விடுவான். பதமை அறிவுடைமையோடு இணைக்கப் பெற்றிருப்பதாகும்; அறிவுடைய மனிதன் தன்னிடமுள்ள சினம் அனைத்தையும் வென்றுவிட்டவனாவான்; எனவே, பிறரிடம் அதை எவ்வாறு வெற்றிகாண வேண்டும் என்பதை அவன் புரிந்துகொள்கின்றான். கட்டுப்பாடற்ற மனிதர் தம்மைத்தாம் உட்படுத்திக்கொள்கின்ற தடுமாற்றம், தொந்தரைகள் பலவற்றிலிருந்து பதமையுடைய மனிதன் காப்பாற்றப்பட்டவனாகின்றான். அவர்கள் பயனற்றதும், தேவையற்றதுமான கடினப்பாட்டால் தம்மைத்தாம் களைப்புறச் செய்துகொள்ளும் வேளையில், இவன் அமைதியுடனும், தன்னிறைவுடனுமிருக்கின்றான்; வாழ்வுப் போரில் அத்தகைய அமைதியும், தன்னிறைவும் வலுவுள்ளனவாகும்.

நுண்புலம் இரக்கத்தின் இயற்றிறனாகும். இரக்கமான மனமே ஆழ்ந்து உணர்ந்தறிகின்ற மனம். நாம் அனுபவத்தால் புரிந்துகொள்கிறோமே யன்றி, வாதாடலால் அன்று. நாம் ஒரு பொருளையோ அன்றி ஒருவனையோ அறிந்துகொள்ளுமுன்பு நமது வாழ்வு அதனுடையவோ அன்றி அவனுடையவோ வாழ்வுடன் தொடர்புற்றாக வேண்டும்; வாதாடல் வெளிப்புறத் தோலையே பகுத்தாராய்கின்றது; ஆனால், இரக்கம் இதயத்தையே எட்டி விடுகின்றது; பிறரிடம் குறைகாணுமியல்பினன் தொப்பியையும், உடையையும் பார்த்துவிட்டு, மனிதனைக் கண்டுவிட்டதாக எண்ணுகின்றான். இரக்கச் சித்தமுடையோன் மனிதனைக் காணுகின்றான்; தொப்பியையும், உடையையும் கருத்தில் கொள்வதில்லை. வெறுப்பின் வகைகள் அனைத்திலும் ஒவ்வொருவனும் மற்றொருவனைத் தவறாகமதிப்பிடுகின்ற ஒரு பிரிவினைப்பான்மை உள்ளது. அன்பின் வகைகள் அனைத்திலும் ஒவ்வொருவனும் மற்றொருவனைப் புரிந்துகொள்கின்ற தெய்வீகமான ஓர் ஒற்றுமையுள்ளது. இரக்கம் அன்பின் தூய்மையான வடிவமாக இருப்பதால், அது மக்களுடையவும், பொருட்களுடையவும் இதயத்தையே காணுகின்றது. பரந்த இதயம் இருப்பதன் காரணமாகவே ஷேக்ஸ்பியர் மிகவுயர்ந்த கவிஞராகத் திகழ்கின்றார். மனித இதயத்தைக் குறித்தும், உயிருள்ளன உயிரில்லாதன இவற்றின் இயல்பைக் குறித்தும் அத்துணை ஆழ்ந்த அறிவினை, இலக்கியம் அனைத்திலும் வேறு எவருமே, எடுத்துக் காட்டவில்லை. தன்னியல்பான ஷேக்ஸ்பியர் அவருடைய நூல்களில் காணக் கிடைப்பதில்லை; ஏனெனின், இரக்கத்தின் காரண

மாக அவர் தம் பாத்திரங்களுக்குள் இரண்டறக் கலந்துவிடுகின்றார். அவர் தற்காலிகமாக மேதை, தத்துவஞானி, கிறுக்கன், மடையன், குடிவெறியன், விலைமாது இவர்களாக ஆகியே விட்டார்; அவர்கள் எந்நிலையிலிருந்தனரோ அதே நிலையில் இவருமிருந்தார்; இவர் அவர்களுடைய தனிப்பட்ட அனுபவங்களுக்குள் புகுந்து, அவர்கள் தம்மைத்தாம் அறிந்துகொண்டிருந்ததைவிடச் சிறப்பாக இவர் அவர்களை அறிந்து கொண்டார். ஷேக்ஸ்பியருக்கு ஒருதலைச் சார்போ, ஒறுப்போ கிடையாது; மிகத் தாழ்ந்தவர் முதல் மிக வுயர்ந்தவர் வரையில் இவருடைய இரக்கம் அனைவரையும் அரவணைக்கின்றது.

இரக்கத்திற்கும், அறிவிற்கும் பெருந்தடையாக இருப்பது தப்பெண்ணமேயாகும். தப்பெண்ணம் கொண்டிருப்பவரை ஒருவன் தானே புரிந்து கொள்ளுதல் இயலுவதன்று. அரைகுறையான தீர்ப்புக்களை நம் உள்ளங்களினின்றும் அப்புறப்படுத்துகின்றபோது தான் மக்களையும், பொருட்களையும் உள்ளவாறே நாம் காணமுடியும். நாம் இரக்கமுடையவர்களாக ஆகும் போதே மெய்ப்பார்வையுடையவர்களாகவும் ஆகின்றோம். இரக்கம் அறிவைத் தனது கூட்டாளியாகக் கொண்டிருக்கின்றது.

உணருகின்ற இதயமும், காணுகின்ற கண்ணும் இணைபிரிக்கமுடியாதனவாகும். இரக்கமுள்ள மனிதன் வருவதுரைக்கும் திறமுள்ள மனிதனுவான். இதயங்கள் அனைத்துடனும் இயைபுற்றுத் துடிக்கின்ற இதயமுடையோனுக்கு அவ்விதயங்களின் எண்ணங்கள் அனைத்தும் புலனுகின்றன. மேலும், இரக்கமுள்ள

மனிதனுக்கு இறந்தகாலமும், எதிர்காலமும் கண்டறியமுடியாத மறைபொருளாக ஒருபோதும் இருப்பதில்லை. அவனுடைய ஒழுக்கநெறி சார்ந்த நுண்புலம் மனிதவாழ்வின் நிறை வட்டத்தை உய்த்தறிந்து விடுகின்றது.

இரக்கந் தோய்ந்த நுண்புலம் மனிதனை விடுதலை, களிப்பு, சக்தி ஆகியவற்றின் உணர்வு நிலைக்கு உயர்த்தி விடுகின்றது. அவனுடைய உயிர்ப்புப் பைகள் காற்றை உட்கொள்வது போன்று அவனுடைய ஆன்மா களிப்பை உட்கொள்ளும். தன்னுடைய கூட்டாளிகளாலோ, போட்டியாலோ, போதா வேளைகளாலோ, பகைவர்களாலோ மற்றும் இவை போன்றவைகளாலோ அவனுக்கு அச்சங்கள் எப்போதும் உண்டாவதில்லை. தவழ்ந்து வரும் இந்த மாயைகள் மறைந்துவிடுகின்றன; அவனுடைய எழுச்சி யூட்டப்பெற்ற திருப்பார்வைக் கெதிரில் பேராற்றலும், மேம்பாடும் கொண்ட ஆட்சி வந்தமைந்து விடுகின்றது.

---

## 6. இயல்பார்வம்

மனித சமூகம் அதன் இயல்பார்வத்தாலேயே ஒன்ருகப் பிணைக்கப்பட்டிருக்கின்றது. ஒரு பிரபஞ்ச உண்மைப் பிசகு ஒரு பிரபஞ்சநம்பிக்கையின்மையைப் பிறப்பித்துவிடும்; அஃது அழிவை உண்டுபண்ணு தொழியினும் ஒரு பிரபஞ்சப் பிளவைக் கொணர்ந்து விடும். நாம் ஒருவர் மீதொருவர் கொண்டிருக்கின்ற ஆழ்ந்து வேரூன்றிய நம்பிக்கையாலேயே வாழ்வு தெளிந்த அறிவுநிலை உடையதாக, நற்பயன் விளைப்பதாக, மகிழ்ச்சி யுடையதாக ஆக்கப்படுகின்றது. நாம் மனிதரை நம்பவில்லையெனின் அவர்களுடன் நாம் வாணிபத் தொடர்பு வைத்துக்கொள்ள வியலாது; அவர்களுடன் சேர்ந்து பழகக்கூட வியலாது. தனது சொந்த மடமையின் காரணமாக மனிதஇன இயல் பார்வத்தின் மீதிருந்த நம்பிக்கை யனைத்தையும் இழந்து விட்ட மனிதனின் இழிநிலையையே ஷேக்ஸ்பியரின் "டிமான்" நமக்குச் சித்திரித்துக் காட்டுகின்றது. அவன் மனிதர் அனைவருடைய சேர்க்கையினின்றும் தன்னைத் துண்டித்துக்கொள்கின்ருன்; இறுதியில் தற்கொலை செய்துகொள்கின்ருன். வாணிபத்துறையினின்று நம்பிக்கை விடுவிக்கப்படுமாளுல் சமுதாயம் வீழ்ச்சியுற்றுச் சிதறிப் போகும் என எமர்சன் குறிப்பிடுகிருர். ஏனெனில் மக்கள் ஒருவரையொருவர் நம்பி வாழவேண்டும் என்பதற்கு இந்த நம்பிக்கை முறையே ஒரு அறிவிப்பாகத் திகழ்கிறது. அனைத்தும் மோசடியும், வஞ்சனையுமாகும் என்று குறுகிய நோக்குடையோராலும், அறிவிலிகளாலும் சாதாரணமாகக் கருதப்படுகின்ற வாணிபம், ஒருபெரும்

நம்பிக்கையின் அடிப்படையிலிருந்தே தோன்றுகின்றது. அஃதாவது, மனிதர் தம் கடமைகளைப் பொறுப்பேற்று நிறைவேற்றி விடுவர் என்னும் நம்பிக்கையேயாகும். பொருட்களைத் தந்து ஒப்படைப்பது வரையில் கட்டணம் கேட்கப்படுவதில்லை. பன்னெடுங் காலங்களாக இந்த முறைப்பாடு நடைமுறையிலிருக்கும் உண்மை. பெரும்பான்மையான மனிதர் தம்முடைய கடன்களைத் திரும்பித்தரவே செய்கின்றனர் என்பதுடன், அவ்வாறு கட்டணம் செலுத்துவதைத் தவிர்க்கும் விருப்பமுமில்லை என்பதையும் எடுத்துக் காட்டுகின்றது.

மனிதசமூகம் அதன் குறைபாடுகள் அனைத்திற்கும் அடிப்பாகத்தில் உண்மையென்னும் வலுவுள்ள அடியாதாரத்திலேயே நிலைபெற்றிருக்கின்றது. அதன் அடியாதார இசைமானம் இயல்பார்வமேயாகும். மிகவுயர்ந்த இயல்பார்வம் கொண்ட மக்கள் அனைவரும் அதன் பெருந்தலைகளாவர்; அவர்களின் பெயர்களும், அவர்கள் பெற்ற பேறுகளும் அழிந்துவிட அனுமதிக்கபடுவதில்லை; இயல்பார்வம் என்னும் அறம் மக்களினம் அனைத்தாலும் பாராட்டப்படுவதற்கு இதுவே சான்று.

ஒவ்வொருவரும் தம்மைப் போன்றவனே என்று கற்பனை செய்துகொள்வதும், "சமூகத்தின் பதனழிவை"க் குறித்து உரையாடுவதும் இயல்பார்வம் இல்லோர்க்கு எளிதே; அழகிய பொருளொன்று தலைமுறை தலைமுறையாக இருந்து வரக் கூடுமென்ற பாவனையில் இருக்கின்றது இது. ஏனெனின், காமாலைக் கண்ணனுக்குக் காணும் ஒவ்வொன்றும் மஞ்சளாகவே தோன்றுமன்றோ? மனித சமூகக் கட்

டமைப்பின்கண் நன்மை எதையுமே காணமுடியாத மக்கள் தம்மைத் தாமே பழுதுபார்த்துக் கொள்ள வேண்டும். அவர்களுக்கு இடையூறு இல்லத்தை யடுத்தே இருக்கின்றது; அவர்கள் தீமையை நன்மை யென அழைப்பர். நன்மையைக் காணுதல் இயலாது போகும் வரையில் அவர்கள் குற்றங்காணும் குணத் துடனும், சிடுசிடுப்புடனும் தீமையின் கண்ணேயே வதிந்து வந்துள்ளனர்; ஒவ்வொன்றும், தீயதாகவே தோன்றுகின்றது. மக்களும் தீயராகவே தோன்று கின்றனர். "உச்சியிலிருந்து அடித்தளம் வரை சமூகம் பதனழிந்திருக்கின்றது என்று ஒரு மனிதன் அண்மை யில் கூற நான் கேட்டேன்; 'நீ அவ்வாறு கருதுவ தில்லையா?' என்றும் அவன் என்னை வினவினன். அவ்வாறு கருத நான் வருத்தமே கொள்ளவேண்டும் என்றும் சமூகம் பல வழுக்களையுடையதாயினும், அதன் கருவுள் ஊறுபடாதது என்பதோடு, அது நிறைவுடைமையின் விதைகளைத் தன்னகத்தே கொண்டிருக்கின்றது என்றும் நான் பதிலுரைத்தேன்.

முழுக்க முழுக்கத் தன்னலக் குறிக்கோள்களை நிறைவேற்றிக் கொள்வதற்காகச் சமூகப் பணியில் பங்குகொள்ளும் மனிதன், நீடித்துச் செழிப்புற இயலாமலும், செல்வாக்குடையவன் என்ற முறையில் எந்த இடத்தையும் நிரப்ப இயலாமலும் போய்விடு கின்ற அளவிற்குச் சமூகம் அத்துணை முழுமையான தாகும் என்பது உண்மையே. விரைவில் அவனுடைய திரை விலக்கப்பட்டு அவன் அவமதிக்கப்படுகின்றான்; குறிப்பிட்ட காலத்திற்கேனும் அத்தகைய மனிதன் மனித ஏமாளித்தனத்தால் தின்று கொழுக்க இயலும் எனும் உண்மை மனிதரின் அறிவின்மையை எடுத்

துக் காட்டினும் மனிதரின் நம்பிக்கைப் பான்மையை யும் எடுத்துக் காட்டுகின்றது.

கலைத்திறம் வாய்ந்த நடிகன் மேடையில் பாராட் டப் படுகின்முன்; ஆனால், வாழ்வெனும் மேடை யில் போலி நடிகன் தன்னை இகழ்ச்சிக்கும், ஏளனத் திற்கும் உரியவனுகத் தாழ்த்திக் கொள்கின்முன். தான் இயல்பாக இல்லாத நிலையினில் தோற்றமளிக்க முயற்சி செய்வதில், அவன் தனித்தன்மையில்லாத, குணவியல்பு இல்லாத ஒருவனுகி விடுகின்முன்; அவன் செல்வாக்கு அனைத்தும், சத்தி அனைத்தும், வெற்றி அனைத்தும் இழந்தவனுகி விடுகின்முன்.

ஆழ்ந்த இயல்பார்வம் வாய்ந்த ஒரு மனிதன் பெரும் ஒழுக்கச் சத்தியாவான்; எந்தச் சத்தியும், மிக வுயர்ந்த நுண்ணறிவுச் சத்தியும், அதனேடு ஒப்புமை காட்டவியலாது. தம் இயல்பார்வத்தின் முழுமைக் கும், நிறைவுடைமைக்கும் ஏற்பவே மனிதர் தம் செல்வாக்கில் சத்திவாய்ந்தவர்களாக இருக்கின்றனர். இயல்பார்வம் எங்கு இல்லையோ, அங்கு ஒழுக்க நெறியும் சத்தியாக இருப்பதில்லை என்று கூறும் வகையில் ஒழுக்க நெறியும் இயல்பார்வமும் மிக அணுக்கமுடன் ஒன்முகப் பிணைக்கப்பட்டிருக்கின்றன; ஏனெனின், இயல்பார்வமின்மை பிற அறங்கள் அனைத் திற்கும் உரிய அடிப்படையையே அசைத்து விடுவ தால் அவை பொடிந்து வீழ்ந்து, பயனற்றுப் போய்விடு கின்றன. சிறிதளவு இயல்பார்வமின்மைகூட ஒரு குணவியல்பின் சிறப்பு அனைத்தையும் சிதறடித்து அதைச் சாதாரணமானதாகவும், வெறுக்கத்தக்க தாகவும் ஆக்கி விடுகின்றது. பொய்ம்மை குண

வியல்புடனும், செல்வாக்குடனும் சேர்ந்துறைய இயலாத அளவிற்கு அத்துணை வெறுக்கத்தக்க ஒரு மறமாகும்; அதோடு, ஒழுக்கநெறிச் சிறப்புடைய எந்த மனிதனும் சிங்காரமான முகப் புகழ்ச்சிகளில் மகிழ்ச்சி காணவோ அன்றிச் சிறுதரமானதும், வழக்கமானதுமான மோசடிகளைக் கையாளவோ இயலாது. எத்துணைச் சிறியதாயினும் பிறர்க்கு மன நிறைவு உண்டுபண்ணுதற்காக ஒரு மனிதன் மோசடியை மேற்கொள்வானேயாயின், மேற்கொண்டு அவன் வலிமையுடையவனுகவும், பாராட்டுக்குரியவனுகவும் இருப்பதில்லை; ஆனல் மக்கள் இறைத்து எடுத்துக் கொள்ளத் தன் மனத்தே சத்தியெனும் ஆழ்ந்த ஊற்று இல்லாதவனுகவும், வணக்கஞ் சார்ந்த மதிப்பைத் தன்பால் அவர்கள் கொள்ளுமாறு தூண்டக்கூடிய செழிப்பில்லாதவனுகவும், ஆழ்ந்த அறிவற்ற, உரமற்ற ஒருவனுகி விடுகின்ருன்.

கண நேரத்திற்கு வண்ணப்பூச்சான வாழ்வால் தற்பெருமை கொள்பவர்களோ அன்றித் திறமையாக வீசப்படுகின்ற மோசடியில் மனநிறைவு காணுபவர்களோ செல்வாக்கின் அந்த அடியோட்டங்களைத் தப்ப முடியாது; அவை இதயத்தை உருக்கி, நிலைபேறுடையதும், இறுதியானதுமான பயன்களுக்காகத் தீர்ப்பை உருவாக்குகின்றன; அதே வேளையில், திட்டமிடப்பட்ட இந்த ஏமாற்றங்கள் மனத்தின் மேற்பரப்பில் கணநேரச் சிற்றலைகளையே உண்டுபண்ணுகின்றன.

“அவருடைய முகமன்களால் நான் மிகவும் மகிழ்ச்சியடைகின்றேன், ஆனல் அவரை நான் மணம்

புரிந்துகொள்ளமாட்டேன்" என்று தமக்குப் பழக்க மானவரைக் குறித்து ஒரு மாது கூறினர். "மணக்க மறுப்பதேன்" என அவரை வினவியபோது, "அவரிடம் மெய்யோசை யில்லை" என்பதே அவர் கூறிய பதிலாகும்.

"மெய்யோசை எழுதல்" என்பது பொருள் பொதிந்த சொல்லாகும். நாணயத்தைச் சுண்டிப் பார்க்கும்போது அது தரக் குறைவான உலோகப் பொருளின் கலப்பின்றி முழுவதும் தூய்மையான உலோகப்பொருளால் ஆக்கப்பட்டதென்பதைப் புலப் படுத்தும் ஓசையை எழுப்புவதையே இது குறிப்பிடு கின்றது. அது படித்தரத்திற்கு வந்துவிடுவதால், எவ்வி டத்தும், எல்லாவிடத்தும் செல்லுபடியாகி விடும்.

மனிதர் நிலையும் அதுவே. அவர்களுடைய சொற் களும், செயல்களும் அவர்களுக்கே சொந்தமான தனிப் பட்ட செல்வாக்கையே வெளிப்படுத்துகின்றன. பிற மனிதரனைவரும் உள்ளூரச் செவிமடுத்து இயல்புணர் வாகவே கண்டுகொள்கின்ற செவிப் புலனுகாத ஓர் ஓசை அவர்களிடமிருக்கின்றது. மெய்யான ஓசை யினின்றும் பொய்யான ஓசையை அவர் பிரித்தறிந்து விடுவர்; எனினும், தாம் அறிந்துகொண்டது எவ்வா றென அவர் அறியமாட்டார். ஓசைகளிலுள்ள மிகமிக நுண்ணிய வேறுபாடுகளைப் புறச்செவி உணர்ந்தறிதல் போன்று, ஆன்மாக்களிடையுள்ள நொய்தான வேறு பாடுகளை அகச்செவி உணர்ந்தறியவியலும். ஏமாற்று பவனைத் தவிர இறுதியில் ஏமாற்றப்படுபவர்கள் யாருமே இலர். இயல்பார்வமற்றவர்கள் தமது வெற்றிகரமான பாசாங்குகளைக் குறித்துத் தம்மைத்

தாம் தற்புகழ்ச்சி செய்து கொள்வதால் அவர்கள் ஏமாற்றிக்கொள்வது தம்மையே யன்றிப் பிறரை யல்ல; இஃது அவர்களுடைய கண்மூடித்தனமான மடமையாகும். அவர்களுடைய செயல்கள் ஒளிப்பு, மறைப்பின்றி அப்படியே எல்லா இதயங்களின் முன்பும் வைக்கப்படுகின்றன. மனிதனின் இதயத்துள் ஒரு தீர்ப்புரிமை மன்றமிருக்கின்றது; அதனுடைய தீர்ப்புக்கள் தவறுடையனவாய் ஆவதில்லை. புலன்கள் தவறின்றிக் கண்டுகொள்ளக் கூடுமெனின், ஆன்மா தவறின்றிப் புரிந்துகொள்ளாதோ! இந்த அகத் தவறின்மை மனிதஇனக் கூட்டுத் தீர்ப்புரையின்கண் காணக்கிடக்கின்றது. இத் தீர்ப்புரை நிறைவானது; இலக்கியம், கலை, விஞ்ஞானப், புனைவு, சமயம் ஆகிய அறிவின் ஒவ்வொரு துறையிலும், தீமையினின்றும் நன்மையை, தகுதியில்லாதனவற்றினின்றும் தகுதி யுள்ளனவற்றை, பொய்ம்மையினின்றும் மெய்ம்மை யைப் பகுத்துப் பின்னதை முனைப்பார்வமுடன் காத்துக் காப்பாற்றவும், முன்னதை அழிந்துபட விட்டுவிடவும் செய்கின்ற அளவிற்கு அத்துணை நிறைவானதாகும். மேம்பட்ட மனிதரின் பணிகள், சொற்கள், செயல்கள் இவை மனிதஇன மரபுரிமைக ளாகும்; மனித இனம் இவற்றின் பயனைக் குறித்துக் கவனமற்றிருப்பதில்லை. ஒரு நூலை ஆயிரம் மனிதர் எழுதுகின்றனர்; ஒன்றே ஒன்றுதான் தோற்றுவாய்த் திறனுடைய படைப்பாகவிருக்கின்றது; எனினும், அந்த ஒன்றை மனித இனம் தனியாகப் பொறுக்கி யெடுத்துப் போற்றிப் பேணிக் காக்கின்றது; அதே வேளையில் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன் பது சார்பெழுத்தாளர்களைச் சூனியமாக்கி விடு

கின்றது. ஒரே மாதிரியான சூழ்நிலையில் பத்தாயிரம் மக்கள் ஒரு வாக்கியத்தைக் கூறுகின்றனர்; அவற்றில் ஒன்றே ஒன்றுதான் தெய்வீக அறிவொளியுடையதாக விருக்கின்றது; எனினும், பின் மரபினருக்கு வழி காட்டுவதற்காக மனித இனம் அந்த ஒன்றைமட்டும் தனியாகப் பொறுக்கி யெடுத்து விடுகின்றது; அதே போது, பிற வாக்கியங்கள் பின்பு கேட்கப்படுவதே யில்லை. மனித இனம் தன் ஞானியரைக் கொன்று விடுகின்றது என்பது உண்மையே; ஆனால், அக்கொலை யுங் கூட மெய்யோசையைத் தெளிவுபடுத்தும் தேர் வாகி விடுகின்றது; மனிதர் அதன் மெய்ம்மையைக் கண்டு பிடித்து விடுகின்றனர். கொலையுண்டவன் படித் தரத்திற்கு வந்துவிட்டான்; அவன் கொலையுண்ட செய்கை அவனுடைய மேன்மைக்குப் பிழைபடாத சான்று தேடித் தருவதாகப் பாதுகாக்கப்படுகின்றது.

தூய்மையான நாணயம் மனிதர் அனைவரிடை யேயும் புழங்கப்பட்டு அதன் பெறுமானத்திற்காக மதிக்கப்படுகின்ற வேளையில் போலிநாணயம் கண்டு பிடிக்கப்பட்டு உலோக முருக்கும் பானையில் எறிந்து விடப்படுதல் போன்று, போலியான சொல்லோ, செயலோ அன்றிக் குணவியல்போ உணர்ந்தறியப் பட்டு, உண்மையற்ற, சத்தியற்ற, இறந்துபட்ட ஒரு பொருளாக அது தோன்றிய வெறுமையின் கண் ணேயே வீழ்ந்து மடிய விட்டுவிடப்படுகின்றது.

அரும்பொருள் தொகுதியாயினும் சரி, மனித ராயினும் சரி, போலிப்பொருள்களுக்கு மதிப்பில்லை. உண்மையான பண்டமாகத் தேர்வுபெற முயலுகின்ற போலிப் பொருள்களைக் கண்டு நாம் வெட்கமுறுகின் ரேம். போலித்தன்மை இழிவானது. ஏமாற்றித்

திரிபவன் ஒரு வசைச்சொல்லுக் காளாகிவிடுகின்ருன்; அவன் மற்ற மனிதரைவிட அருகதை குறைந்தவன்; அவன் ஒரு நிழல், பேய், முகமூடி. உண்மைப் பான்மை மதிப்பிற்குரியது. நல்லிதயங் கொண்ட மனிதன் ஓர் எடுத்துக்காட்டாகிவிடுகின்ருன்; அவன் ஏனைய மனிதரைவிட அருகதை மிகுந்தவன்; அவன் ஒருமெய்ம்மை, சக்தி, உருவமைப்பு நியதி. போலித் தன்மையால் அனைத்தும் அழிந்துவிடுகின்றன. தனித் தன்மை கூடத் தேய்ந்து மறைந்துவிடுகின்றது. ஏனெனின், போலித் தன்மை, சூனியம், வெறுமை, உண்மைப் பான்மையால் ஒவ்வொன்றும் பெறப்படு கின்றது. உண்மைப் பான்மை உறுதியானது, நிலையானது, மெய்யானது.

நாம் மெய்யியல்புடையோராய் இருத்தல் வேண்டு மென்பதும், நாம் இயல்பாயிருப்பதினின்றும் மாறுபட் டவகையில் தோற்றமளிக்க வேண்டுமென்ற விருப்பம் கொண்டிருத்தல் கூடாது என்பதும், எந்த அறத்தை யேனும் பாசாங்கு செய்வதோ, எந்த மேம்பாட்டை யேனும் பாசாங்கு செய்வதோ, எந்தப் பொய்க்கோலத் தையேனும் புனைந்துகொள்வதோ கூடாது என்பதும் அதிமுக்கியமானதாகும். உலகத்தையும், உலகத்தின் என்று மிறவா நியதியையும் தான் ஏமாற்றிவிடலா மெனக் கபடன் எண்ணுகின்ருன். அவனை ஏமாற்று கின்ற ஒருவன் இருக்கவே செய்கின்ருன்; அஃது அவனே யாகும்; அதற்காக உலகநியதி தன் நேர்மையான தண் டனையை அளித்துவிடுகின்றது. அளவிறந்து கொடி யோராயிருப்போர் அழிவுற்றுவிடுகின்றனர் எனப் பழமையான ஒரு கோட்பாடு உண்டு. பாசாங்குக் காரனுக இருப்பதென்பது மனிதன் தன்னுல் இயலு

கின்ற அளவிற்கு அழிவை அடுத்து வருதலாகும் என்றே நான் கருதுகின்றேன்; ஏனெனின், அங்ஙிலே ஒருவகையில், மனிதன் மறைந்து அவனுடைய இடத்தில் கள்ளத்தனத்தின் கானல் நீரே காணக் கிடக்கின்ற நிலையாகும். எத்துணையோபேர் எண்ணியெண்ணி அஞ்சுகின்ற அழிவென்னும் நரகத்துள் அவன் வீழ்ந்துவிட்டான்; அத்தகைய மனிதன் ஆக்கமுறுவான் எனக் கருதல் நிழல்கள் ஆட்களின் பணியைச் செய்து மெய்யான மனிதரைப் பெயர்த்துத் தாமிடம் பெறும் எனக் கருதுவதற்கொப்பேயாகும்.

போலித்தனங்களாலும், பொய்த் தோற்றங்களாலும் வெற்றிகரமான வாழ்க்கைப் போக்கை உருவாக்கிவிட முடியுமென எம்மனிதனுகிலும் எண்ணுவானேயாயின், நிழல்கள் என்னும் ஆழ்ந்த குழிக்குள் அவன் அமிழ்ந்து விடுவதற்கு முன் தயக்கங் கொள்ளட்டும்; ஏனெனின் இயல்பார்வமின்மையில் கெட்டியான நிலத்தளம் கிடையாது; மூலாதாரம் கிடையாது; மெய்ம்மை கிடையாது; அங்கு எப்பொருளும் நிலைகொள்ள எதுவுமே கிடையாது; கட்டப்பட கருப்பொருள் எதுவுமே கிடையாது; ஆனல், அங்குத் தனிமை, ஏழ்மை, அவமானம், குழப்பம், அச்சங்கள், ஐயப்பாடுகள், ஏக்கங்கள், புலப்பங்கள் இவையுள்ளன; ஏனெனின், பிற அனைத்தையும்விட இழிந்த, இருண்ட, அற்பமான ஒரு நரகம் உண்டெனின், அஃது இயல்பார்வமின்மை என்னும் நரகமேயாகும்.

இயல்பார்வமுடைய மனிதனின் மனத்தை அழகான நான்கு சிறப்புக் குணங்கள் அணி செய்கின்றன. அவையாவன:—

1. எளிமை
2. கவர்ச்சி
3. மதிநுட்பம்
4. சத்தி

எளிமையென்பது இயற்றன்மையே. அது, பொய்த் தோற்றமோ அன்றி அயலான அலங்காரமோ இன்றி வெறுமனே உள்ளவாறிருத்தலேயாகும். இயற்கையின் கண்ணுள்ள பொருட்கள் அனைத்தும் அழகுடையனவாயிருப்பதேன்? ஏனெனின், அவை இயற்கையாயிருப்பவை. அவற்றை நாம் அவையிருக்கின்றபடியே காண்கின்றேமேயன்றி, அவை தோற்றமளிக்க வேண்டுமென்று அவை விரும்பக்கூடும் வகையில் காண்பதில்லை. ஏனெனில், உண்மையில் பிற இருப்பதனின்றும் மாறுபட்டுத் தோற்றமளிக்கவேண்டுமென்ற விருப்பம் அவற்றிற்குக் கிடையாது. மனித இனத்தின் வெளிப்புறத்து இயலுலகில் கபடம் எங்கனுமில்லை. கண்கள் அனைத்திற்கும் அத்துணை அழகாகத்தோன்றுகின்ற மலர் பாசாங்கு செய்யக்கூடுமெனின் அது தன் அழகை இழந்துவிடும். இயற்கையை நோக்குகின்றபோது நாம் மெய்ம்மையை நோக்குபவர்களாஇன்றேம்; அதன் எழிலும் நிறைவும் நம்மை மகிழ்வித்துத் திகைக்க வைக்கின்றன. எங்குமே ஒரு குறைபாட்டை நாம் காணவியலாது; அதோடு, எப்பொருளையும் மிகச் சிறுதரத்திற்கேனும் செம்மையாக்கக் கூடாத நமது தகுதியின்மையையும் நாம் உணர்ந்திருக்கின்றேம். ஒவ்வொன்றும் அததற்கே உரித்தான தனிப்பட்ட நிறைவைக்கொண்டு தன்னுணரா எளிமையெனும் எழிலுடன் மிளிர்கின்றது.

“இயற்கைக்கே திரும்புதல்” என்பது தற்போதையச் சமூக முழக்கங்களில் ஒன்றாகும். அது நாட்டுப்புறத்தில் ஒரு குடிசையும், பயிர்வளர்க்கச் சிறு

பகுதி வயலும் கொண்டிருத்தலையே குறிப்பதாகப் பொதுவாகப் புரிந்து கொள்ளப்படுகின்றது. நம்முடன் நம் கபடங்களையும் நாம் கொண்டுசெல்வதாயிருப்பின் நாட்டுப் புறத்திற்குச் செல்வது சிறிதளவு பயனுடையதாகவேயிருக்கும்; நம்முடன் பற்றிக் கொண்டிருக்கும் எந்தப் பகட்டையும் நாமிருக்கின்ற இடத்திலேயே முழுக்கிடுதலே சிறப்புடைத்து. சமூக வழக்க முறைகளின் சுமையாலழுந்துவதாகக் கருதுவோர், நாட்டுப் புறத்திற்குச் சென்று இயற்கையின் அமைதியை நாடவேண்டுமென்பது நன்மையானதே; ஆனால், அதை எளிமைக்கும், மெய்ம்மைக்கும் நம்மை மீட்டுத்தருகின்ற உட்புற நற்கதியின் கருவியாகக் கொள்வதன்றி, வேறு எதற்காக இருப்பினும் அது தோல்வியடைந்துவிடும்.

விலங்கின உலகின் இயற்கையான எளிமையினின்றுமே மனித இயல்பு அலைந்து திரிந்திருக்கின்றதெனினும், அஃது, ஓர் உயர்வான, ஒரு தெய்வீக எளிமையை நோக்கியே சென்று கொண்டிருக்கின்றது. பெருந்திறலோர்களாக இருக்கும் மக்கள் தமது இயற்கையான எளிமையின் காரணமாகவே அத்தகைமையினரா யிருக்கின்றனர். அவர்கள் பாசாங்கு செய்வதில்லை ; இயல்பாகவிருக்கின்றனர். சிறுமதியுடைய மனங்கொண்டோரே நாகரிகம் கற்று நடைமுறைப்படுத்துகின்றனர். உலக மேடையில் கவர்ச்சியுடைய ஓர் ஆளாகத்தோன்ற வேண்டுமென அவர்கள் விரும்புகின்றனர்; திருநிலையில்லா அவ்விருப்பத்தால் அவர்கள் மட்டமான நிலைக்கே ஊழ்வலியால் உந்தித் தள்ளப்படுகின்றனர். "பொன்றுப் புகழ்பெறும் பாசுரமொன்றை எழுதும் திறமை பெற என் வாழ்வின்

இருபது ஆண்டுகளை நான் செலவிடுவேன்" என அண்மையில் ஒரு மனிதர் என்னிடம் கூறினார். அத்தகைய புகழார்வம் கொண்ட மனிதர் பாசுரம் எழுத வியலாது. அவர் தோரணை காட்ட விரும்புகின்றார். அவர் தம்மையும், தம் மேன்மையையும் குறித்தே நினைத்துக் கொண்டிருக்கின்றார். பொன்றாப் புகழ் பெறும் பாசுரத்தை எழுதுவதற்கோ, அன்றிப் பொன்றாப் புகழ்பெறும் எப்பணியேனும் செய்தற்கோ மனிதன் தன் வாழ்வின் இருபது ஆண்டுகளைப் புகழார்வத்திற்குத் தரவேண்டுவதில்லை; தன் வாழ்வு முழுவதையுமே மனிதத் தன்மைக்காகச் செலவிடவேண்டும். தான் சிறப்புடையதாக எதையேனும் செய்யவியலும் என்பதை மறந்துவிடவேண்டும்; பத்தாயிரம் துன்பப் பாடான அனுபவங்களினின்று, பத்தாயிரம் தோல்விகளினின்று, பத்தாயிரம் வெற்றிகளினின்று, பத்தாயிரம் களிப்புக்களினின்று பாடவோ, சித்திரம் வரையவோ, எழுதவோ வேண்டும். அவன் ஜெத்ஸெமியினை அறிந்துகொள்ள வேண்டும்; குருதியும், கண்ணீரும் சிந்த உழைக்கவேண்டும்.

தன் ஆய் பண்பும், ஒழுக்கச் சத்திகளும் தன்னை விட்டு நீங்காது கொண்டு, எளிமைக்கு மீளுவதிலேயே ஒருமனிதன் மேன்மையடைகின்றான். மெய்ம்மையான எதையுமே அவன் இழப்பதில்லை. குணவியல்பென்னும் படித்தரமான தங்கத்தைப் புலப்படுத்தும் வகையில் கள்ளத்தனங்கள் மட்டுமே களைந்தெறியப்படுகின்றன. மெய்யார்வம் எங்குள்ளதோ அங்கு எப்போதும் எளிமையும் இருக்கும்; அஃதாவது, நாம் இயற்கையின்கண் காண்பதுபோன்ற எளிமை, மெய்ம்மையின் எழில் சேரும் எளிமை அங்கிருக்கும்.

கவர்ச்சி எளிமையின் நேரடியான விளைவாகும். நாம் குறிப்பிட்டுக் காட்டியுள்ளபடி இயற்கைப் பொருட்கள் அனைத்திலுமுள்ள கவர்ச்சியில் இதைக் காணலாம்; ஆனால், மனித இயல்பில் இது தனி முறைச் செல்வாக்காக வெளிப்படுகின்றது. அண்மையாண்டுகளில் போலிச் சித்தர் சிலர் "தனி முறைக்காந்தத்தின்" மருமத்தைக் குறிப்பிட்ட தொகைக்கு விற்பதாக விளம்பரஞ் செய்து வருகின்றனர்; கவர்ச்சியை வாங்கவும், விற்கவும், சுண்ணமும் வண்ணமும் போல் பூசவும், போக்கவும் முடியுமாறு போல, தருக்குடைய மக்கள் சில "சித்து" முறைகளில் தம்மைப் பிறர்க்குக் கவர்ச்சியுடையோராய் ஆக்கிக் கொள்வது எவ்வாறு என்பதை அதன்மூலம் காட்டுவதாக அவர்கள் பறைசாற்றுகின்றனர். மேலும், கவர்ச்சியுடையோராய் கருதப்பட வேண்டுமெனத் துடிப்போர் அவ்வாறு ஆதலுமரிது; ஏனெனின், அவருடைய தற்செருக்கே அதற்கொரு தடை வேலியாகும். கவர்ச்சியுடையோராய்க் கருதப்பட வேண்டுமென்ற விருப்பமே ஒரு மோசடி; அது எண்ணிறந்த மோசடிகளைச் செய்ய வழி கோலுகின்றது. மேலும் உண்மையான கவர்ச்சிகளும், குணவியல்புச் சிறப்புகளும் தம்மிடம் இல்லாதிருப்பதைத் தாம் உளமார உணருவதால், அதற்குப் பகரமான ஒன்றை நாடுதலையே அங்கிலை உணர்த்துகின்றது; ஆனால், மன அழகிற்கும், குணவியல்பு வலிமைக்கும் பகரமே கிடையாது. நுண் திறமையைப் போன்றே கவர்ச்சியும் பற்றுக்கொள்வதாலேயே பறிபோய்விடுகின்றது; குணவியல்பைப் பொறுத்து மிகுதியான திண்மையும், மெய்யார்வமும் கொண்டு நாடுவோரே

அதைப் பெற்று நுகருகின்றனர். நாம் மெய்யார்வம் என்றழைக்கின்ற மனநிறைவும், இதயமுழுமையும், கொண்ட கவர்ச்சிச் சத்திக்கு ஒப்புமை கூற மனித இயல்பின்கண் எதுவுமே இல்லை; திறமைக் கூறோ, ஆய் பண்போ, பற்றுசையோ, தோற்றவெழிலோ எதுவுமே ஒப்புமை கூற வியலாது. மெய்யார்வமுடைய ஆண்மகனையோ அன்றிப் பெண்ணையோ பொறுத்து என்றென்றும் நிலைக்கின்ற ஒரு கவர்ச்சிக் கூறுள்ளது; அவர்கள் தம்மை மனித இயல்புக்குச் சிறந்த எடுத்துக் காட்டுகளாகத் தோற்றுவிக்கின்றனர். மெய்யார்வம் தவிர்ந்த தனிமுறைக் கவர்ச்சிக் கூறு வேறதுவுமே இருக்க வியலாது. அறிவு மயக்கம் இருக்கலாம்; இருக்கவே செய்கின்றது; ஆனால், மெய்யார்வமுடைய மக்கள் இணைக்கப் பெற்றிருக்கின்ற பிரிக்கவியலாத தளையினின்றும் அது பெரிதும் மாறுபட்டதாகும். அறிவு மயக்கம் துன்பந் தோய்ந்த மருட்சி நீக்கத்தில் முடிவுறுகின்றது; ஆனால், மெய்யார்வம் கொண்ட ஆன்மாக்களிடையே எதுவுமே மறைக்கப் படாததாலும், அவர்கள் மெய்ம்மையென்னும் திண்மையான நிலத்தளத்திலே நிலைபெற்றிருப்பதாலும், மடியச் செய்யப்பட வேண்டிய மருட்சி எதுவுமே கிடையாது.

மனிதரிடையேயுள்ள தலைவர்கள் தமது மெய்யார்வச் சத்தியாலேயே பிறரைக் கவருகின்றனர்; அவர்களுடைய கவர்ச்சிச் செல்வாக்கின் அளவே அவர்களுடைய மெய்யார்வத்தின் அளவாகும். ஒரு மனிதனின் ஆய்பண்பு எத்துணைச் சிறப்புடையதாயினுஞ் சரியே, அவன் மெய்யார்வம் கொண்டிரா விட்டால் அவன் ஒரு நிலையான தலைவராகவும்,

மக்கள் வழிகாட்டியாகவும் என்றுமே இருக்க வியலாது. குறிப்பிட்ட காலத்திற்கு அவன் புக ழென்னும் நீரோட்டத்தில் இன்பமாக மிதந்து செல்வ துடன், தான் பாதுகாப்பாக விருப்பதாகவும் நம்பலாம்; ஆனால், பொதுமக்களின் வெறுப்பால் விரைவில் வீழ்ச்சியடையவே அந்த நம்பிக்கை ஏதுவாக இருக்கும். வண்ணப்பூச்சினை ஒத்த தன் வெளித் தோற்றத்தால் அவன் நெடுநாள் மக்களை ஏமாற்ற வியலாது. விரைவில் அவர்கள் அவன் இயல்பினை நோக்கி எவ்விதப் போலிப்பொருளால் உருவாக்கப் பட்டிருக்கின்றான் என்பதைக் கண்டுகொள்வர். அவன் வண்ணம் பூசிய பெண்ணைப்போன்றவனே யாவான். அவள் தன்னுடைய மேனி வண்ணத்திற்காகவே தான் போற்றப்படுவதாக எண்ணுகின்றாள்; ஆனால், அது வண்ணப்பூச்சென அனைவரும் அறிவர்; அதற் காக அவளை வெறுப்பர். அவளைப் போற்றுதற்கும் ஒருவருண்டு; அவர் யார்? எனின் அவளேயாகும். மெய்யார்வமில்லாதோர் தம்மைத் தாமே சிக்க வைத்துக்கொள்கின்ற எல்லைக் கோடான நரகம் தற்புகழ்ச்சியென்னும் நரகமேயாகும்.

மெய்யார்வமுடைய மக்கள் தம் திறமைக் கூறு, தம் சிறப்பாற்றல், தம் அறப்பாங்கு, தம் அழகு இவற்றைக் குறித்து நினைப்பதேயில்லை; அவர்கள் தம்மைக் குறித்து முனைப்புணர்வு இல்லாதோரா யிருப்பதாலேயே, அனைவரையும் கவருவதுடன் அவர்களின் நம்பிக்கை, பாசம், மதிப்பு இவற்றையும் பெற்றுக்கொள்கின்றனர்.

மதிநுட்பம் மெய்யார்வ முடையோர்க்கு உரித் தானது. அவர்கள் முன்னிலையில் பாசாங்குகள்

அனைத்தும் வெளிப்பட்டு விடுகின்றன. மெய்யார்வ முடைய மனிதனின் ஆய்ந்துணருங் கண்ணிற்குப் பாசாங்குக் காரர்கள் அனைவரும் தெளிவாகப் புலப் பட்டுவிடுகின்றனர். தெளிவான ஒரே பார்வையில் அவன் அவர்களுடைய பகட்டுகளை யெல்லாம் நன்கறிந்துவிடுகின்றான். அவனுடைய உறுதியான கண்ணோக்கின் எதிரே எத்தர்கள் வதங்கி வாடுகின் றனர்; அவர்கள் அதனினின்றும் தப்பியோடவே எண்ணுகின்றனர். தன் இதயத்தினின்றும் போலித் தனங்கள் அத்தனையும் நீக்கிவிட்டு, உண்மையானதை மட்டும் கைக்கொள்பவன், பிறரிடத்துள்ள போலி யையும்உண்மையையும் பிரித்துணருஞ் சத்தியைப் பெற்றுவிடுகின்றான். தன்னைத் தான் ஏமாற்றிக் கொள்ளாதவன் பிறரால் ஏமாற்றப்படுவதேயில்லை.

மனிதர் இயற்கைப் பொருள்களைக் கண்ணுற்ற வேளையிலேயே, அது பாம்பு, பறவை, குதிரை, மரம், உரோசா எனத் தவறின்றிப் பிரித்துணர்தல் போன்று மெய்யார்வமுடைய மனிதன் பல்வகைக் குணவியல்புகளையும் பகுத்துணருகின்றான். ஓர் அசைவில், ஒரு பார்வையில், ஒரு சொல்லில், ஒரு செயலில் மனிதனின் இயல்பை அவன் அறிந்து அதற்குத்தக நடந்துகொள்கின்றான். ஐயப்பாட்டிற்கு இடமின்றி அவன் பாதுகாப்புடன் இருந்து கொள் கின்றான். அவநம்பிக்கைக்கு ஆளாகாமலே அவன் பாசாங்குக்காரனுக்காக ஆயத்தமாக விருக்கின்றான். அவன் செயலில் ஈடுபடுவது உறுமறையான அறிவின் அடிப்படையிலேயேயன்றி எதிர்மறையான ஐயப் பாட்டின் அடிப்படையிலன்று. மக்கள் அவனிடம் ஒளிவு மறைவின்றிப் பழகுகின்றனர்; அவன் அவர்

களின் உண்ணிலைகளைக் கற்றறிந்து விடுகின்றான். அவனுடைய மதிநுட்பமான தீர்ப்பு செயல்களின் மையத்திற்கே ஊடுருவிச் சென்று அவை இருக்கின்ற வாறே அவற்றுடன் தொடர்புகொள்ள வழி செய் கின்றது. நேரடியானதும், தெளிவானதுமான அவ னுடைய நடத்தை பிறரிடத்து நன்மையை வலுப் படுத்துகின்றது; தீயோரை இழிவு படுத்துகின்றது, இதயத்திலும் சிந்தனையிலும் அவன் கொண்டிருக் கின்ற நிறைவுடைமையை இன்னும் பெறுதோர்க்கு அவன் வலிமையூட்டும் ஓர் ஊன்று கோலாகவும் இருக்கின்றான்.

சக்தி மதிநுட்பத்தோடு இணைந்தே செல்லு கின்றது. செயல்களின் தன்மையைப் புரிந்து கொள்ளும் நிலையானது, செயல்கள் அனைத்தையும் நேர்மையானதும், சிறப்புடையதுமான வழியில் எதிர்ப்பட்டு ஈடுபாடு கொள்ளும் சக்தியுடன் இணைந்தே வருகின்றது. எப்போதும் அறிவே சக்தியாகும்; ஆனால், செயல்களின் தன்மையைப் பொறுத்த அறிவு தலைசிறந்த சக்தியாகும்; அதனைக் கொண்டிருப்போன் இதயங்கள் அனைத்திற்கும் ஓர் ஆற்றலாகி விடுவதுடன், அவற்றின் செயல்களை நன்மையான வகையில் திருப்பியும் விடுகின்றான். அவனுடைய ஊனுடல் மறைந்த நெடுநாட்களுக்குப் பின்பும், அவன், பின்னும் நன்மைகளை உருவாக்குஞ் சக்தியாக இருந்துவருகின்றான்; மக்களின் மனங்களில் நுட்பமாக இயங்கி விழுமிய பயன்களுக்காக அவர்களை உருவாக்கும் ஓர் ஆன்மீக மெய்ம்மையாக இருந்து வருகின்றான். முதலில் அவனுடைய சக்தி ஓரிடத்திற் குரியதாயும், வரையறைக்குட்பட்டதாயுமே இருக்

கின்றது; ஆனால், அவன் முடுக்கிவிட்ட நேர்மை யென்னும் சுற்றுவட்டம் உலக முழுமையும் தழுவுகின்றவரையில் தொடர்ச்சியாக விரிவடைந்து கொண்டே இருக்கின்றது; மனிதர் அனைவரும் அதன் வயப்படுகின்றனர்.

மெய்யார்வமுடைய மனிதன் தான் செய்பவை அனைத்திலும், தான் தொடர்பு கொள்ளுகின்ற மக்கள் அனைவரிடமும் தனது குணவியல்பைப் பொறித்துவிடுகின்றான்; ஒரு காலத்தில் அவன் ஒரு சொல்லைக் கூறுகின்றான்; அது எவருடைய மனத்தி லேனும் பதிந்து விடுகின்றது; அதன் செல்வாக்கு ஒருவரிடமிருந்து மற்றொருவரிடமாக அறிவிக்கப்படு கின்றது; பத்தாயிரம் மைல்களுக்கப்பால் நம்பிக்கை யிழந்து நிற்கும் ஒரு மனிதர் இதைக் கேள்வியுற்றுத் தம்மைச் சீர்படுத்திக் கொள்கின்றார். அத்தகைய சத்தியே ஓர் ஆக்கமாகும்; அதனுடைய பெறுமானம் நாணயத்தால் மதிப்பிடக் கூடாதது. குணவியல் பென்னும் விலைமதிக்க முடியாத மாணிக்கங்களைப் பணத்தால் கொள்முதல் செய்யவியலாது; ஆனால் நேர்மையான உழைப்பிற்கு அஃது இயலுவதாகும். தன்னைத் தானே மெய்யார்வமுடையவனாக ஆக்கிக் கொள்பவன், தன் வாழ்நாள் முழுவதும் ஓர் உர மான நிறைவைப் பெற்றுத், தனிச் சிறப்பு வாய்ந்த வெற்றியும், அரிய சத்தியுமுடைய மனிதனாகி விடுகின் றான். மெய்யார்வமென்னும் வலிமையான தூண் அத்திறத்ததாகும். ஒரு முறை அது முழுமையாக எழுப்பப்பட்டுவிட்டால் ஆக்கமெனும் ஆலயம் உத்தர வாதம் பெற்று விடுகின்ற அளவிற்கு அதன் ஆதரிப்புச் சத்தி அத்துணை மேம்பட்டதாக விருக்கின்றது.

அதன் சுவர்கள் பொடிந்து விழுவதில்லை; அதன் உத்தி ரங்கள் உரங் கெடுவதில்லை ; அதன் கூரை கீழே விழ்ந்துவிடுவதில்லை. மனிதன் வாழுகின்ற போது அது நிலைத்து நிற்கும்; அவன் மறைந்த பின்னரும் பல தலைமுறைகள் பிறர்க்குத் தஞ்சமும், அடைக்கல மும் தொடர்ந்து அளித்துக்கொண்டே வரும்.

---

# 7. நடுநிலை

தப்பெண்ணம் தவிர்த்திடுதலே ஒரு பெரும் பேருகும். தப்பெண்ணம் மனிதனின் பாதையில், உடல் நலம், வெற்றி, மகிழ்ச்சி, ஆக்கம் இவற்றிற் கெதிராக இடையூறுகளைக் குவிக்கின்றது; ஆகவே, தன்னுடைய மனக்கற்பிதமான பகைவர்களுக்கு எதிராக அவன் தொடர்ந்து போட்டியிடுபவனாகி விடுகின்றான்; தப்பெண்ணம் நீக்கப்பட்டுவிடின் அவர்கள் நண்பர்களாகவே தோற்றமளிக்கின்றனர். தப்பெண்ணமுடைய மனிதனுக்கு வாழ்வு ஒரு விதமான தடை கடப்புப் பந்தயமாகி விடுவது உண்மையே; தடைகளைக் கடந்துசெல்ல முடியாததும் குறிக்கோளை அடைய முடியாததுமான ஒரு பந்தயம்; நடுநிலையுடைய மனிதனுக்கு அவன் வாழ்வு. மனத்திற்குகந்த நாட்டினில் நாள்முடிவில் உணவும், ஓய்வும் கிடைக்கக் கூடிய ஒரு நாளைய நடையேயாகும்.

மனிதன் நடுநிலையெய்த வேண்டுமெனின், தனது சொந்தப் போக்குப்படியன்றிப் பிற எப்போக்குப் படியும் எதையும் காணுவதைத் தடுக்கின்ற உள்ளார்ந்த அகந்தையை அவன் அகற்றியாக வேண்டும். அஃது ஒரு பெரும் பணியென்பது உண்மையே; ஆனால் மேம்பாடானது; உடனே செய்து முடிக்கக் கூடாததாயினும் இப்போதே தொடங்கிவிடுதற்கு உரியதாகும். மெய்ம்மையால் "மலைகளையும் அகற்றிவிட" முடியும்: தப்பெண்ணம் மனத்தின் மலைத்தொடர்ச்சியாகும்; ஒருதலைச்சார்பானவன் அதற்கு அப்பால் காணுவதோ, அதற்கு அப்பாலும் உண்டு என நம்பு

வதோ இல்லை. எவ்வாறெனினும், இந்த மலைகள் அகற்றப்பட்டுவிடின், உற்றுநோக்குகின்ற கண்களை மகிழ்விக்கும் வகையில், ஒளியாலும் நிழலாலுமான, நிறத்தாலும் குரலாலுமான மேன்மையான ஓவியமாக மனவகைகள் ஒருங்கிணைக்கப்பட்டுள்ள முடிவற்ற ஒளி காட்சிக்குரியதாய்த் திறந்து வைக்கப்படுகின்றது.

பிடிமுரண்டான தப்பெண்ணத்தைப் பற்றிக் கொண்டிருப்பதால் எத்துணையோ களிப்புகள் இழக்கப்படுகின்றன, எத்துணையோரின் நட்பை இழக்கவேண்டியுள்ளது. எத்துணைப் பெரிய மகிழ்ச்சியும் ஊறுபடுத்தப்படுகின்றது. எத்துணை ஆக்கங்கள் அழிக்கப்படுகின்றன; எனினும், தப்பெண்ணத்திலிருந்து விடுபட்டுத் தனித்து நிற்பது அரிய காரியமாகும். தமக்கு அக்கறையுள்ள காரியங்களைக் குறித்து வாதிடுகையில் தப்பெண்ணம் கொண்ட ஒரு தலைச் சார்பினராக இல்லாதோர் ஒரு சிலராகவே இருக்கின்றனர். நிகழ்ச்சி அனைத்தையும் கருத்தில் கொண்டு, காரியத்தில் உண்மையைக் காணும் பொருட்டுச் சான்றுகள் அனைத்தையும் சீர்தூக்கித் தனது காரியத்தைக் குறித்து இருசார்பிலும் நடுநிலை உணர்வுடன் உரையாடுபவனை ஒருவன் மிக அரிதாகவே காணுகின்றான். ஒரு தலைச் சார்பினன் ஒவ்வொருவனும் தனது சொந்த வாதத்தையே நிலைநாட்ட முனைகின்றான். அவன் உண்மையைத் தேடிக் கொண்டிருக்கவில்லை. ஏனெனின், தனது சொந்த முடிவே உண்மை, பிற அனைத்தும் பொய் என அவன் ஏற்கனவே ஏற்றுக் கொண்டுவிட்டான்; ஆனால், அவன் தன்னுடைய வழக்கையே வாதாடுவதுடன், வெற்றிக்காகவும் பாடுபடுகின்றான். மேலும், அவன் நிகழ்ச்சிகளை அமைதி

யுடன் அணிவரிசைப்படுத்தித்தான் கூறுவது உண்மை என்பதை விளக்கிக் காட்ட முயற்சி எடுத்துக் கொள்வதுமில்லை; ஆனால், மிகுதியாகவோ அன்றிக் குறைவாகவோ கடுப்பும், கலக்கமும் கொண்டு தனது கூற்றையே வாதிடுகின்றான்.

மனிதன் சில வேளைகளில் நிகழ்ச்சி இன்றி அறிவின் அடிப்படை எதுவுமின்றி ஒரு முடிவிற்கு வரவும், பின்பு அம்முடிவை ஆதரிக்காத எதையும் கருத்திற் கொள்ள மறுக்கவும் தப்பெண்ணம் வழி கோலுகின்றது. இவ்வாறாக அறிவைப் பெறுவதில் தப்பெண்ணம் ஒரு முழுத் தடைக் கல்லாகவிருக் கின்றது; அது மனிதனை இருளுடனும், அறியாமை யுடனும் இறுகப்பிணைத்து விடுவதோடு, உயர்ந்ததும் உன்னதமானதுமான திசைகளில் அவனுடைய மன வளர்ச்சியைத் தடைப்படுத்தி விடுகின்றது. இதற்கும் மேலாக, அது, மேம்பட்ட மனங்களுடன் அவனுடைய தொடர்பைத் தவிர்த்து, அவனுடைய சொந்த அகந்தையாகிய இருண்டதும், தனித்ததுமான சிறை யினுள் அவனைக் கட்டுப்படுத்தி விடுகின்றது.

புத்தொளி உள்ளே புகுவது, மிகுதியான அழகைக் கண்ணுறுவது, தெய்வீக இசையைச் செவி மடுப்பது ஆகிய இவற்றிற்கெதிராக மனக்கதவை மூடி விடுவதே தப்பெண்ணமாகும். ஒருதலைச் சார்பினன் தனது சிறிய நிலையற்ற உறுதியற்ற கருத்தை விடாமல் பற்றிக் கொண்டு அதுவே உலகின் மிகப்பெரிய காரிய மென எண்ணுகின்றான். தன்னுடையகூற்றை மனிதர் அனைவரும் சரியென ஒப்புக்கொள்ள வேண்டும் என்று எண்ணுமளவிற்கு அவன் தன் சொந்தத்

தீர்மானத்தின்மீது அத்துணை பற்றுக்கொண்டவனுக இருக்கின்ருன். (அஃது ஒருவகைத் தன்னலப் பற்றே யாகும்); அவன் காணுகின்றபடியே தாமும் காணுத மனிதரை அவன் ஏறத்தாழ அறிவிலிகளாகவே கருதுகின்ருன் ; அதே வேளையில், தன்னுேக்கத்தைப் பொறுத்துத் தன்னேடு ஒன்று சேருவோரின் நல்ல தீர்மானத்தை அவன் புகழுகின்ருன். அத்தகைய மனிதன் அறிவும் பெறவியலாது; உண்மையும் பெறவியலாது: மெய்ம்மையின் எல்லேக்குட்படாத கருத்தென்னும் கோளத்திற்குள் (தானே உண்டு பண்ணிக் கொண்ட பொய்த் தோற்றத்திற்குள்) அடைபட்டவனுக இருக்கின்ருன். வாழ்வின் சாதாரண உண்மைகளேக் கூட அவன் காணுதவாறு தடுக்கின்ற ஒரு வகையான மயக்கத்தில் நடமாடுபவனுகி விடுகின்ருன் : அதே வேளையில், வழக்கமாகவே ஏறத்தாழ ஆதாரமற்றதாகவே இருக்கின்ற அவனுடைய சொந்தக் கோட்பாடுகள் அவனுடைய மனதில் வலி மீறிய அளவிற்கு இடம் பெறுகின்றன. ஒவ்வொரு காரியத்திற்கும் ஒரு வழியே உண்டென்றும், தான் கருதுவதே அவ் வழி என்றும் பற்று மகுதியால் அவன் கருதுகின்ருன். ஒவ்வொன்றிற்கும் குறைந்தது இரு வழிகளேனும் உள்ளன ; அவ்விருவழிகளேயும் பரபரப்பினின்றும் நீங்கியவனுய், ஒன்றை மற்ருென்று மேலோச்சி நிற்க வேண்டும் என்ற விருப்பமின்றியும் கவனமாக ஆராய்பவனே அச்சங்கதியின் உண்மையைக் காணுபவனுவான்.

உலகின்கண் ணுள்ள வேறுபாடுகளேயும், மாறுபட்ட கருத்துக்களேயும் பொறுத்த அளவில் உலகம் ஒருவழக்கை எதிர்வாதிடுகின்ற இருவழக்கறிஞர்களேப்

போன்றதாகும். குற்றஞ்சாட்டும் வழக்குரைஞர் தமது பக்கத்தை மெய்யெனக் காட்டுதற்குவேண்டிய நிகழ்ச்சிகள் அனைத்தையும் முன்னிலைப்படுத்துகின்றார்; அதே வேளையில், எதிர்வாத வழக்குரைஞர் தமது வாதத்திற்கு ஆதாரமாயிருப்பவை யனைத்தையும் முன்னிலைப்படுத்துகின்றார் ; அவர்களிருவரும் ஒருவருக்கெதிராக ஒருவர் காட்டிய நிகழ்ச்சிகளைச் சிறுமைப்படுத்தவோ அன்றிப் புறக்கணிக்கவோ, அன்றிக் காரணங் காட்டி மறுக்கவோ செய்கின்றனர். எவ்வாறெனினும், வழக்கின் நீதிபதி மக்கள் நடுவேயுள்ள ஒரு தலைச்சார்பற்ற சிந்தனையாளரைப் போன்றவராகும் ; அவர் இரு தரப்பிலுமுள்ள சான்றுகள் அனைத்தையும் செவிமடுத்து, நீதி வழங்குதற்பொருட்டு ஒருதலைச் சார்பற்ற ஒரு குறிப்புரையை உருவாக்கும் வகையில் அவற்றை ஒப்பிட்டு ஆராய்கின்றார்.

பிரபஞ்சம் முழுவதும் காணக்கிடக்கின்ற இந்த ஒருதலைச்சார்பு தீயகாரியம் என்று சொல்வதற்கில்லை; ஏனெனின், பிற புறக்கோடிகள் அனைத்திலும் இருப்பதைப் போன்றே, இங்கும் எதிர்ப்புக்களையும் முரண்படு கட்சிகளையும் இயற்கை ஒரு நிறைவான சமநிலைக்குக் கொண்டு வந்து விடுகின்றது; மேலும், பரிணாமத்தில் இஃது ஒரு காரணக்கூறு; விருப்பாற்றலின்மூலம் சிந்தனையைத் தூண்டும் உரம் வாய்ந்த சத்தியை வளர்த்துக் கொள்ளாத மனிதரை இது சிந்திக்கத் தூண்டுகின்றது; அதனோடு இது மனிதர் அனைவரும் கடந்துதீரவேண்டிய ஒரு பருவநிலையுமாகும். ஆனால், இது மெய்ம்மையென்னும் மேம்பட்ட பெருவழிக்குச் செல்லுகின்ற ஒருபக்கவழியேயாகும். அஃதா

வது, சிக்கலான, குழப்பமான, துன்பந்தருகின்ற வழியாகும். நிறைவட்டமான நடுநிலையின் பிறைவடிவே இது; ஒருதலைச் சார்பினன் மெய்ம்மையின் ஒருபகுதியையே காணுகின்றான்; அதுவே முழுமையென எண்ணுகின்றான்; ஆனால், நடுநிலையுடைய சிந்தனையாளன் பகுதிகள் அனைத்தையும் உட்கொண்டிருக்கின்ற மெய்ம்மையின் முழுமையைக் காணுகின்றான். பகுதிகள் அனைத்தையும் திரட்டி நாம் அவற்றை ஒன்றாகச் சேர்த்து நிறைவான கோளத்தை உருவாக்கும் வரையில் மெய்ம்மையைப் பல பகுதிகளிலும் உள்ளவாறு காணுதல் இன்றியமையாததாகும்; அத்தகைய கோளத்தை உருவாக்குதலே நாம் நடுநிலையை அடைவதற்குரிய நெறியாகும்.

நடுநிலையுடைய மனிதன் தப்பெண்ணத்திலிருந்தும், விருப்பு, வெறுப்புக்களினின்றும் விடுதலை பெற்றுக் கூர்ந்தாராய்கின்றான்; சீர்தூக்கி மதிப்பிடுகின்றான்; சிந்திக்கின்றான். அவனுடைய ஒரே விருப்பம் மெய்ம்மையைக் கண்டுபிடித்தலேயாகும். முற்கற்பிதமாக அவன்கொண்டிருந்த எண்ணங்களை அவன் நீக்கிவிடுகின்றான்; நிகழ்ச்சிகளும், சான்றுகளும் தாமே தம் கூற்றை எடுத்துரைக்க விட்டுவிடுகின்றான். அவன் சாதித்துக் காட்டவேண்டுமென்று தனக்கென வழக்கெதுவும் வைத்திருப்பதில்லை; ஏனெனின், மெய்ம்மை மாற்றப்படவியலாதது, தன் கருத்துக்கள் அதற்கு வேற்றுமை கற்பிப்பதில்லை, அதைத் துருவித் தேடிக் கண்டுபிடிக்கக் கூடும் என்பதை அவன் அறிவான். அதன் காரணமாகப் பரபரப்பு மிக்க ஒருதலைச் சார்பிற்கு உள்ளாகின்ற பெருமளவு பண்பு முரண்பாடுகளினின்றும், நடுக்கத்தின் சேதாரத்தினின்றும்

அவன் தப்பிவிடுகின்ருன்; இதற்கும் மேலாக அவன் இயற்பொருளை நேருக்கு நேர் நோக்குகின்ருன்; ஆகவே, தெளிவும், அமைதியும் உடையவளுகி விடு கின்ருன்.

நடுவுநிலேயுடைய சிந்தனையாளன் எங்கிருப்பினும் விரைவிலோ அன்றிப் பின்னரோ உலகின் மதிப்பீட்டிலும், அதன் ஊழை வழிப்படுத்துவதிலும் அவன் மிக மேன்மையான நிலேயை வகிக்கப்போவதை உறுதியாகக் கொள்கின்ற அளவிற்குத் தப்பெண்ணத்திலிருந்து விடுபடுதல் அத்துணை அரிதானதாகும். அந்நிலே உலகியல் சார்ந்த காரியங்களில் ஒரு பதவியைப் பெறுவதாயிருக்கவேண்டுமென்பதில்லே; ஏனெனின், அது நிகழ்தற்கரிதானது; ஆனல், அந்நிலே செல்வாக்கில் ஒரு மேம்பட்ட நிலேயைப் பெறுவதேயாகும். தற்போது அத்தகைய ஒருவன் இருக்கலாம்; அவன் ஒரு தச்சனுக இருக்கலாம், ஒரு நெசவாளியாக இருக்கலாம், ஒரு கணக்கராக இருக்கலாம்; அவன் ஏழ்மையிலிருக்கலாம், கழிபெருஞ் செல்வரின் வீட்டிலே இருக்கலாம்; அவன் குட்டையாகவோ நெட்டையாகவோ இருக்கலாம். எந்நிறமும் உடையவனுக இருக்கலாம்: ஆனல், எந்நிலேயிலிருப்பினும், எங்கிருப்பினும், அறிமுகமாகாதவனெனினும், அவன் உலகத்தை இயக்கத் துவங்கிவிட்டவனுவான்; அவன் ஒருநாள் பரிணமைத்தின் ஒரு புதுச்சத்தியாகவும், படைப்பு மையமாகவும் பிரபஞ்சமுழுவதும் ஒப்புக்கொள்ளப்படுவான்.

அத்தகையர் ஒருவர் ஏறத்தாழப் பத்தொன்பது நூற்ருண்டுகளுக்கு முன்பிருந்தார். அவர் ஏழ்மையான, எழுத்தறியாத தச்சரேயாகும்; அவருடைய

சொந்த உறவினர்களாலேயே அவர் ஒரு பித்தராகக் கருதப்பட்டார். அவர் தம் நாட்டுமக்களின் கண்களுக் கெதிரேயே தகுதியற்ற முறையில் முடிவையெய்தினர்; எனினும், அவர் தமது செல்வாக்கின் விதையை ஊன்றிவிட்டார்; அது முழுஉலகத்தையும் மாற்றிவிட்டது.

அத்தகையர் இன்னொருவர் ஏறத்தாழ இருபத்தைந்து நூற்ருண்டுகளுக்கு முன்பு இந்தியாவில் இருந்தார். அவர் பல்வகைப் பண்புகளும் கொண்டவர், உயர்ந்த கல்விமான், முதலாளியின் மகனர், நிலபுலன்களின் உரிமையாளர், சிற்றரசராகவுமிருந்தார். அவர் காசற்றவரானர், இல்லந்துறந்து இரவலரானர்; இன்று மனித இனத்துள் மூன்றிலொரு பகுதியினர் அவரது தெய்வீகத் தன்மையை வழுத்துகின்றனர்; அவரது செல்வாக்கால் அம்மனிதர் அடக்கமும், மேன்மையுமுற்றிருக்கின்றனர்.

எல்லையற்ற பரம்பொருளாகிய கடவுள் இக்கோளத்தின்கண் ஒரு சிந்தனையாளனைக் கட்டவிழ்த்துவிடுகையில் கவனமாக இருங்கள்'' என எமர்சன் கூறுகின்ருர்; தப்பெண்ணத்தால் கட்டுண்ட மனிதன் சிந்தனையாளனல்லன்; அவன் வெறுமனே ஒரு கருத்தை விடாப்பிடியுடன் கொண்டிருப்பவனேயாவான். ஒவ்வோர் எண்ணமும் அவனுடைய குறிப்பிட்ட தப்பெண்ண மென்னும் வாயிலைக் கடந்துவந்து அதன் நிறத்தைப் பெற்றேயாக வேண்டும். எனவே, உணர்ச்சி வசப்படாத சிந்தனையும், நடுநிலையுடைய தீர்ப்பும் இயலாத காரியங்கள் ஆக்கப்பட்டுவிடுகின்றன. அத்தகைய மனிதன் தன் நோக்கத்தின்

தொடர்பையோ அல்லது இருப்பதாகத் தான் கற்பனை செய்கின்ற தொடர்பையோ கொண்டே ஒவ்வொரு காரியத்தையும் காண்கின்றான்; அதேவேளையில், சிந்தனையாளன் காரியங்களை அவையுள்ளவாறே காணுகின்றான், இயற்பொருளை நேருக்குநேர் காணத் தகுதியுடையவனாகும் வகையில் தப்பெண்ணத்தினின்றும், தானெனும் அகந்தையின் சிறுமைகளினின்றும் தன் மனத்தைத் தூய்மைப் படுத்திக்கொள்கின்ற மனிதன் ஆற்றலின் உச்சியை அடைந்தவனாகின்றான்; அவன் தன் கரங்களுக்குள் பெருமளவு செல்வாக்கை வைத்துக் கொண்டிருப்பவனாகின்றான்; அவன் அறிந்திருப்பினும் இல்லையெனினும் இந்த ஆற்றலை அவன் கையாண்டே தீருவான்; அஃது அவனுடைய வாழ்வினின்றும் பிரிக்கப்பட வியலாததாகிவிடும்; மலரினின்றும் மணம் கமழுவது போன்று அஃது அவனிடமிருந்து தோன்றும் அவனுடைய சொற்களில், செயல்களில், உடல் தோற்றங்களில், மன இயக்கங்களில், ஏன் அவனுடைய மௌனத்திலும், உடலமைப்பின் அசைவின்மையிலும் அது மிளிரும். அவன் எங்குச் செல்வதாயினும், அவன் பாலைவனத்திற்குப் பறப்பதாயினுங்கூட இந்த மிகவுயர்ந்த விதியிலிருந்து அவன் தப்ப இயலாது; ஏனெனின், பெரிய சிந்தனையாளன் உலகத்தின் மையமாவான். அவனாலேயே மனிதர் அனைவரும் தத்தமது கோள் வழியில் நிறுத்தப்படுகின்றனர்; சிந்தனை அனைத்தும் அவனை நோக்கியே மையசார்ப்புக் கொள்கின்றன.

மனித இனம் அமிழ்ந்து கிடக்கின்ற இச்சையென்னும் கொந்தளிக்கும் நீர்ச்சுழிக்கு மேலும், அப்பாலுமே உண்மையான சிந்தனையாளன் வாழு

கின்றான். தனிமுறைச் சார்புடைய நோக்கங்களினால் அவன் தள்ளாட்டம் கொள்வதில்லை; ஏனெனின், தனிமுறைச்சார்பற்ற நியதிகளின் முக்கியத்துவத்தை அவன் புரிந்து கொண்டிருக்கின்றான்; எனவே, அகந்தையான இச்சைகள் மோதுகின்ற போரில் அவன் ஈடுபடாதவனாக இருப்பதால், நடுநிலைக்குரிய சாதகநிலையிலிருந்துகொண்டு, கருத்தற்ற பார்வையாளராகவும் இருந்து விடாமல், இருபுறமும் சமமாகக் காணுவதோடு, அப்போரின் காரணத்தையும் பொருளையும் உணர்ந்து கொள்ளவும் முடியும்.

மேதகு ஆசிரியர்கள் மட்டுமன்று, மேதகு இலக்கியத் திறலோர்களும் கூடத் தப்பெண்ணத்திலிருந்து விடுதலை பெற்றோரே; அவர்கள் உண்மையான கண்ணாடிகளைப் போன்று நடுநிலையுடன் காரியங்களின் உருநிழலைக் காட்டுகின்றனர், விட்மேன், ஷேக்ஸ்பியர், பால்ஸாக், எமர்சன், ஹோமர் ஆகியோர் அத்தகையரே. இந்த உள்ளங்கள் குறிப்பிட்ட தலத்திற்கு மட்டும் உரிமையானவையல்ல; பிரபஞ்சத்திற்கே உரிமையானவையாகும். அவர்களுடைய மனப்பாங்கு தனிமுறைச் சார்புடையதன்று, அண்ட முழுவதும் சார்புறுவதாகும். அவர்கள் காரியங்கள், பொருண்மைகள் அனைத்தையும், உலகங்கள், சட்டங்கள் அனைத்தையும் தம்மிடத்தேயே கொண்டிருக்கின்றனர். அவர்களே மனித இனத்திற்கு வழிகாட்டுந் தெய்வங்களாவர். கடைசியில் அவர்கள் மனித இனத்தை இச்சையெனும் வெப்பிலிருந்து தமது அமைதியெனும் நிலத்திற்குக் கொண்டுவந்து விடுவர்.

உண்மையான சிந்தனையாளனே மனிதரில் மிக மேன்மையானவன்; அவனுடைய ஊழே மிகவும்

உயர்வுடையது. முற்றிலும் நடுநிலையான மனம் தெய்விக நிலையை அடைந்துவிட்டதாகும்; அஃது இயற்பொருளின் முழுமையான ஒளியில் மிளிர்கின்றது.

நடுநிலையின் பெரும் ஆக்கக்கூறுகள் நான்காவன:

1. நீதி 3. அமைதி
2. பொறுமை 4. மெய்யறிவு.

சமமான பெறுமதிகளைக் கொடுக்கலும், வாங்கலுமே நீதி. "கடினமான கொள்முதல் செய்தல்" என்றழைக்கப்படுவது ஒருவகைத் திருட்டேயாகும். கொள்முதல் செய்வோன் தன் கொள்முதல் பொருளின் ஒரு பகுதிக்கான விலையைக் கொடுத்துவிட்டு மீதத்தைத் தனியான ஆதாயமாகத் தனதாக்கிக் கொள்வதையே அது குறிக்கும். பேரத்தை முடித்துவிடுவதன் மூலம் விற்போனும் கூட இதற்கு ஊக்கமூட்டுபவனாகின்றான்.

நேர்மையான மனிதன் பெறுமதி மிஞ்சிய பலன் அடைய முயற்சி செய்வதில்லை; அவன் பொருட்களின் உண்மையான பெறுமதிகளை ஆழ்ந்தாராய்ந்து அதற்குப் பொருந்துமாறு தன் கொடுக்கல் வாங்கல்களை உருவாக்கிக் கொள்கின்றான். "எது ஆதாயகரமாயிருக்கும்" என்ற எண்ணம் "எது நேர்மையானது" என்ற எண்ணத்திற்கு முன்பாகத் தன்னிடத்தே தோன்ற அவன் இடந்தருவதில்லை; ஏனெனின், நேர்மையானதே இறுதியில் ஆதாயகரமாகவும் இருக்கும் என்பதை அவன் அறிவான், பிறனொருவனுக்குப் பாதகம் விளைவிக்கும் வகையில் தன் சொந்த நலனை அவன் நாடுவதில்லை. ஏனெனின்,

கொடுக்கல் வாங்கலில் தொடர்புற்ற இருசாரார்க்கும் நேர்மையான செயல் சமமாகவும், முழுமையாகவும் நலந்தருகின்றது என்பதை அவன் அறிவான். "ஒரு மனிதனின் இழப்பு, இன்னொரு மனிதனின் ஆதாய மாக விருப்பின்," அந்த வேறுபாடு பின்னர் ஈடு செய்யப்பட்டுவிடும் என்பதே அதன்குறிப்பு. நேர்மை யற்ற ஆதாயங்கள் ஆக்கத்திற்கு வழிகாட்டவியலாது; ஆனால், தோல்வியைக் கொணருவது உறுதி. பிற னொருவனின் பையினின்றும் திருடி எடுத்துக்கொள்வ தாலன்றி, "மதிப்பான கொடுக்கல் வாங்கல்" என் றழைக்கப்படுவதன் மூலம் அவனிடமிருந்து நேர்மை யற்ற ஆதாயத்தை நேர்மையான மனிதன் எடுத்துக் கொள்ளவியலாது. அவன் அடுத்தவனைப் போன்றே தன்னையும் நாணயமற்றவனாகக் கருதுவான்.

தொழிலின்கண் பேரம் பேசுகின்ற ஊக்கம் வாணிபத்தின் உண்மையான ஊக்கமன்று. அஃது ஒன்றுமில்லாததற்கு எதையேனும் பெறவேண்டு மென்ற தன்னலத் திருட்டுவூக்கமேயாகும். நேர்மை யான மனிதன் பேரங்கள் அனைத்தையும் ஒழித்துத் தன்தொழிலைத் தூய்மைப்படுத்துகின்றான்; மிகவும் சீர்மை வாய்ந்த நீதியின் அடிப்படையில் அதைக் கட்டமைக்கின்றான். "ஒரு நல்ல சரக்கை" அதன் சரியான விலையில் அவன் கொடுக்கின்றான்; அதை மாற்றுவதில்லை. மோசடியால் கறைப்படுத்தப்பட் டுள்ள எந்தத் தொழிலினும் அவன் தன் கரங்களைக் கறைப்படுத்திக்கொள்வதில்லை. அவனுடைய சரக்கு கள் தூய்மையானவை; அவை தகுமுறையில் விலை யிடப்பட்டுள்ளன.

தம் கொள்முதல்களால் ஒரு வணிகனை "வீழ்த்திவிட வேண்டும்" என முயலும் வாடிக்கைக் காரர்கள் தம்மைத் தாமே இழிவுபடுத்திக் கொள்ப வரேயாவர். அவர்களின் பழக்கம் கீழ்க்காணும் இரண்டு காரியங்களில் ஒன்றையோ அன்றி இரண் டையுமோ மேற்கொள்வதாகும்; ஒன்று, அவ் வணிகன் நாணயமற்றவன், விலையையேற்றுகின்றான் என்பது; (இஃது இழிந்த ஐயப்பாடு கொள்ளும் மனப் பாங்கு); அல்லது, மற்றொன்று, அவன் தன் ஆதாயத்தை இழக்கும் வண்ணம் பசப்புவார்த்தை பேசி இணங்கச் செய்து, அவனுடைய இழப்பினால் பயன் அடைய அவர்கள் விருப்பமுடையவராயிருக் கின்றனர் என்பது; (இதுவும் அதனையொத்து இழிந்த மனப்பான்மையே ஆகும்) "வீழ்ச்சியுறுத்தும்" பழக்கம் முழுக்க முழுக்க நாணயமற்ற செய்கை யாகும்; அதை விடாமுயற்சியுடன் பின்பற்றும் மக்கள் பெரிதும் தம்மீது சுமத்தப்படுவதாகக் குறைப் படுவோரேயாவர்; அவர்களே எப்போதும் பிறர்மீது சுமத்த முயலுகின்றனர் என்பதைக் காணும் பொழுது இது வியப்புக் குரியதன்று.

அதே வேளையில் நேர்மையையும், பொருட் களின் தகுதியான பெறுமதிகளையும் கருத்திற் கொள்ளாது இயலுவன அனைத்தையும் தன் வாடிக்கைக்காரர்களிடமிருந்து பெற்றுவிட வேண்டு மென்று துடிக்கின்ற வணிகன் ஒருவனைக் கொள்ளைக் காரனேயாவான்; அவன் தனது வெற்றிக்கு மெது வாக நஞ்சூட்டிக் கொள்பவனே; ஏனெனின், அவ னுடைய செயல்கள் செல்வச் சிதைவு எனும் உரு வத்தில் அவனிடம் உறுதியாக வந்தடைந்து விடும்.

"என்னுடைய வாழ்நாள் முழுவதும் ஒவ்வொரு பொருளுக்கும் கொடுக்க வேண்டியதைவிட ஐம்பது சதமான வீதம் நான் அதிகமாகக் கொடுத்து வந்துள்ளேன் என்பதை இப்போது தான் கண்டு கொண்டேன்" என்று அன்றொரு நாள் ஐம்பது வயதான மனிதரொருவர் கூறினர். நேர்மையான மனிதன் தான் என்றேனும், எப்பொருளுக்கேனும் மிகுதியாக விலைகொடுத்ததாகக் கருதவியலாது; ஏனெனின், நேர்மையற்றது எனத் தான் கருதுகின்ற எந்தக் கொடுக்கல் வாங்கலையும் அவன் உடன் தானே முடித்துவிடுவதில்லை; ஆனல், எப்பொருளையும் அரை விலைக்கு வாங்க வேண்டுமென ஒரு மனிதன் ஆவல் கொள்வானேயாயின், அவன் ஒவ்வொரு பொருளுக்கும் இரட்டிப்பு வேலை தருவதாக எப்போதும் கஞ்சத் தனமாகவும், இழிவான முறையிலும் புலம்பிக் கொண்டேயிருப்பான்; கொடுப்பதிலாயினும் அன்றி வாங்குவதிலாயினும் ஒவ்வொரு பொருளுக்கும் முழுப் பெறுமதியைக் கொடுக்க நேர்மையான மனிதன் விரும்புகின்ருன்; அவனுடைய மனம் தொந்தரைப்படுவதில்லை; அவனுடைய நாட்கள் அமைதி நிறைந்தனவாய் இருக்கின்றன.

பிற அனைத்திற்கும் மேலாக மனிதன் கஞ்சத் தனத்தை விட்டு, மேலும், மேலும் முழுமையான நேர்மையுடையவனுக இருக்க முயற்சி செய்யட்டும்; ஏனெனின், நேர்மையில்லையெனின், அவன் நாணயமுடையவனுகவோ, அன்றிப் பெருந்தன்மையுடையவனுகவோ அன்றி ஆண்மையுடையவனுகவோ இருக்கவியலாது; ஆனல், அவன் தன்னுலியன்றது அனைத்தையும் பெறவும், எத்துணைச் சிறிதளவு

இயலுமோ, அத்துணைச் சிறிதளவே திருப்பிக் கொடுக்கவும் முயற்சி செய்கின்ற ஒருவகை மறை முகத் திருடனாகவே இருக்கின்றான். அவன் பேரங்கள் அனைத்தையும் விட்டொழிக்கட்டும்; அதனோடு பேரள வானதும், பாராட்டிற்குரியதுமான வெற்றியைக் கை கூட்டுகின்ற மேம்பட்ட தகுதியுடன் தொழிலை நடாத்தும் சிறந்த வழியைப் பேரம் பேசுவோர்க்குக் கற்றுத் தரட்டும்.

நடுநிலையுடைய மனிதனின் குணவியல்பின்கண் **பொறுமையே** ஒளிமிக்க அணியாகும். இஃது, ஒரு சிறுமி தனது பின்னல் வேலையில் கொண்டிருப்பதைப் போன்றதோ அன்றி ஒரு சிறுவன் தன் பொம்மை இயந்திரத்தை அமைப்பதில் கொண்டிருப்பதைப் போன்றதோ ஆன குறிப்பிட்ட காரியத்தின்கண் கொண்டுள்ள குறிப்பிட்ட பொறுமையைக் குறிப்பதாகாது; ஆனால், பிறழ்தலின்றிப் பிறர் நலம் காணும் தன்மை, எவ்வேளையிலும், மிகவும் சோதனையான சூழ்நிலைகளின் போதும் இனிமையான செவ்வி, எச் சோதனையும் கெடுத்துவிட முடியாததும், எத் தொல்லையும் முறித்துவிட முடியாததுமான மாறு படாத, மென்மையான வலிமை ஆகியவற்றையே இது குறிக்கும். இஃது ஓர் அரிதான உடைமை என்பது உண்மையே; மனித இனத் தொகுதியின்கண் ஒருவன் நீண்ட காலம் எதிர்பார்க்கக்கூடாத ஒன்று மாகும்; ஆனால், படிப்படியாக அடைந்துவிடக் கூடிய அறமே இது; அரைகுறைப் பொறுமைகூட மனிதனின் வாழ்விலும், காரியங்களிலும், வியக்கத் தக்க அருமைகளை உண்டு பண்ணும்; ஏனெனின், உறைத்துப் போன பொறுமையின்மை அழிவையே

உண்டு பண்ணும். முன்கோபியான மனிதன் விரைவாக அழிவை நாடுபவனுவான்; குற்றச்சாட்டு அன்றி நுண்ணுய்வின் ஒரு சிறு சுடர் தன்மீது விழ்ந்த மாத்திரத்திலேயே வெடிமருந்தைப் போன்று தொடர்ச்சியாக வெடவெடக்கும் மனிதனுடன் எவரே தொடர்பு கொள்ள விரும்புவர்! அவனுடைய நண்பர்கள்கூட ஒருவர் ஒருவராக அவனை விட்டு நீங்கிவிடுவர். ஏனெனின், ஒவ்வொரு சிறிய மாறுபாடு அல்லது தப்பெண்ணத்தின் மீதும் பொறுமையற்றதும், அனல் கக்குவதுமான நாக்கால் தன்னை முரட்டுத்தனமாகத் தாக்கும் மனிதனின் நட்பை எவரே நாடுவர்!

ஒரு மனிதன் மிகவும் ஆக்கமுடையவனுகவும், பயனும், சத்தியும் உடையவனுகவும் இருக்க வேண்டுமெனின், தன்னை அறிவுடன் அடக்கி யாளவும், பொறுமையின் அழகான படிப்பினைகளைக் கற்றுக் கொள்ளவும் தொடங்க வேண்டும். அவன் பிறரைக் குறித்துச் சிந்திக்கவும், தனக்காக மட்டுமன்றி, அவர்களுடைய நன்மைக்காகவும் செயல் படக் கற்றுக் கொள்ளவேண்டும்; பிறர்நலம் கருதுவோனுகவும், பொறுமை யுடையவனுகவும் இருக்க வேண்டும். நெடுநாள் துன்பப்படவும் கற்றுக்கொள்ள வேண்டும். மிகவும் முக்கியம் வாய்ந்தது என்று தாம் கருதுகின்ற காரியங்களில், தம்மிலிருந்து மாறுபட்ட கருத்துடைய மனிதருடன் அமைதியான இதயத்தைக் கொண்டிருத்தல் எவ்வாறு என்பதை அவன் கற்றுக்கொள்ள வேண்டும். உயிருக்கு இடையூறு விளைவிக்கக் கூடிய நஞ்சைப் பருகுவதை அவன் தவிர்ப்பது போன்று, சண்டையிடுதலையும் அவன் தவிர்க்கவேண்டும்.

வெளிப்புற முரண்பாடுகள் இடைவிடாது அவனைப் பின்னுெதுக்கி முன்னேறும்; ஆனால், அவைகளுக் கெதிராக அரண்காப்புக்களால் அவன் தன்னை வலுப் படுத்திக் கொள்ள வேண்டும்; பொறுமையைக் கையாளுவதன் மூலம் அவற்றி னிடையிடையே வணக்கத்தைக் கொணருதல் எவ்வாறு என்பதையும் அவன் கற்றுக்கொள்ள வேண்டும்.

சச்சரவு சாதாரணமானது; அஃது இதயத்தைத் துன்புறுத்தி மனத்தைச் சிதறடித்து விடுகின்றது பொறுமை மிகவும் அரிதானது; அஃது இதயத் திற்கு வளமூட்டி, மனத்தை அழகு செய்கின்றது. எந்தப் பூனையாலும் துப்பவும், துடிக்கவும் முடியும்; நடத்தையில் நெகிழ்ச்சியன்றி வேறுமுயற்சி எதுவுமே தேவைப்படுவதில்லை. மனிதன் நிகழ்ச்சிகள் அனைத் தினூடும் நங்கூரம் பாய்ச்சியவனாக வாளாதிருந்து, வருந்தியுழைப்பவனாகவும், மனித இனத்தின் குறை பாடுகளைக் கண்டு பொறுமை கொள்பவனாகவும் இருக்கவேண்டுமென அந்நிலை பணிக்கின்றது. ஆனால், பொறுமை வெற்றியடைகின்றது. கரடுமுர டான பாறையை மெதுவான நீர்தேய்த்துக் கரைத்து விடுதல் போன்று, எதிர்ப்புகள் அனைத்தையும் பொறுமை வென்றுவிடுகின்றது, அது மனிதர்களின் இதயங்களை வசப்படுத்துகின்றது. அது வெற்றி காணுகின்றது, அடக்கியாளுகின்றது.

அமைதி பொறுமையைப் பின்தொடர்கின்றது, அது மிகப் பெரியதும் மேம்பட்டதுமான பண்பாகும். இச்சையெனும் சூறுவளி சூழ்ந்த கடலின்கண் நெடு நாள் அலைந்து திரிந்த பின்னர் அடிமையொழித்த

ஆன்மாக்கள்சென்றடையும் அமைதியான துறைமுகம் அதுவேயாகும். மிகுதியாகத் துன்புற்று, மிகுதியாகப் பொறுமையுடனிருந்து மிகுதியாக அனுபவப்பட்டு முடிவில் வெற்றியும் கண்ட மனிதனை அஃது அடையாளப்படுத்தி வைக்கின்றது.

அமைதி இல்லாத மனிதன் நடுநிலையுடைய மனிதனாக இருக்கவியலாது. பரபரப்பு, தப்பெண்ணம், ஒருதலைச் சார்பு ஆகியவை அமைதிகுலைந்த இச்சைகளினின்றுமே தோன்றுகின்றன. தற்சுட்டான உணர்ச்சி தடைபடுகின்ற போது, அணையால் தடுத்துத் தேக்கப் பட்ட நீரோட்டம் போன்று, அஃது உயர எழுந்து கொந்தளிக்கின்றது. தனது உணர்ச்சி தற்சுட்டாக இருப்பதினின்றும் அதனைத் தற்சுட்டாக இல்லாத நெறியில் திருப்பிவிடுவதன் மூலம் அமைதியான மனிதன் இக்குழப்பத்தைத் தவிர்க்கின்றான். அவன் தனக்காகவும், அதைப் போன்றே பிறருக்காகவும் சிந்திக்கவும். உணர்ச்சி கொள்ளவும் செய்கின்றான். அவன் தன் சொந்தக் கருத்துக்களைப் போன்று பிறருடைய கருத்துக்களின் மீதும் அதே மதிப்பைக் காட்டுபவனாக இருக்கின்றான். அவன் தன் சொந்த வேலையை முக்கியமானது எனக்கருதினால், அதனையொத்துப் பிற மனிதருடைய வேலையும் முக்கியமானதே என்பதையும் காணுகின்றான். தனது சொந்த மதிப்பைப் பிறருடைய மதிப்பிற்குக் குறைவு ஏற்படும் வகையில் பெற அவன் முயற்சி செய்வதில்லை. எறிந்துவிட்டால் மீண்டும் எடுக்க முடியாத சிறுபொருளைப் போன்று தற்பெருமை உணர்ச்சியால் அவன் தோற்கடிக்கப் படுவதில்லை. அவன் உண்மைக்காகத் தானெனும் ஆணவத்தை விட்டொழித்தவன்; அவன் காரியங்

களின் சரியான தொடர்புகளைக் காணுகின்றான். கோப மூட்டுந் தன்மையை அவன் வென்றுவிட்டான்; தன்னியல்பிலேயே கோபமூட்டுந் தன்மையுடைய தான எதுவுமே இல்லை என்பதை அவன் காணு கின்றான். நாம் காண்கின்றபடியே பிறனொருவனும் காணவில்லை என்பதற்காக அவன்பால் சினங் கொள்ளுதல், கரியநீல மலரிடம் அஃது உரோசா மல ரன்று என்பதற்காகச் சினங்கொள்ளுதல் போன்றதே யாம். மனங்கள் வேறுபாடுடையன; இந்த வேறு பாடுகள் மக்களுக்கு இயல்பானவை என்பதை அமைதியான மனிதன் உணருகின்றான்.

அமைதி சூழ்ந்த, நடுநிலையுடைய மனிதன் மகிழ்ச்சிகரமான மனிதன் மட்டுமன்று; அவன் தன்னுடைய சத்திகள் அனைத்தையும் தனது கட்டுப் பாட்டிற்குள் வைத்திருப்பவனுமாவன். அவன் உறுதி யானவன், முன்னோக்குடையவன், செயல் திறமைக் குகந்தவன்; எளிதில் கோபங்கொள்கின்ற மனிதன் தனது கூச்சலின் மூலம் மெதுவாகவும், கடினப் பாட்டுடனும் செய்து முடிப்பதை அவன் விரைவிலும் எளிதாகவும் மௌனமாகச் செய்து முடித்து விடு கின்றான். அவனுடைய மனம் தூய்மைப் படுத்தப் பட்டதாக, சமநிலையுடையதாக, ஒருமுகப்படுத்தப் பட்டதாக விருக்கின்றது; கொடுக்கப் படுகின்ற வேலையைக் குறைபாடில்லாச் சத்தியுடன் செய்து முடிக்கப் பணிக்கும் ஏவலையேற்க அவன் எக்கணமும் சித்தமாயிருக்கின்றான். அமைதியான மனதில் இச் சைகள் அனைத்தும் தணிவுறுகின்றன; முரண்பாடுகள் அனைத்தும் இசைவிணக்கம் பெறுகின்றன; எதிர் மறைகள் அனைத்தும் பொருத்தம் பெறுகின்றன;

அங்கு ஒளி வீசும் களிப்பும், என்றும் நிலைக்கும் அமைதியும் இடம் பெறுகின்றன. எமர்சன் கூறுவது போன்று "களிப்பு நிலையானதாகவும், நடைமுறைப் பழக்கத்திற்குரியதாகவும் இருப்பதே அமைதியாகும்."

கருத்தின்மையை அமைதியென்று எவரும் தவருகப் புரிந்து கொள்ளுதல் கூடாது; ஏனெனின் அஃது எதிர்க்கோடியில் இருப்பதாகும். கருத்தின்மை என்பது உயிரின்மை; அதேசமயத்தில் அமைதி ஒளி வீசும் உயிரும், நிறைவடிவான சத்தியுமாகும். அமைதியான மனிதன் அரைகுறையாகவோ அன்றி முழுமையாகவோ தன்னை வெற்றிகண்டவனுவான்; தன்னகத்தேயுள்ள தன்னலத்தன்மையை வெற்றிகரமாக அடக்கிவிட்டதன் காரணமாக அதைப் பிறர் கண்ணும் எவ்வாறு கண்டு வெற்றிகரமாக அடக்குவது என்பதை அவனறிவான். அமைதியான மனிதனே எங்கும் வெற்றி வீரனுக விளங்குகின்முன். அவன் அமைதியாக இருக்கின்ற நிலையில் தோல்வி என்பது இல்லாததாகிவிடுகின்றது.

தன்னடக்கம் செல்வத்திலும் சிறந்தது; அமைதியோ இறுதியிலாப் பேரின்ப நிலையே.

நடுநிலையுடைய மனிதனிடமே ஞானம் நிலையாக உறைகின்றது. அத்தாயின் அறிவுரைகளே அவனுக்கு வழிகாட்டுகின்றன; அத்தாயின் சிறகுகளே அவனைப் பாதுகாக்கின்றன; அவள் மகிழ்ச்சிகரமான வழியிலேயே அவனைக் களிப்பான இடங்களுக்கு அழைத்துச் செல்லுகின்முள்.

ஞானம் பல்வகையானது; அறிவுடைய மனிதன் பிறருக்கேற்பத் தன்னை இணக்கப்படுத்திக்கொள்கின்முன். அவர்களுடைய நன்மைக்காக அவன் செயல்

படுகின்றான்; ஆனால், அதற்காக ஒழுக்க அறங்களையோ அல்லது நேர்மையான நடத்தையின் நியதிகளையோ அவன் மீறுவதில்லை. மடமையுடைய மனிதன் பிற ருக்கேற்பத் தன்னை இணக்கப்படுத்திக் கொள்ளவிய லாது; அவன் தனக்காகவே செயல்படுகின்றான்; ஒழுக்க அறங்களையும் நேர்மையான நடத்தையின் நியதிகளையும் தொடர்ச்சியாக மீறுகின்றான். நடுநிலை யுடைய செயல் ஒவ்வொன்றன்கண்ணும் ஓரளவு ஞானம் இருக்கின்றது; ஒரு மனிதன் நடுநிலையின் எல் லையை ஒருமுறை தொட்டு அதை அனுபவித்துவிடின், அவன் இறுதியில் அதன்கண் நிலைபேறு கொள்ளும் வரையில் அவன் திரும்பத் திரும்ப அதை மீட்டுக் கொள்ளலாம்.

ஞானம் சார்ந்த ஒவ்வொரு கருத்தும், சொல்லும் செயலும் உலகின்கண் மிக்க பயனை விளைவிக்கின்றது; ஏனெனின், அது மேம்பாடுசெறிந்ததாகவிருக்கின்றது. ஞானம் ஓர் அறிவுக்கிணறும், சத்தியின் ஊற்று மாகும். அஃது ஆழ்ந்த அறிவுடையது, கவிவாற்றல் மிக்கது; மிகச் சிறிய நுணுக்கங்களைக் கூட ஆர்வமாக ஏற்றுக் கொள்கின்ற அளவிற்கு அத்துணைச் சரிநுட்ப மானதும், அனைத்தையும் உட்கொள்வதுமாகும். அது தன்னுடைய பரந்த மேன்மையில் சிறியதைப் புறக் கணிப்பதில்லை. ஞானம் செறிந்த மனம் ஞாலத்தைப் போன்றது; பொருள்கள் அனைத்தையும் அவற்றி னுடைய சரியான இடத்திலும், ஒழுங்கிலும் அது கொண்டிருக்கின்றது; அதன் காரணமாக அஃது அழுத்தம் பெறுவதில்லை. உலகத்தைப்போன்றே அது வும் தன்னுரிமையுடையதாகவும், தடைகள் எதையும் காணாததாகவும் இருந்து வருகின்றது; எனினும், அஃது

என்றுமே நெறிதவறுவதில்லை. என்றுமே பிழைபடுவதில்லை. என்றுமே பழிசூழ்வதாகவோ, எண்ணியிரங்கத் தக்கதாகவோ இருப்பதில்லை. மடமையெனும் அழுங்குழவியாக இருந்ததனுடைய நிலையான வளர்ச்சி பெற்ற உருவமே ஞானம். அது குழந்தைப் பருவ அறியாமையின் வலுவின்மையையும், சார்பு நிலையையும், தவறுகளையும், தண்டனைகளையும் கடந்து வளர்ந்துவிட்டது; அது நிமிர்ந்து சமநிலையுடனும், வலுவுடனும் அமைதியுடனுமிருக்கின்றது.

அறிவுடைய மனத்திற்குப் புறத்தில் உள்ள ஆதாரம் எதுவுமே தேவைப்படுவதில்லை. அஃது அறிவென்னும் நிலைக்களத்தில் தானாகவே நிலைகொள்கின்றது; அது நூலறிவன்று, முதிர்ந்த அனுபவ அறிவாகும். அது மனங்கள் அனைத்தையும் ஊடுருவிச் சென்றுள்ளது; ஆகவே அஃது அவற்றையறியும். அஃது இதயங்கள் அனைத்துடனும் பயணஞ்சென்றுள்ளது; மகிழ்ச்சியிலும், துன்பத்திலும் அவற்றின் வழிப் போக்குகளை அஃது அறியும்.

ஞானம் ஒரு மனிதனை ஒன்றியபோது அவன் உயர்த்தப்பட்டு உருமாற்றப்படுகின்றான். புதிய குறிக்கோள்களும், புதிய சத்திகளும் கொண்ட புதிய உயிருருவாகவே மாறிவிடுகின்றான்; புதியதும், மேம்பட்டதுமான ஓர் ஊழை நிறைவேற்றுதற்காக அவன் ஒரு புதிய பிரபஞ்சத்திலேயே குடியேறி விடுகின்றான்.

ஆக்கமெனும் கோயிலைத் தாங்கி அழகு செய்யத் தனது மிகுதியான வலிமையையும், ஒப்புமை கூறவியலாத நயத்தையும் வழங்குகின்ற நடுநிலையெனும் ஆதாரம் அத்தகையதாகும்.

---

## 8. தற்சார்பு

தற்சார்பு பற்றிய எமர்சனின் கட்டுரையை ஒவ்வோர் இளைஞனும் வாசித்தாக வேண்டும். இதுவரை எழுதப் பெற்றவற்றில் ஆண்மையும் வீரமும் செறிந்த கட்டுரை அதுவேயாகும். அது, வாலிபர்களிடையே காணப்படுகின்ற தன்னைத்தானே குறைவாக மதிப்பிடுதல், தன்னிறுமாப்பு என்னும் இரு மனப்பிணிகளையும் ஒருங்கே குணப்படுத்துவதற்கெனத் திட்டஞ் செய்யப்பட்டது. நாணமுடையவனுக்கு அவனுடைய தயக்கத்தின் வலுவின்மையையும், பயனின்மையையும் அஃது எடுத்துக் காட்டுவதாயிருப்பது போன்றே தருக்குடையவனுக்கு அவனுடைய செருக்கின் சிறுமையையும், வெறுமையையும் அது புலப்படுத்துவதாகவே இருக்கும் என்பது ஏறத்தாழ உண்மையேயாகும். இது வீறுமிக்க விழுப்பத்தின் புதிய புலப்பாடு, பண்டைய திருப்பார்வையுடையோனுக்கு அருள் பாலித்த புலப்பாடு போன்றதே இதுவுமாகும். ஒருவேளை, ஒரு புது மாதிரியான தற்கால ஞானியிடமிருந்து தோன்றி, ஒரு புதிய இனத்தில் பேணி வளர்க்கப்பட்டு இப்பொறியியல் செறிந்த காலத்திற்குச் சிறப்பாகப் பொருந்துவதான மிகவும் செயல்முறைக் கேற்ற புலப்பாடாகவு மிருக்கலாம்; அதனுடைய சத்தி வாய்ந்த கற்பக்குணமே அதன் தலையாய சிறப்பு.

தற்சார்பைத் தற்செருக்கெனத் தவறுதலாகப் புரிந்து கொள்ளக்கூடாது; ஏனெனின், ஒன்று எத்துணை உயர்வானதாகவும், மேம்பாடுடையதாகவும் இருக்கின்றதோ, அத்துணை தாழ்வானதாகவும், பயனற்றதாகவும் மற்றது இருக்கின்றது. தற்சார்பில்

இழிவுடையது எதுவுமே இருக்கவியலாது; அதே போன்று, தற்செருக்கில் சிறப்புடையது எதுவுமே இருக்கவியலாது.

அறிந்துகொள்ள வில்லை எனப் பிறர் தன்னைக் கருதிவிடுவர் எனக் கற்பனை செய்துகொண்டு அந்நிலையினைத் தவிர்க்கும் பொருட்டுத் தான் எதுவுமே அறியாத பொருள்களைக் குறித்து வினவப் படுகின்றகாலை "தெரியாது" என என்றுமே கூறுமல், தன் ஊகங்களையும், கற்பிதங்களையும் தான் கண்ட அறிவாகக் காட்டிக்கொள்ளும் மனிதன் அவனது அறியாமையைக் காட்டிக் கொள்பவனேயாவான்; அதனோடு மறைக்க முயலும் மனப்பாங்கிற்காக அவன் தரக்குறைவாகவே மதிப்பிடப்படுவான். அறியாமையை நேர்மையுடன் ஒத்துக்கொள்ளும் நிலை மதிப்பினை நல்கும்; அதே வேளையில், அறிந்தவன்போல் பாவனை செய்யும் மறைப்பு மனப்பாங்கு வெறுப்பையே தூண்டும்.

வாழ்வதற்கே அஞ்சுபவனுகத் தோன்றுபவனும், அங்கீகரிக்கப்பட்ட முறைதவறி எதையேனும் செய்து தன்னைத் தான் ஏளனத்திற்கு ஆளாக்கிக் கொள்ளக் கூடுமென்று அஞ்சுபவனுமாகத் தொடைநடுங்கியாகத் தன் செயலுக்கு இரங்குபவனுக இருக்கும் மனிதன் முழுமனிதனல்லன்; அவன் பிறரைப்போன்று பாவனை செய்துகொள்ள வேண்டுமேயன்றி அவனுக்கென இயல்பான செயல் எதுவுமே கிடையாது. பழமையான ஒன்றை அடிமைத்தனமாகப் பின்பற்றுதற்குப் பதிலாக ஒரு புதிய எடுத்துக் காட்டாக மாறுகின்ற வகையில் தனது சொந்த முயற்சியையே நம்பும்படி வலியுறுத்துகின்ற தற்சார்பு அவனுக்குத்

தேவைப்படுகின்றது. ஏளனத்தைப் பொறுத்தவரை, ஏளனத்தால் மனம் நொந்துபோகின்றவன் மனிதனே யல்லன். தற்சார்புடைய மனிதனின் வலிமையான கவசத்தை ஏளனம், பழிப்பு இவற்றின் அம்புகள் ஊடுருவிச் செல்லவியலாது; அவனுடைய நேர்மை யான இதயத்தின் வெல்ல முடியாத அரணைத் துன் புறுத்தவோ அன்றிப் புண்படுத்தவோ அவை நெருங்க வியலாது. பழிச்சொல்லாகிய கூர்மையான அம்புகளை அவன்மீது மழையெனப் பொழியலாம்; ஆனால், அவ னுடைய வலிமையான மார்புக் கவசத்தால் அவை திசை திருப்பப்பட்டு அவனருகே தீங்கற்று வீழ்கின்ற போது அவன் அவற்றைக் கண்டு சிரிக்கின்றான்.

"உன்னையே நம்புவாயாக"—"இந்த இரும்பு நாணையே ஒவ்வோர் இதயமும் மீட்டுகின்றது" என்று கூறுகின்றார் எமர்சன். மனிதர் தம் சொந்த இயல் பான எளிமையையும், இயற்கையான பெருந்தன்மை யையும் ஆதாரமாகக் கொண்டிருப்பதற்குப் பதிலாகத் தலைமுறை, தலைமுறைகளாக அவர்கள் இதுவரையில் புறவியலான சூழ்ச்சிகளையே ஆதாரமாகக் கொண் டிருந்திருக்கின்றனர்; தற்போதும் அவற்றையே ஆதார மாகக் கொண்டிருக்கின்றனர். அவ்வாறு தம்மியல்பை ஆதாரமாகக் கொள்ளும் உறுதிப்பாடு கொண்டிருந்த ஒரு சிலரே தனிச்சிறப்புக் குரியவர்களாக்கப்பட்டு வீரர்களாகவும் மேன்மைப் படுத்தப்பட்டிருக்கின் றனர்; தனது சொந்த இயல்பே முனைந்து வெளிப்பட இடந்தரும் துணிவுடையவனும், தனது சொந்த இயல்பான பெருமானத்தின்மீது நிலைகொள்ளும் வாய்ப்பினைத் தரும் வலிமையான உலோகம் போன்ற வனுமே உண்மையான வீரனாவான்.

அத்தகைய வீரத்தை நாடுபவன் வலிமையின் சோதனையைத் தாங்கியே யாகவேண்டும் என்பது உண்மையே. போலி மரபு முறைப் பூச்சாண்டிகளால் அவன் தனது கொள்கைப் பிடியிலிருந்து விலகிவிடக் கூடாது. அவன் தனது நற்பெயருக்காகவோ அன்றிப் பதவிக்காகவோ அன்றித் திருச்சபையில் தனது செல்வாக்கிற்காகவோ அன்றித் தலச் சமூகத்தில் தனது மதிப்பிற்காகவோ அஞ்சுதல் கூடாது. அவன் நில உலகின் எதிர் முனைகளின் கண்ணுள்ள நடைமுறை நாகரிகங்களினின்றும் நீங்கித் தன்னுரிமையுடன் நடந்துகொள்வது போன்று, இத் தயக்கங்களினின்றும் நீங்கித் தன்னுரிமையுடன் செயலிலீடுபடவும், வாழவும் அவன் கற்றுக்கொள்ள வேண்டும். அவன் இச்சோதனையைத் தாங்கிய பின்பு அவதூறும், பழியும் அவனைத் தூண்டிவிடவோ, துயர்தரவோ முடியாது தோற்றுவிடுகின்றபோது அவன் உண்மையில் ஒரு மனிதனாகின்றான்; அஃதாவது, சமூகம் முதலில் அவன் பால் நம்பிக்கை வைத்து முடிவில் அவனுடைய சொந்த குணநலன்களுடனே ஏற்றுக்கொள்ளப்பட வேண்டிய ஒருவனாகிவிடுகின்றான்.

விரைவிலோ அன்றிப் பிற்பாடோ மனிதர் அனைவரும் அறிவுரைக்காகத் தற்சார்புடைய மனிதரையே நாடுவர்; சிறந்த மனங்கள் அவரை ஓர் ஊன்றுகோலாகப் பயன்படுத்திக் கொள்ளாத போதிலும், அவர்தம் பணியையும், பயனையும் உயர்வாகப் பாராட்டி, முன்பு சென்று மறைந்த தெய்வங்களுள் அவருக்கும் ஓர் இடம் உண்டு என்பதை ஒப்புக்கொள்ளுவர்.

கல்வியை வெறுப்பதே தற்சார்பின் சுட்டுக் காட்டெனக் கருதிவிடுதல் கூடாது. அத்தகைய

மனப்பான்மை, வலிமையின்மையின் கூறுகளைக் கொண்ட பிடிமுரண்டான தற்பெருமையி னின்றும் தோன்றுவதாகுமென்பதோடு, வீழ்ச்சியின் முன்னறி விப்பு மாகுமே யன்றித் தற்சார்பின் தனிச்சிறப்புப் பண்புகளாகிய வலிமையின் கூறுகளோ அன்றி உயர்ந்த பேறுபெறும் உறுதிப்பாடோ ஆகாது. இறு மாப்பையும், பகட்டையும் தற்சார்புடன் தொடர்பு படுத்தவே, கூடாது. தற்சார்பு மேன்மையுறச் செய் கின்ற வேளையில் அவை இழிவுபடுத்துகின்றன. பணம், ஆடை, சொத்து, தன்மதிப்பு, பதவி ஆகிய தற்செயல் விளைவுகளையும், துணைப்பொருள்களையும் அடிப்படையாகக் கொண்டதே இறுமாப்பு; அவற்றை இழந்துவிட்டால் அனைத்தையும் இழந்துவிடுவோம்; பெறுமதி, நேர்மை, தூய்மை, மெய்யார்வம், குண வியல்பு, மெய்ம்மை ஆகிய தலையாய கொள்கை களையும், கோட்பாடுகளையும் அடிப்படையாகக் கொண் டதே தற்சார்பு: எதை இழப்பினும் அஃது ஒரு பொருட்டாகாது. ஏனெனின், இவை என்றுமே இழக் கப்படுவதில்லை. புறப்பகட்டாலும், தற்செருக்காலும் இறுமாப்பு தனது அறியாமையை மறைக்க முயலு கின்றது; அதனோடு எத்திசையிலும் தன்னை ஒரு மாணவனாகக் கருத விரும்புவதில்லை. விரைந்து செல் லும் சிறிய பொழுதிற்குள் அஃது அறியாமையிலும் பகட்டிலுமே நிலைகொள்கின்றது. இன்று எத்துணை உயர்வுக்கு அஃது உயர்த்தப்படுகின்றதோ, நாளை அத்துணைத் தாழ்விற்கு அது வீழ்த்தப்பட்டுவிடும். மறைக்கப்படவேண்டியது எதுவுமே தற்சார்பிடம் இல்லை; அதனோடு கற்றுக்கொள்வதற்கும் விருப்ப முடையதாயிருக்கின்றது; தற்செருக்குள்ள இடத்தில்

பணிவு இருக்கமுடியாதபோது, தற்சார்பும், பணிவும் ஒத்தியங்கக் கூடியனவாயிருக்கின்றன; ஏன், அதை விடக் கூடுதலாக ஒன்றிற்கொன்று சார்புற இணைந்து கொள்ளுவனவாகும்; அதனோடு விழுமிய தற்சார்பு ஆழ்ந்த அடக்கத்துடன் இணைந்திருப்பதையே காண லாம். "எதிர் எதிராக உள்ள கோடிகள் இணைசேரு கின்றன; பணிவின் ஆணவத்தையன்றி இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டு வேறு கிடையாது. எந்த உயர்குடி மகனும், அரசகுடும்பத்தில் பிறந்த எந்த இளவரசனும் ஒரு ஞானியின் தன்மதிப்போடு ஒப்பிட்டுப் பார்க்க முற்படவியலாது. தன்னால் இயலுமெனத் தெரிந்தும், தன்னகத்தேயுள்ள கடவுளின் பெருமைக்கு ஏன் அவர் அத்துணை அடிபணிந்து கிடக்கின்றார்?" என எமர்சன் கூறுகின்றார். தற்போதோ அன்றி நான் இறந்த பின்போ தமக்குத் தாம் ஒரு விளக்காக விளங்குப வர்கள், அஃதாவது தம்மையே தாம் நம்புவதன்றிப் பிற வெளியுதவி எதையுமே நம்பாமல், உண்மை யையே தமது ஒளிவிளக்கெனஉறுதியாகக் கொண்டு உண்மையிலேயே வீடுபேற்றையும் நாடுபவர்கள், தம்மையன்றிப் பிறர் எவரையும் உதவிக்கு எதிர் பார்க்கத் தேவையில்லை; என் மாணாக்கர்களிடையே மிகவுயர்ந்த நிலையினை எய்துபவர்கள் அவர்களே, ஆனால் அவர்கள் கற்றுக்கொள்ள விருப்பமுடை யோராயிருக்க வேண்டும்," என்று புத்தர் இதைக் குறித்தே கூறினார். இந்த அறிவுரையின்கண் ஒருவன் தன்னையே தான் நம்பும் இன்றியமையாமை எடுத்துக் காட்டப்படுவதும், அதனோடு கற்றுக்கொள்வதில் ஆர்வமுடையவராக இருக்க வேண்டுமென்ற இறுதி நன்மதியுமே நான் தெரிந்த அளவில் தற்சார்பைப்

பொருத்தமிகச் சிறந்த அறிவுரையாகும். உண்மையை நாடும் மனிதன் பெற்றிருக்க வேண்டிய தன்னம்பிக்கை, பணிவு இவற்றிடையே காணப்பட வேண்டிய நிறைவான சமநிலையை அப்பேராசிரியர் இதன்கண் பொதிந்து வைத்துள்ளார்.

“வீரத்தின் சாரம் தன்னம்பிக்கையேயாகும். மேன்மக்கள் அனைவரும் தற்சார்புடையவரே; நாம் அவர்களை ஆசிரியர்களாகவும், பின்பற்றத் தக்கவர்களாகவும் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமேயன்றி, ஊன்றுகோல்களாகவும், உந்து சத்திகளாகவும் பயன்படுத்திக்கொள்ளக் கூடாது. வேறு எவரையும் பற்றுக்கோடாகக் கொள்ளாது உண்மையின் தனித்த உயர் நிலையின்மீது தனியாக நிற்பவனே மேம்படு மனிதனாக வருகின்றான்; உடன்தானே உலகம் அவனைப் பற்றுக்கோடாகக்கொள்ள ஆரம்பித்துவிடுகின்றது; ஆன்மீகச் சோர்விற்கும் கேடுதரும் தன்தாழ்விற்கும் அவனை ஒரு சாக்குப்போக்காகக் கொள்ள ஆரம்பித்து விடுகின்றது; மேன்மக்களின் வலிமையில் நம் தீமைகளைத் தாலாட்டிக் கொள்வதைக் காட்டிலும், அவர்களுடைய ஒளிமிக்க விளக்கெதிரே நம் அறங்களுக்குப் புத்தொளி தருவதே சாலப் பொருந்துவதாகும். பிறருடைய ஒளியை நாம் நம்பியிருப்போமாகில், இருள் நம்மைச் சூழ்ந்துவிடும்; ஆனால், நாம் நமது ஒளியையே நம்பியிருப்போமாகில் நாம் அதன் சுடரை வளர்த்தேயாகவேண்டும். நாம் பிறரிடமிருந்து ஒளியைப் பெறுவதும், மற்றவர்க்கு வழங்குவதுமாகிய இரண்டையுமே செய்யலாம்; ஆனால், நமது சொந்த விளக்கைப் புறக்கணித்துத் துருப்பிடிக்க விட்டுவிட்டுப் பிறருடைய ஒளியே போதுமெனக் கருதுவது சுருக்கமாக நம்மை

நாம் இருளின்கண் கைவிடப்பட்டவர்களாகக் காணுவ தற்கேயாகும். என்றுமே நம்மைக் கைவிடாத ஒளி நமது சொந்த உள்ளொளியே.

தற்சார்பிற்குப் பிறிதொரு பெயராகிய 'உள் ளொளி', அச்சத்தால் நடுங்குபவர்களுக்கு எங்கிருக்க முடியும்? நாம் எவ்வாறிருக்கின்றேமோ அதன் அடிப் படையிலேயே நாம் நிலைகொள்ளவேண்டுமே யன்றிப் பிறனொருவன் எவ்வாறிருக்கின்றான் என்பதன் அடிப் படையில் நிலைகொள்ளுதல் கூடாது. "ஆனால், நான் அத்துணைச் சிறியவன், எளியவன்" என்று எவரும் கூறலாம். இருந்தாலென்ன, அச்சிறு திறத்திலேயே நிலைகொள்ள வேண்டியதுதான்; உடன்தானே அவன் பெரியவனாகிவிடுவான். பால் குடிப்பதும், பற்றிக் கொள்வதும் பசுங்குழவிக்குத் தேவையே; ஆனால் ஒரு மனிதன் அவ்வாறின்றித் தன் சொந்தக் கால்களைக் கொண்டே நடந்துசெல்ல ஆரம்பித்து விடுகின்றான். மனிதர் தாமாகவே அடைவதற்கென அமைக்கப்பட் டிருக்கின்ற ஒன்றைத் தம் கரங்களில் தருமாறு இறைவனை வழிபடுகின்றனர். தாம் கடுமையாக உழைத்துப் பெறவேண்டிய உணவைத் தமது வாயில் ஊட்டுமாறு வழிபடுகின்றனர். ஆனால், மனிதர் இந்த ஆன்மிகக் குழவிப்பருவத்தை விரைவில் கடந்து விடுவர். தமக்காக வழிபாடு செய்யவும், தமக்கு அறிவுரை கூறவும் புரோகிதருக்கு மக்கள் கூலிகொடுக் காத நிலை வந்தே தீரும்.

தன்னைத்தான் நம்பாத நிலையே மனிதனின் முக் கியமான தொந்தரையாகும்; எனவே, தன்னம்பிக்கை யுடைய மனிதன் அரிதான, தனிப்பட்ட காட்சிப்

பொருளாகி விடுகின்ருன். ஒரு மனிதன் தன்னை ஒரு "புழு"வாகத் தானே கருதுவானுயின், பயனற்ற நெளிவைத்தவிர அவனிடமிருந்து வேறு என்ன விளைவு ஏற்பட்டுவிடமுடியும்? "தன்னைத்தானே பணிவுடைய வனக்கிக் கொள்ளுபவன் மேன்மைப்படுத்தப் படுவான்" என்பது உண்மையே; ஆனல், தன்னைத்தானே தரங்குறைத்துக் கொள்ளுபவனுக்கு அந்நிலை ஏற்படாது. மனிதன் தான் இருக்கின்றவாறே தன்னைக் காணவேண்டும்; தகுதியற்றது ஏதேனும் தன்னிடமிருப்பின் அதை நீக்கித் தகுதியுடையதை விடாமல் பற்றிக்கொண்டு நம்பிக்கையும் கொள்ளவேண்டும். மனிதன் தன்னைத்தான் தரங்குறைத்துக் கொள்ளும் போது அவன் தரங்குன்றியே விடுகின்ருன்; அவன் தன்னுயர்வுக்கான வாழ்வு நடாத்தும்போதே உயர்வு படுத்தப்படுகின்ருன்.

இடைவிடாது மீண்டும் மீண்டும் கூறிக் கொண்டே மனிதன் ஏன் தன்னுடைய தவருன நிலைக்குக் கருத்தைத் திருப்பவேண்டும்? இழிகுணத்தின்கண் ஒருவிதப் பெருமைகொள்ளும் தவருன பணிவுணர்ச்சியும் இருந்தே வருகின்றது. ஒருவன் வீழ்ந்துவிட்டால், அவ் வீழ்ச்சி அவன் எழுந்து பின்பு வீழாமலிருப்பதற்குப் பாடமாகக் கொண்டு ஒழுக ஏதுவாக அமைந்து விடுகிறது. மனிதன் ஒரு குழியில் வீழ்ந்துவிட்டால், அவன் அங்கேயே கிடந்து, அவ்வழியே செல்லும் ஒவ்வொருவரையும் அழைத்துத் தான் வீழ்ந்து கிடக்கும் நிலையினைப் பார்த்துக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்வதில்லை; அவன் எழுந்து மிகுந்த கவனத்துடன் தன்வழியே செல்லுகின்ருன். எனவே, இழிகுணமென்னும் குழியில் வீழ்ந்துவிட்டால், அவன்

எழுந்து தூசுதுடைத்து மகிழ்வோடு தன்வழியிற் செல்லவேண்டியதுதான்.

ஓரளவேனும் தற்சார்பைக் கொண்டு மனிதனுடைய செல்வாக்கையும், வளப்பத்தையும் குறிப்பிடத் தக்க அளவு பெருக்க முடியாத துறை வாழ்வில் எதுவுமே இல்லை யெனலாம்; உலகியல் சார்ந்ததோ அன்றிச் சமயஞ் சார்ந்ததோவான ஆசிரியர், அமைப்பாளர், மேலாளர், கண்காணிப்பாளர், மற்றும் ஆட்சியும் அதிகாரமும் செலுத்த வேண்டிய பதவியிலுள்ளோர் அனைவருக்கும் இஃது ஓர் இன்றியமையாத கருவியாகும்.

தற்சார்பின் மேன்மையான நான்கு குணங்களாவன :

1. தீர்மானம். 3. சீர்மை
2. திண்மை. 4. தன்னுண்மை

தீர்மானம் மனிதனை வலிமையுடையவனுக்குகின்றது. தடுமாறுபவன் வலுவற்றவனேயாவான். வாழ்வெனும் நாடகத்தில் எத்துணைச் சிறியதாயினும் முக்கியமானதொரு பாகத்தை நடிக்கவேண்டிய மனிதன் தீர்மானமுடையவனுக இருப்பதோடு, தன் பகுதி என்ன வென்பதைத் தெரிந்து கொள்ளவும் வேண்டும். அவன் எதனைக் குறித்து ஐயுறினும், செயல்படுதற்கான தன் ஆற்றலைக் குறித்து ஐயுறுதல் கூடாது. வாழ்வில் தன் பகுதி என்னவென்பதைத் தெரிந்து கொள்வதோடு அதன்கண் தன் ஆற்றல் அனைத்தையும் செலுத்தவெண்டும். தான் செயற்படுதற்கும், பாதுகாப்பாக நிலைகொள்தற்கும் ஏதேனும் திண்ணமான அறிவுத் தளத்தை அவன் கொண்

டிருக்க வேண்டும். தான் அறிந்துகொள்ளவேண்டியவை இருப்புச் சரக்கின் விலையும், தரமுமே யெனினும், அவன் தனது பணியை முழுக்க முழுக்க அறிந்திருப்பதோடு, அவன் தன்னுல் எதையும் அறியமுடியும் என்பதையும் அறிந்துகொள்ளவேண்டும். தனது கடமை தடைப்படுகின்றபோது தனக்குத் தான் விடையளித்துக்கொள்ள அவன் எந்தநேரமும் ஆயத்தமாக இருக்கவேண்டும். தனது குறிப்பிட்ட செயற்பழக்கத்தின் எந்த விபரத்தைப் பொறுத்த அளவிலும், அன்றி எந்த நெருக்கடியிலும், தயக்கத்தால் மயக்கமுருத வகையில் அத்துணை நன்கு நிலைகொண்டவனுக இருக்கவேண்டும். “தயக்கமுறும் மனிதன் தோல்வியுறுவான்” என்பது உண்மையான மூதுரையாகும். தன்னைத் தான் நம்பாது ஐயுற்றுப் பின் தங்கித் தயங்கி, இருவகைப் போக்குகளின் சிக்கலான இணைத் தொடர்களிலிருந்து தன்னை மீட்டுக்கொள்ள முடியாதவனை எவருமே நம்ப மாட்டார்கள். தன் சொந்தச் சரக்கின் விலையறியாதவனே அன்றி, அதை எங்கே அறிந்துகொள்வது என்ற உறுதிப்பாடு இல்லாதவனே ஆன வணிகனுடன் எவரே வணிகஞ் செய்வர்? மனிதன் தன் தொழிலைத் தெரிந்து கொண்டிருக்கவேண்டும். தன் சொந்தத் தொழிலையே தெரிந்துகொள்ள விரும்பாதோர்க்கு யாரே கற்றுத் தருவர்? தன்கண்ணுள்ள உண்மையைப் பொறுத்த ஒரு நல்ல விபரத்தை அவன் கொடுக்கக் கூடியவனுக இருக்க வேண்டும்; திறமையும், அறிவும் கற்றுத்தரக் கூடிய துணிவுக் கூறு அவனிடமிருக்க வேண்டும்.

தற்சார்பின்கண் ஒரு பெரும் மூலக்கூறு இருப்பது உறுதியே. கூறப்படுவன் மதிப்புடையதா

யிருக்க வேண்டுமெனின், கூறுவதற்கான உண்மை எதையேனும் மனிதன் கொண்டிருக்க வேண்டும். உண்மையை அறிவுறுத்துவதிலேயே திறமை யனைத்தும் அமைந்து கிடக்கின்றது. அவன், "உண்மையின் அடிப்படையில் உரையாட வேண்டு மேயன்றிக் கிறுக்கர்போலப் பேசுதல் கூடாது." எப்போதும் கற்றுக் குட்டியாகவே இருக்காமல், ஏதேனுமொன்றில் தேர்ச்சியுறுவதோடு, ஒரு தேர்ச்சி யாளனின் போக்கின்படியே தெளிவுடனும், தீரத் தெரிந்துகொண்ட நிலையிலும் அதனைக் கையாளுமள விற்கு அதில் தேர்ச்சிபெற்றுவிட்டான் என்பதைத் தெரிந்துகொள்ளவும் வேண்டும்.

தீர்மானமின்மை ஒரு சிதைவுக்கூறுகும். நிமிடத் தடுமாற்றம் வெற்றியின் போக்கையே திருப்பிவிடக் கூடும். தவறிழைத்துவிடக் கூடாதே எனப் பயந்து விரைந்து தீர்மானம் செய்ய அஞ்சுபவர்கள், செயற் படும்போது ஏறத்தாழ எப்போதுமே தவறிழைத்து விடுகின்றனர். கருத்திலும், செயலிலும் சுறு சுறுப் புடையோர் தவறிழைக்கும் வாய்ப்புக் குறைவு; மேலும், தீர்மானமின்றிச் செயலிலீடுபட்டுத் தவ றிழைப்பதைவிடத் தீர்மானத்துடன் செயலிலீடு பட்டுத் தவறிழைத்தல் சிறப்பேயாகும்; ஏனெனின், முன்னதில் பிழைமட்டுமே யுள்ளது, பின்னதில் வலு வின்மையும் சேர்ந்து விடுகின்றது.

தான் அறிந்து கொண்டதும், அறிந்து கொள்ளா ததுமான இரு சந்தர்ப்பங்களிலேயே மனிதன் எப் போதும் தீர்மான முடையவனுக இருக்கவேண்டும். "ஆகட்டும்" என்று கூறுங்கால் இருப்பதைப்

போன்று, "முடியாது" என்று கூறுதற்கும் அவன் அத்துணை ஆயத்தமா யிருக்கவேண்டும்; தனது அறிவைப் பிறர்க்கு வழங்குவதில் காணும் அத்துணை வேகம் தனது அறியாமையை ஒத்துக்கொள்வதிலு மிருக்கவேண்டும். நிகழ்ச்சியுண்மையின்பால் நிலையுற்று, உண்மையி னடிப்படையில் செயற்படுங் கால் இரு கருத்துக்களிடையே சிக்கித் திகைக்கும் நிலையையே அவன் காண வியலாது.

மனதை விரைவில் திடப்படுத்தித் தீர்மானத்துடன் செயற்பட வேண்டும்; ஏற்கனவே திடப்படுத்தப்பட்ட மனத்தைக் கொண்டிருத்தல் அதனினும் நன்று; பின்பு தீர்மானம் இயல்புணர்ச்சியாகவும் தானே இயங்குவதாகவும் வந்துறும்.

விரைந்து தீர்மானம் செய்யும் மனத்தின்கண் திண்மை தோன்றுகின்றது. ஒழுக்கத்தின் சிறந்த நெறியின்கண்ணும், வாழ்வின் சிறந்த வழியின் கண்ணும் இறுதியாகத் தீர்மானம் கொள்ளுதலே உண்மையில் திண்மையாகும். எது நேரினும், தன் கொள்கைகளின்மீது உறுதியாக நிலை பெறுதற் பொருட்டு ஆன்மா எடுத்துக் கொள்கின்ற சூளுரையே அது. எழுத்திலோ அன்றிப் பேச்சிலோ ஏதேனும் சூளுரை எடுத்துக்கொள்ள வேண்டு மென்பது தேவையுமில்லை, தேவையற்றதுமில்லை; ஏனெனின், ஒரு நிலைபெற்ற கொள்கையின்பால் நெறி திறம்பாத பற்றுறுதி கொண்டிருத்தலே சூளுரைகள் அனைத்தின் சாரமாகும்.

நிலைபெற்ற கொள்கையில்லாத மனிதன் பெருமளவு சாதனை செய்யவியலாது. சூழ்வினைத் திற

மென்பது ஒரு சதுப்பு நிலமும், முள்ளடர்ந்த பாழிடமுமாகும்; அங்கு மனிதன் தன் சொந்த ஒழுக்கக் கேடு என்னும் வழுக்குச் சகதியில் தொடர்ந்து ஓட்டிக் கொண்டு, தானே யுண்டுபண்ணிக் கொள்கின்ற ஏமாற்றங்களென்னும் முட்களால் குத்தப்பட்டுக் காயமடைகின்றான்.

ஒருவன் தன் சகாக்களின் நடுவே நிலைபேறு கொள்ள ஏதேனும் திண்மையான அடித்தளம் கொண்டிருக்க வேண்டும். சலுகை என்னும் சதுப்பு நிலத்தில் அவன் நிலைபேறு கொள்ளவியலாது. சூழ்ச்சித் திறம் வலுவின்மை சார்ந்த பழியாகும்; வலிமை பொருந்திய பழிகளைவிட வலிமையற்ற பழிகளே குணவியல்பையும், செல்வாக்கையும் சிறுமைப் படுத்துவதில் மிகுந்த பங்கு கொள்கின்றன. ஆண்மை இல்லாத காரணத்தால் பழி சூழ்ந்தவனாக இருப்பவனையும், எதைப் பொறுத்தும் தனக்கெனத் தனி மனப்போக்கு இல்லாதவனாக இருப்பதையே தலையாய பழியாகக் கொண்டிருப்பவனையும் விட, மிகுதியான விலங்கின வலிமையின் காரணமாகப் பழி சூழ்ந்தவனாக இருப்பவன், தன் மனத்தைத் திடப் படுத்திக் கொள்கின்ற வேளை, உண்மையை யெய்தும் குறுக்கு வழியைப் பின்பற்றுபவனாகி விடுகின்றான். நல்லது, கெட்டது ஆகிய இரு முடிவுகளுக்கும் பயன் படுத்தப்படத் தக்கதே ஆற்றல் என்பதை ஒருவன் புரிந்து கொள்கின்ற காலை, ஆசாரப்படியான சமயப் பெரியோர்களுக்கு முன்பே குடிவெறியர்களும், விலை மகளிரும் வீடுபேற்றை அடைந்துதீர வேண்டு மென்பது அவனுக்கு வியப்பூட்டுவதாயிராது. அவர்கள் கைக்கொண்ட ஒழுகலாறு இழிதன்மையுடைய

தெனினும் அதன்கண் அவர்கள் நிறைபயிற்சி யுடையவர்களாகவும், முழுமையான வலிமையுடை யவர்களாகவும் இருக்கின்றனர். தீய வழியினின்றும் நல்வழிக்கு வலிமை மாறுவது ஒன்றுதான் நிகழ வேண்டும்; ஆகா! வெறுக்கத்தக்க கொடிய செயல் களைச் செய்யும் பாவியாக இருப்பவனும் உயர்ந்த ஞானியாக மாறிவிடுவது உண்டு.

மனிதன் உறுதியான, நிலைபேறுடைய, தீர்மான முடைய மனம் கொண்டிருக்கவேண்டும். காரியங்கள் அனைத்திலும் பற்றுக்கோடாகக் கொள்வதற்குச் சாலப் பொருந்துவனவும், முரண்பாடான கருத்துக்க ளென்னும் சிக்கலினூடே நன்கு வழிகாட்டுவனவும், வாழ்வுப் போராட்டத்தில் தீர்க்கமான துணிவைத் தருவனவுமான விதிகளை அவன் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். அவ் விதிகளைக் கைக் கொண்ட பின்பு, ஆதாயத்தையோ அன்றி மகிழ்ச்சியையோ விட அவனுக்கு அதுவே முக்கியமானதாக இருக்க வேண்டும்; வாழ்வை விடக்கூட அது முக்கிய மானதாக இருக்கவேண்டும்; அவன் என்றுமே அவற்றை விட்டொழிக்காத வரையில், அவை என்றுமே அவனை விட்டொழிவதில்லை என்பதை அவன் காணலாம்; பகைவர்கள் அனைவரிடமிருந்தும் அவனைப் பாதுகாக்கும், ஆபத்துக்கள் அனைத்தி லிருந்தும் அவனைப் பத்திரமாக விடுவிக்கும்; இருள் இடர்ப்பாடுகள் அனைத்தினூடும் அவன் செல்லுகின்ற பாதைக்கு இருளில் ஒளிபரப்பும் ஒளியாக, துன்பத்தி னின்றும் நீங்கி இளைப்பாறுமிடமாக, உலகின் முரண் பாடுகளினின்றும் விலகும் புகலிடமாகவே அவை அவனுக்குப் பயன்படும்.

திண்மையான மனத்தை உண்மையான சீர்மை ஒரு மாட்சிமை பொருந்திய உடையைப் போன்று அணி செய்கின்றது. பழிக்கு உடன்படுவானென எதிர்பார்க்கப்படுகின்ற வேளை உருக்குக் கம்பியைப் போன்று நெகிழ்ச்சி யடையாதிருப்பவனும், நன்மையான ஒன்றிற்குத் தன்னைத் தகுதியுடையவனுக்கு வதில் எளிதில் வளையும் கோலைப் போன்று அத்துணை ஓசிவாக இருப்பவனும், அப்பண்பைக் கொண்டிருத்தலால் பிறரை அமைவுறுத்தி, உயர்த்துகின்ற ஓர் உண்மையான மதிப்பைக் கொண்டிருக்கின்றான்.

உறுதிப்பாடற்றதும், நிலைபேறுடைய எத்தகைய கொள்கைகளையும் பற்றுக்கோடாகக் கொள்ளாததும் தனது சொந்த இச்சைகளுக்குக் கேடு வருங்காலை பிடிமுரண்டாக விருந்து, தனது சொந்த ஒழுக்க நலனுக்குக் கேடு வருங்காலை விட்டுக் கொடுக்கின்றதுமான மனத்திற்கு ஆழ்ந்த சிந்தனை கிடையாது, சமநிலை கிடையாது, அமைதியான அடக்கமும் கிடையாது.

விழுப்பமுடைய மனிதனைத் தாழ்வுறுத்தவும், அடிமை கொள்ளவுமியலாது; ஏனெனின், அவன் தன்னைத்தான் தாழ்வுறுத்துவதையும், அடிமைப் படுத்துவதையும் விட்டொழித்து விட்டான். அவனைக் குறைவுபடுத்தும் எந்த முயற்சியையும் அவன் ஒரு பார்வையால், ஒரு சொல்லால், அறிவுடையதும் பொருள் பொதிந்ததுமான ஒரு மௌனத்தால் உடனடியாகத் தகர்த்தெறிந்து விடுகின்றான். வம்பளப்போனுக்கும், தகுதியற்றோனுக்கும் அவனுடைய தோற்றம் ஒரு வசையாகும்; அதேவேளையில் நன்மை நாடுவோனுக்கு அஃது ஒரு வலிமை மிக்க பாறையேயாகும்.

விழுப்பமுடைய மனிதன் மதிப்பிற்குரியவனாக இருப்பதன் தலையாய காரணம் அவன் முக்கியமாகத் தன்மதிப்புடையவனாக இருக்கின்றான் என்பது மட்டுமன்று; ஆனால், பிறர் அனைவருக்கும் ஏற்ற அளவான மதிப்புத் தந்து பெருந்தன்மையுடன் நடத்துகின்றான் என்பதுமாகும். தற்பெருமை தன்னையே நேசிப்பதுடன், கீழிருப்போர் அனைவரையும் அடம் கொண்டு அவமதிப்புடனேயே நடத்துகின்றது; ஏனெனின், தன்னையே நேசிப்பதும், பிறரை இகழ்வதும் எப்போதும் ஒரே அளவில் ஒன்றாக இணைந்திருப்பதைக் காண்கின்றோம்; எனவே, தன்னையே நேசிக்கும் பான்மை மிகுதியா யிருப்பதற்கொப்ப அகந்தையும் மிகுதியாகவே யிருக்கும். உண்மையான விழுப்பம் தன்னல மறுப்பிலிருந்து பிறக்கிறதே யன்றித் தன்னல நேசத்திலிருந்து பிறப்பதில்லை; அஃதாவது, நிலைபேறு கொண்ட மையமான கொள்கையை நடுநிலையுடன் பின்பற்றுவதிலிருந்தே தோன்றுகின்றது. தனது கடமையை நிறைவேற்றுவதில் தனிப்பட்ட நோக்கங்கள் அனைத்தையும் ஒருபுற மொதுக்கிவிட்டு முழுக்க முழுக்கச் சட்டத்தின் மீதேயே நிலைபேறு கொள்கின்ற பான்மையிலிருந்தே நீதிபதியின் விழுப்பம் தோன்றுகின்றது; நிலையற்றதும், விரைந்து மடிவதுமான அவனுடைய சிறிய தனி மனிதப் பண்பு வெறுமையாகி விடுகின்றது; அதே வேளையில் நிலைத்து நிற்பதும், மாட்சிமையுடையதுமான சட்டம் அனைத்துமாகி விடுகின்றது. ஒரு வழக்கை முடிவு செய்வதில் நீதிபதி சட்டத்தை மறந்து தம் போக்கான உணர்ச்சிக்கும், விருப்பு வெறுப்பிற்கும் உட்பட்டுவிடின் அவருடைய விழுப்பம் மறைந்துவிடும்.

விறுமிக்க தூய்மையான குணவியல்புடைய மனிதனின் நிலையும் அதுவேயாகும்; அவன் தெய்வீகச் சட்டத்தின்மீது நிலைபேறு கொள்கின்ருனேயன்றித் தன் போக்கான உணர்ச்சிமீதன்று; ஒரு மனிதன் தன் இச்சைக்கு இடந்தருவானே யாகின், அவன் விழுப்பம் துறந்தவனுகி, அறிவற்ருேரும், அடக்கமற்ருேருமாகிய எண்ணிறந்தோர்களில் ஒருவராகத் தனக்கும் இடம் பிடித்துக் கொள்பவனுகின்ருன்.

ஒவ்வொரு மனிதனும் ஒரு நிலைபேறு கொண்ட விதியின் வழிநின்று செயலிலீடுபடுகின்ற அளவிற்கேற்ப அவன் அமைவடக்கமும், விழுப்பமும் கொண்டிருக்கின்ருன். அவ்விதி நேர்முறையானதாகவும், அதன் காரணமாகத் தகர்க்கப்பட முடியாததாகவுமிருப்பதுவே இன்றியமையாததாகும். அத்தகைய விதியை மனிதன் பின்பற்றி யொழுகி, அதனின்றும் தடுமாற்றம் கொள்ளவோ அன்றித் தனி மனிதப் பண்புக் கூறுக்குத் தாழ்வுறவோ செய்யாதிருக்கும் வரையில், படையெடுக்கின்ற பற்றுக்கள், விருப்பு வெறுப்புக்கள் ஆசைகள் எத்துணை தான் வலிமையுடையனவா யிருப்பினும், நடுநிலை பிறழா விதியின் வெல்லமுடியாத வலிமையின் முன் அவை வலுவும் பயனும் அற்றனவாகிவிடும்; இறுதியில், அவற்றினுடைய கூட்டானதும், தகுதி யற்றதுமான குழப்பம் அவனுடைய 'ஒருமுகமானதும், மாட்சிமைப்பட்டதுமான நேர்மைக்கு இணங்கிவிடும்.

தன்னுண்மை வலிமையும், நல்ல கட்டுப்பாடும் கொண்ட மனிதனின் பிறப்புரிமையாகும். மனிதர் அனைவரும் தம் உரிமையை நாடி அவற்றைப் பெற

முயலுகின்றனர். ஏதேனும் ஒரு வகையில் விடுதலை யடைதலையே அனைவரும் நாடுகின்றனர்.

மனிதன் தனக்காகவோ அன்றிச் சமூகத்திற் காகவோ உழைக்க வேண்டும். அவன் நொண்டி யாகவோ, சீர்ப்பட முடியாத முடமாகவோ, மனதைப்பொறுத்த அளவில் பொறுப்பற்றவனாகவோ இல்லாத வரையில், அவன் பதிலுக்கு எதையுமே தரமுடியாதவனாய்த் தான் கொண்டிருப்பவை அனைத் திற்கும் பிறரை நம்பியிருப்பதற்காக வெட்கப்பட வேண்டும். அத்தகைய நிலையே விடுதலை என எவ ரேனும் கருதினால், அதுவே அடிமைத் தனத்தின் கீழ்த்தரமான தன்மைகளில் ஒன்று என்பதை அவன் தெரிந்து கொள்ளட்டும். தற்போதைய நடப்புக்களைக் கொண்டு பார்க்கையில், ஒருவன் சாதாரண காலாடி யாக இல்லாமல் மதிப்பிற்குரிய சோம்பேறியாக விருப் பினும், சுறுசுறுப்பான மக்கட் கூட்டத்தின்கண் சோம்பேறியாக இருத்தல் மக்கட்குலத்திற்கே வெட் கக் கேடாவதுடன், மேற்கொண்டு மதிக்கப்படத் தக்கதாயில்லாத காலமும் வந்தே தீரும்.

தன்னுண்மை, விடுதலை, மேம்பட்ட தன்னுரிமை இவை உழைப்பின் வாயிலாக வந்துறுகின்றவேயன்றிச் சோம்பேறித் தனத்தால் வந்துறுவதில்லை; தற் சார்புடைய மனிதன் பாலருந்தும் குழந்தையைப் போன்று தனது ஆதாரத்திற்காகப் பிறரைச் சார்ந் திருக்க வேண்டாத அளவிற்கு மிகுந்த வலிமையுடை யவனாக, மிகுந்த தகை சான்றவனாக, மிகுந்த நேர்மை யுடையவனாக இருக்கின்றான். மனிதனாக, குடி மகனாகத் தன் வாழ்வின் உரிமையை அவன்

கையாலோ அன்றி மூளையாலோ சம்பாதிக்கின்றான். அவன் செல்வந்தனாகவோ அன்றி எளியவனாகவோ பிறந்திருப்பினும் இதைச் செய்கின்றான்; ஏனெனின், செல்வம் சோம்பேறித் தனத்திற்குச் சாக்குப் போக்காக முடியாது; உண்மையில், அவை கொண்டுள்ள அரிய திறமைகளைக் கொண்டு சமூக நன்னிலைக்கு உழைக்கும் ஒரு வாய்ப்பாகும். தன்னைத் தான் ஆதாரமாகக் கொண்டவனே விடுதலையும் தற்சார்பும் தன்னுண்மையும் உடையவனாவான்.

இவ்வாறாக எட்டு ஆதாரங்களின் தன்மையும் விளக்கப்பட்டு விட்டன. என்ன ஆதாரத்தில் அவை நிலைபெற்றுள்ளன, அவற்றின் கட்டுமானப்பாங்கு, அவற்றின் கலவைப் பொருட்கள், ஒவ்வொன்றும் உருவாக்கப்பட்டுள்ள உலோகப் பொருளின் நால் வகைத் தன்மை, அவை என்ன நிலைமைகள் வகிக்கின்றன, முதலிய அனைத்தும் தெளிவுபடுத்தப்பட்டு விட்டன; எனவே, எவ்வாறு கட்டமைக்க வேண்டுமென்று தெரிந்து கொள்ளாதவன் தற்போது கட்டலாம்; அரைகுறையாகத் தெரிந்துகொண்டிருப்பவன் இன்னும் மிக நிறைவாகத் தெரிந்து கொள்ளலாம். நிறைவாகவே தெரிந்துகொண்டிருப்பவன் ஆக்கத்தின் கண் அமைந்து கிடக்கின்ற ஒழுக்க நெறியை இவ்வாறு ஒழுங்கு படுத்துவதிலும், எளிதாக்குவதிலும் இன்பம் காணலாம். நாம் ஒரு கோயிலை எடுத்துக் கொள்வோம்; அதன் தூண்களின் வலிமையை, சுவர்களின் வலுவை, கூரையின் உறுதிப்பாட்டை, அந்த முழுமையில் சிற்பஞ் சார்ந்த அழகையும் நிறையுடைமையையும் தெரிந்து கொள்ளலாம்.

---

## ஆக்கக் கோயில்

பொருளீட்டுவது குறித்த விவரங்கள், வாணிபத் தொடர்புகள், பல்வகை நிறுவனங்களிலுமுள்ள ஆதாய நட்டம், விலைவாசிகள், சந்தைகள், உடன் பாடுகள் ஒப்பந்தங்கள், மற்றும் ஆக்க நிலையினை அடையும் முயற்சிக்குத் தொடர்புடைய பிற நிலைமைகள் இவற்றைச் சார்ந்த செய்தியைப் பெறவேண்டுமென்ற நோக்கத்துடன் இந்நூலின் போக்கை ஊன்றிக் கற்ற வாசகர், இக்காரியங்களின் விவரத்தைப் பொறுத்தவரை எவ்விதமான அறிவுரையும் அறவே இல்லாமலிருப்பதைக் கண்டிருக்கலாம். இதற்குக் காரணம் நால்வகைப்படும்; அவையாவன :—

ஒன்று : விபரங்கள் தனியாக நிலைபேறுகொள்ள வியலாது; விதிகளுடன் மதிநுட்பமான தொடர்பு கொண்டிருக்கவில்லையெனின் அவை எதையும் உருவாக்குஞ் சத்தி கொண்டவையுமல்ல.

இரண்டு: விவரங்கள் எண்ணிறந்தவை; அதனோடு ஓயாது மாறிக் கொண்டுமிருப்பவை; ஆனல் விதிகள் சில, அதனேடு அழிவற்றவை, மாறுதவை.

மூன்று : விவரங்கள் அனைத்தின்கண்ணும், அவற்றை ஒழுங்குபடுத்தி, ஒருங்குறுத்தும் கூட்டிசைப்புக் கூறுகள் விதிகளேயாகும்; ஆகவே சரியான விதிகளைக் கொண்டிருப்பது என்பது துணைப் பொருளான விவரங்கள் அனைத்திலும் சரியான அறிவு கொண்டிருத்தலேயாகும்.

நான்கு: எத்துறையிலாயினுஞ் சரியே, உண்மையை விளக்கப் போந்த ஆசிரியர் விதிகளைக் கண்டிப்

பாகக் கடைப்பிடிக்க வேண்டுமேயன்றி, என்றென்றும் மாறுபடுகின்ற தனிப்பட்டதும், தன்னைச் சார்ந்ததுமான விவரங்களென்னும் சிக்கலுக்குள்தான் இழுத்துச் செல்லப்பட இடங்கொடுக்கலாகாது; ஏனெனின், அத்தகைய விவரங்களுக்கும், நுட்பங்களுக்கும் அந்தந்த இடத்தைப் பொறுத்த உரிமையே உண்டு என்பதோடு சில ஆட்களுக்கு மட்டுமே தேவைப் படுவதுமாகும்; அதே வேளையில் விதிகள் பிரபஞ்ச வாரியாகச் சரியானது என்பதோடு, மனிதர் அனைவருக்கும் தேவைப்படுவதுமாகும்.

இந்நூலின் கோட்பாடுகளை அறிவு நுட்பத்துடன் நடைமுறையில் கடைப் பிடிக்கின்ற அளவிற்கு அவற்றைப் புரிந்து கொள்ளுபவன், இந்த நால் வகைக் காரணத்தின் உட்கருத்தை உணர்ந்துகொண்டு விடுவான்; அல்லது ஒரு மனிதனின் காரியங்களைப் பொறுத்த விவரங்கள் முக்கியமானவையே; ஆனால், அவையே அவனுடைய விவரங்கள்; அவனுடைய தொழில் நிலையத்தில் ஒரு குறிப்பிட்ட கிளையைப் பொறுத்த விவரங்களேயாகும்; அதனோடு அக் கிளைக்குப் புறம்பானவையனைத்தும் அவற்றுடன் தொடர்புடையனவல்ல; ஆனால், ஒழுக்க நெறிக் கோட்பாடுகள் மனிதர் அனைவருக்கும் சமமானவையே; அவை சூழ்நிலைகள் அனைத்திற்கும் இயைபுடையன என்பதோடு விவரங்கள் அனைத்தையும் தம்முட் கொண்டிருப்பனவுமாகும்.

நிலைபேறு கொண்ட விதிகளின் அடிப்படையில் உழைக்கின்ற மனிதன் எண்ணிறந்த விவரங்களின் சிக்கல்களுக்காகத் தன்னைத்தான் வருத்திக் கொள்வ

தில்லே. அவன் விவரங்கள் எல்லாவற்றையும் ஒரே தனித்த சிந்தனையில் அவை இருக்கின்றவாறே புரிந்து கொண்டு விடுவான்: அதனோடு, அவை தொடர் புடையனவா யிருக்கின்ற விதியின் ஒளியில், பரபரப்பு பதற்றம், களைப்பு இவற்றிலிருந்து விடுதலையுற்றவனாய் விளக்கம்பெற்று அவற்றை ஊடுருவி ஊடுருவிப் பொருள் காண்பான்.

கோட்பாடுகளைப் புரிந்து கொள்ளாத வரையில், விவரங்களை முதன்மையான காரியங்களாகக்கொண்டு கூட்டி அவ்வாறே கருதுங்கால், அவை எண்ணி லடங்காத குழப்பங்களுக்கும், குழப்பமுற்ற விளைவு களுக்குமே அழைத்துச் செல்லும். கோட்பாடுகளின் விளக்கத் தெளிவின்முன், அவை இரண்டாம்படி யான உண்மைகளாகவே புலப்படும். அவ்வாறு காணுங்கால், அவற்றுடன் இணைந்துள்ள இடர்ப் பாடுகள் அனைத்தும் உடனடியாகக் கட்டுப்படுத்தப் படுவதுடன், கோட்பாடுகளுடன் தொடர்பு படுத்திப் பார்க்குங்கால் துடைத்தழிக்கவும் படுகின்றன.

ஒழுங்குறுத்துவதும், தொகுத்துப் பார்ப்பது மான கோட்பாடுகளின் கூறுபாடின்றி எண்ணிறந்த விவரங்களுள் மூழ்கியிருப்பவன், அடர்ந்த செடி கொடிகளின் நடுவே நடந்து செல்ல நேரடியான வழி எதுவுமின்றிக் காட்டில் வழிதவறி நிற்பவனை ஒப்ப வனே யாவான். அவன் விவரங்களால் விழுங்கப்பட்டு விடுகின்றான்; அதே வேளையில், கோட்பாடுகள் கொண்ட மனிதன் விவரங்கள் அனைத்தையும் தன் னகத்தே கொண்டிருக்கின்றான்; அவன் அவற்றிற்குப் புறத்தே நின்று அவற்றை அவற்றின் முழுமையான

நிலேயோடு புரிந்து கொள்கின்ருன்; ஆனல் மற்ற மனிதனல் அப்பொழுது அண்மையில் இருக்கின்ற சிலவற்றைமட்டுமே காண முடிகின்றது.

காரியங்கள் அனைத்தும் விதிகளின்கண்ணே அமைந்து கிடக்கின்றன. அவை காரியங்களின் சட்டங் களாகும்; காரியங்கள் அனைத்தும் தத்தமது சட்டத் தையே கடைப்பிடிக்கின்றன. காரியங்களை அவற்றின் இயல்பிலிருந்து தனித்துக் காண்பது தவறு; விதிகள் உள்ளுயிராயிருக்கின்ற ஒன்றின் எழுத்து வடிவமே விவரங்களாகும். “எழுத்து வடிவம் கொல்கின்றது, உள்ளுயிர் வாழ்வூட்டுகின்றது” என்பது சமயத்தின் கண் உண்மையாக இருப்பதைப் போன்றே, கலை, விஞ்ஞானம், இலக்கியம், வாணிபம், ஆகியவற்றைப் பொறுத்தும் அத்துணை உண்மை யானதே யாகும். வியக்கத்தக்க உறுப்புக்களின் பிணைப் பாலாய மனித உடல் முக்கியமானதே; ஆனல், அம்முக்கியத்துவம் உடல் உயிரோடு கொண்டிருக் கின்ற தொடர்பைப் பொறுத்ததே. உயிர் நீங்கி விட்டால் உடல் பயனற்றதாகிவிடுவதுடன் தூர எறியப்பட்டும் போய் விடுகின்றது. சிக்கலான விவரங்கள் அனைத்தும் கூடிய வாணிபத்தின் உடல் முக்கிய மானதே; ஆனல், அம் முக்கியத்துவம், கட்டுப்படுத்தப்படுகின்ற உயிரூட்டு விதிகளுடன் அவை கொண்டிருக்கும் தொடர்பைப் பொறுத்ததே யாகும். அவை பின்னிழுக்கப்பட்டு விட்டால் வாணிபம் அழிந்துவிடும்.

ஆக்கத்தின் உடலை, அஃதாவது ஆக்கத்தின் பருப் பொருளியலான பயனைப் பெற வேண்டுமெனின்,

முதலில் ஆக்கத்தின் உள்ளுயிரை நாம் அடைந்தாக வேண்டும்; ஒழுக்கநெறி அறத்தின் உள்ளோடும் உயிரே ஆக்கத்தின் உள்ளுயிருமாகும். ஒழுக்க நெறிப் பார்வையின்மை நிறைந்திருக்கக் காண்கின்றோம். பணம், பொருள், இன்பம், ஓய்வு ஆகியவற்றை மனிதர் காணுகின்றனர்; அவற்றை, ஆக்கமெனத் தவருகக் கருதித் தத்தமது மகிழ்வுக்காக அவற்றைப் பெற முயலுகின்றனர்; ஆனால், அவற்றை அடைந்த பின்பு, அவற்றில் எவ்வித மகிழ்வையும் அவர்கள் காணுவதில்லை.

முதன் முதலில், ஆக்கம் ஓர் உணர்ச்சி, ஒரு மனப்பாங்கு, ஓர் ஒழுக்கச் சத்தி, ஓர் உயிர்ச் சத்து; அதுவே செழிப்பு, மகிழ்ச்சி, களிப்பு என்னும் உருவத்தில் வெளிப்படையாகக்காணக்கிடக்கின்றது. எழுத்து வன்மை காரண காரியப்பயனாக வந்துறுகின்ற நிலையில், திறலோனின் ஆன்மீகத்தைத் தன்கண் வளர்த்து அதனையடைவதன்றிக் கவிதைகள், கட்டுரைகள், நாடகங்கள் எழுதுவதால் மட்டும் ஒரு மனிதன் பெருந்திறலோனாக மாறமுடியாதவாறு போலப் பணத்தைக் குவிப்பதாலும், சொத்து, உடைமைகளைத் தேடிக் கொள்வதாலும் ஒருவன் ஆக்கமுடையவனாகிவிட முடியாது; அவன் அறத்தின் ஆன்மீகத்தைத் தன்கண் வளர்த்து அதனையடைய வேண்டும்; அப்போதுதான் காரண காரியப்பயனாக பருப்பொருளியலான பயன்கள் வந்துறும்; ஏனெனின் அறத்தின் சாரமே இன்பத்தின் சாரம்; அது தன்னகத்தே செழிப்பு அனைத்தையும், நிறைவு அனைத்தையும், வாழ்வின் நிறையுடைமை யனைத்தையும் கொண்டிருக்கின்றது.

பணத்தில் இன்பம் எதுவுமில்லை, சொத்தில் இன்பம் எதுவுமில்லை, கருப்பொருளியலான உடைமைகளிலோ அன்றி உடல்வாழ்க்கையொட்டிய ஏதேனும் பொருளிலோ இன்பம் எதுவுமில்லை. இப்பொருட்கள் இறந்து பட்டவை; உயிரற்றவை. இன்பத்தின் சாரம் மனிதனிடமே இருந்தாக வேண்டும், அன்றி எங்குமே இல்லையெனலாம். அவன் மகிழ்வுக்கான திறமையைத் தன்னகத்தே கொண்டிருக்க வேண்டும். அவன் பொருட்களை வெறுமனே குவிக்கத் தெரிந்தால் மட்டும் போதாது; அவற்றை எவ்வாறு பயன்படுத்த வேண்டும் என்றறியும் நுண்ணறிவையும் கொண்டிருக்க வேண்டும். அவன் அவற்றை உடைமையாகக் கொண்டிருக்க வேண்டுமேயன்றி அவற்றிற்கு அவன் உடைமையாகிவிடக் கூடாது. அவை அவனைச் சார்ந்து நிற்பனவாயிருக்க வேண்டுமேயன்றி, அவன் அவற்றைச் சார்ந்து நிற்பவனாகிவிடக் கூடாது. அவை அவனைப் பின்தொடர வேண்டுமேயன்றி, அவன் என்றுமே அதன்வழி நடக்கலாகாது; அவை தொடர்புடையனவாயிருக்கின்ற ஒழுக்கநெறிக் கூறுகளை அவன் தன்னகத்தே கொண்டிருப்பானேயாகில், அவை இன்றியமையாத நிலையில் அவனை வந்தடைந்தே தீரும்.

வானுலகப் பேரரசின்கண் இல்லாதது எதுவுமே இல்லை; நன்மை, உண்மை, இன்றியமையாத காரியங்கள் அனைத்தும் அதன்கண் அடங்கியிருக்கின்றன; "இறைவனின் பேரரசு உன்னகத்தேயே இருக்கின்றது." தாராள குணம், பெருந்தன்மை, தூய்மை, களிப்பு உடையோராயிருப்பதால் மிகமிக மகிழ்ச்சியோடிருக்கின்ற செல்வந்தர்களை நான் அறிவேன்; ஆனால், துயர் மிக்கவராயிருக்கின்ற செல்வந்தர்களையும் நானறி

வேன்; இவர்கள், தமது மகிழ்ச்சிக்காகவே பணத்தையும், உடைமைகளையும் விரும்பி நின்றவர்கள்; இவர்கள் தம்மகத்தே நன்மைக்கும், களிப்பிற்குமான உளப்பாங்கை வளர்த்துக் கொள்ளவில்லை.

ஆண்டொன்றிற்குப் பத்தாயிரம் பவுன்கள் ஒருவனுக்கு வருமானமிருப்பினும் இழிகுணமுடைய மனிதனை எவ்வாறு ஆக்கமுடையவனாகக் கூற முடியும்? உண்மையான ஆக்கத்தின்கண் பொருத்தம், இசைவிணக்கம், நிறைவு இருக்கவேண்டும். செல்வம் படைத்த மனிதன் மகிழ்ச்சியுடனிருப்பின், தனது செல்வத்திற்கு அவன் மகிழ்ச்சியின் உணர்ச்சியைக் கொண்டுவந்து ஊட்டிவிட்டான் என்பதுதான் உண்மை நிலையேயன்றிச் செல்வம் அவனுக்கு மகிழ்ச்சியைக் கொண்டுவந்து சேர்த்தது என்பதன்று. அவன் பருப்பொருளியலான நற்பயன்களும், பொறுப்புக்களும் நிறைந்த ஒரு நிறைவுற்ற மனிதனாகின்றான்; அதே நேரத்தில், தன்னகத்திருந்து மட்டுமே வளர்க்கப்படக்கூடிய அந்த வாழ்வின் நிறைவுடைமையைச் செல்வங்களினிடையே எதிர்பார்க்கின்ற வெற்று மனிதனே துயரந் தோய்ந்த செல்வந்தனாவான்.

எனவே, ஆக்கம் ஓர் ஒழுக்கவாற்றலாக உறுதி பெறுகின்றது; அதனோடு, நமது மண்ணுலக வாழ்வினின்றும் பிரிக்க வொண்ணாத பருப்பொருளியலான காரியங்களை நேர்மையுடனும், சட்டத்திற்குட்பட்டும் பயன்படுத்தும் அறிவின்கண்ணேயே அஃது அமைந்து கிடக்கின்றது. ஒருவன் வெளியுலகின்கண் தன்னுரிமையுடனிருக்க வேண்டுமெனின், முதலில் அவன் தன்னகத்தே தன்னுரிமையுடையவனாக இருக்கட்டும்;

ஏனெனின், அவன் உணர்ச்சியில் வலுவின்மை, தன்னலமே அன்றித் தீயொழுக்கம் முதலியவற்ருலும் கட்டுப்பட்டிருப்பானேயாகில், பணத்தை உடைமையாக்கிக்கொள்ள அஃது அவனை எவ்வாறு விடுதலை செய்துவிடும்? அதற்கு மாருக, அஃது அவன் தன்னைத் தானே மேலும்மேலும் அடிமையாக்கிக்கொள்ளக் கையில் பற்றும் ஓர் ஆயுதமாகவன்ருே அமையும்.

ஆகவே, ஆக்கத்தின் விளைவுகளில் கண்ணிற்குப் புலனுகின்றவற்றை மட்டும் தனியாகச் சீர்தூக்கிப் பார்த்தல் கூடாது; மன, ஒழுக்கக் காரணத்தோடு அவை கொண்டுள்ள தொடர்பைக் கொண்டே அவற்றைச் சீர்தூக்கிப் பார்க்கவேண்டும். ஒவ்வொரு கட்டிடத்திற்கும் கண்ணிற்குப் புலனுகாது மறைந்து கிடக்கின்ற ஓர் அடியாதார முண்டு; அக் கட்டிடம் தொடர்ந்து நிலைபெற்றிருக்கின்றது என்னுமுண்மையே அடியாதாரம் இருப்பதற்குச் சான்று. நிலைநாட்டப்பட்டுள்ள ஒவ்வொரு வகையான வெற்றிக்கும் கண்ணிற்குப் புலனுகாது மறைந்து கிடக்கின்ற ஓர் அடியாதாரம் இருக்கின்றது; வெற்றியின் நிலையுடைமையே அதற்கு அடியாதாரம் உண்டு என்பதைத் தெற்றெனக் காட்டுகின்றது. குணவியல்பு என்னும் அடியாதாரத்திலேயே ஆக்கம் நிலைபேறு கொண்டிருக்கின்றது. இப் பரந்த பிரபஞ்சம் அனைத்திலும் அதற்கு வேறு எந்த அடியாதாரமும் கிடையாது. செழிப்பு, சேமம், நல்வாழ்வு, மனநலம், முழுமை, மகிழ்ச்சி இவையே உண்மையான செல்வம். இழிகுணம் படைத்த செல்வந்தர் உண்மையான செல்வந்தராகார். அவர்கள் தம்மைத்தாமே சித்திரவதை செய்து கொள்ள உதவும் கருவிகளாகவே பணம், சொகுசு,

வீண் பொழுது இவற்றை ஏராளமாகக் கொண்டவர்களா யிருக்கின்றனர். அவர்கள் தம் உடைமைகளால் தம்மைத்தாமே சாபக்கேடுகளுக்குட்படுத்திக் கொள்வோராகின்றனர்.

ஒழுக்க நெறிபடைத்த மனிதன் எப்போதும் அருட்பேறு பெற்றவன், எப்போதும் மகிழ்ச்சியுடையவன்; ஒரு முழுமையான நிலையில் நோக்குங்கால் அவனுடைய வாழ்வு எப்போதும் வெற்றியாகவே அமைந்திருக்கின்றது. இதற்கு விதிவிலக்கே கிடையாது; ஏனெனின், நடைமுறை விவரங்களைப் பொறுத்தவரை அவனுக்கு எத்துணைதான் தோல்விகள் ஏற்படினும், அவனுடைய வாழ்வில் முடிக்கப் பெற்ற வேலைப்பாடு நலன்மிகுந்ததாக, முழுமையானதாக, நிறைவுபெற்றதாகவே இருக்கும்; காரியங்கள் அனைத்தினூடும் அவன் அமைதியான மனச்சான்றும், மேன்மையான புகழும், குணவியல்புச் செல்வத்தினின்றும் பிரிக்கவொண்ணாப் பல்வகை அருட் செல்வமும் கொண்டவனாக இருப்பான்; இந்த ஒழுக்கச் செல்வம் இல்லாத வரையில், பொருட் செல்வம் பயனோ அன்றி மன நிறைவோ தராது.

நாம் சுருக்கமாகத் தொகுத்து இந்த எட்டு ஆதாரங்களையும் அவற்றின் வலிமையுடனும், ஒளியுடனும் மறுமுறையும் காண்போம்.

*(1)* ஆற்றல் - ஒருவன் தன் கடமையை நிறைவேற்றும் பொருட்டு விடாமுயற்சியுடையதும், இடைவிடாததுமான கடுவுழைப்பை மேற்கொள்ளத் தன் உணர்ச்சியைத் தூண்டிக் கொள்வது.

(2) சிக்கனம் - சத்தியை ஒருமுகப்படுத்தல்; முதலிடு, ஒழுக்கநெறி இரண்டையுமே பாதுகாத்தல்; ஏனெனின், இரண்டாவதாகக் கூறப்பட்டிருப்பது மனத்தின் முதலிடு; ஆகவே, அதுவே அதிமுக்கியத் துவம் வாய்ந்தது.

(3) சால்பு - நன்னெறியினின்றும் திறம்பாத நேர்மை; நட்டம் அன்றி ஆதாயம் என்ற நோக்கங்கள் அனைத்திலிருந்தும் விலகி வாக்குறுதிகள், உடன் பாடுகள் ஒப்பந்தங்கள் அனைத்தையும் சிறிதும் தவறாது நிறைவேற்றுதல்.

(4) முறைப்பாடு - நடைமுறை விவரங்கள் அனைத் தையும் ஒழுங்கமை திக்கு உட்படுவனவாக்கல்; அதன் காரணமாகப் பலவற்றை ஒன்றாகக் குறைத்து விடுவதால், தேவைக்கு மிகுதியான உழைப்பி னின்றும், களைப்பினின்றும் ஞாபகசத்தியையும், மனத் தையும் விடுவித்தல்.

(5) இரக்கம் - மேதகைமை, பெருந்தன்மை மென்மை, ஈவு; திறந்த கரத்தனாக, தன்னுரிமை யுடையவனாக, அன்புடையவனாக இருத்தல்.

(6) இயல்பார்வம் - நிறைந்த நலனுடையவனா கவும், முழுமை யுடையவனாகவும், வலிமையுடை யவனாகவும், உண்மையுடையவனாகவும் இருத்தல்; ஆகவே, பொது இடத்தில் ஒரு வகை ஆளாகவும், தனிமையில் பிறிதொரு வகை ஆளாகவும் இல்லா திருத்தல்; வெளிப்படையாக நற்செயல்களைச் செய்யும் ஒருவன் அதே வேளையில் மறைவில் தீச் செயல்களைச் செய்யாதிருத்தல்.

(7) நடுவுநிலைமை - நீதி; தனக்காகவே போரா டாது இருபக்கங்களையும் சீர்தூக்கிப் பார்த்து நேர்மையோடியைந்து செயலாற்றுவது.

(8) நற்சார்பு - நிலைபெற்றதும், வெல்லமுடி யாததுமான விதிகளின் வழிநின்று வலிமையையும், ஆதரவையும் தன்னகத்தேயே நாடுவதன்றி, எந்த நேரத்திலும் பறித்துவிடப்படக் கூடிய வெளிப்புறக் காரியங்களை நம்பாமலிருத்தல்.

இந்த எட்டு ஆதாரங்களின்மீது கட்டப்பட்ட எந்த வாழ்வும் வெற்றிக்குப் புறம்பட்டதாக எவ் வாறு இருக்கமுடியும்? அவற்றின் வலிமை எந்த உடல் வலிமையோ அன்றி நுண்ணறிவு வலிமையோ ஒப்புமை காட்ட முடியாத அத்திறத்தனவாகும்; இந்த எட்டையும் நிறைவுறக் கட்டமைத்துக் கொள்ளுதல் ஒரு மனிதனை வெல்ல முடியாதவனுக்கி விடுகின்றது. எவ்வாறெனினும், மக்கள் பெரும் பாலும் இக்குணங்களில் ஒன்றிலோ அன்றிப் பல வற்றிலோ வலிமையுடையவராகவும். பிறவற்றில் வலிமையற்றவராகவும் இருப்பதைக் காணலாம்; இந்த வலுவற்ற கூறுதான் தோல்வியை வரவழைக் கின்றது. உதாரணமாக, வாணிபத்தில் ஒரு மனிதனுக் கேற்படும் தோல்வியை அவனுடைய நாணயத்தின் விளைவெனக் கூறுவது மடமையாகும். நாணயம் தோல்வியை உண்டுபண்ணுவது இயலுவதன்று. தோல்வியின் காரணத்தை வேறு ஏதேனும் திசை யில்தான் கண்டறிய வேண்டும். அஃதாவது, நன்மை யானதும், இன்றியமையாததுமான ஏதேனும் குணம் இல்லாமலிருப்பதிலேயே தோல்வியின் காரணத்தைக்

கண்டறிய வேண்டுமேயன்றி, அதனைக் கொண்டிருப்பதில் கண்டறியவியலாது. மேலும், நாணயத்தை அவ்விதமாகத் தோல்வியின் காரணமாகக் காட்டுவது வாணிபத்தின் சால்பையே அவமானப் படுத்துவதாகும் என்பதோடு நாணயத்துடன் வாணிபத்தில் ஈடுபட்டிருக்கும் எண்ணிலடங்கா மக்கள்மீது சுமத்தப் படுகின்ற ஆதாரமற்ற குற்றச்சாட்டுமாகும். ஒரு மனிதன் ஆற்றல், சிக்கனம், முறைப்பாடு இவற்றில் வலிமையுடையவனாக இருக்கலாம்: ஆனால், ஒப்பிட்டுப் பார்க்குங்கால் மீதமுள்ள ஐந்திலும் வலுவற்றவனாக இருக்கலாம். அத்தகைய மனிதன் நான்கு மூலைத் தூண்களில் ஒன்றாகிய சால்பு என்னும் தூணைக் கொள்ளாமலிருப்பானாயின் முழு வெற்றியையும் காணாது தோற்றுவிடுவான். அவனுடைய கோயில் அந்த வலுவற்ற மூலையில் சரிந்துவிடும். ஏனெனின் ஆக்கக் கோயில் பாதுகாப்பாக நிலைபெறுதற்கு முதல் நான்கு தூண்களும் நன்கு கட்டப்பட்டிருக்க வேண்டும். ஒரு மனிதனின் ஒழுக்கநெறிப் படிவளர்ச்சியில் அவன் அடைய வேண்டிய முதற் குணங்கள் அவையேயாகும்; அவையின்றி இரண்டாவதான நான்கு குணங்களையும் பெறவியலாது. மேலும், ஒரு மனிதன் முதல் மூன்றிலும் வலுவுள்ளவனாக இருந்து, நான்காவது குணம் இல்லாதிருப்பானேயாகில், வரிசைக் கிரமம் இல்லாதிருக்கும் நிலை அவனுடைய காரியங்களில் குழப்பத்தையும் அழிவையும் கொணர்ந்துவிடும்; இக்குணங்களைப் பொறுத்த எந்தவிதமான அரைகுறைச்சேர்க்கையின் நிலையும் இதுவேயாகும்; குறிப்பாக முதல் நான்கு குணங்களைப் பொறுத்த நிலை இதுவே; ஏனெனின்

இரண்டாவதான நான்கு குணங்களும் தற்போதைய நிலையில் ஏறத்தாழ நிறைவற்ற வகையிலேனும் மனிதர் கொண்டிருக்கக் கூடிய அத்துணை உயர்ந்த குணவியல்பைச் சார்ந்தனவாகும். எனவே, வாணிபத்தில் எத்துறையிலேனும் சரி, அன்றி மக்கள் வழக்கமாக ஈடுபட்டிருக்கின்ற பலவகையான தொழிற்றுறைகளில் ஒன்றிலேனும் சரி, நிலையான வெற்றியடைய விரும்புகின்ற இன்றைய வுலக மனிதன் இந்த முதல் நான்கு ஒழுக்கத் தூண்களையும் பயிற்சியின் மூலம் தன் குணவியல்பின்கண் கட்டமைத்தாக வேண்டும் தனது சிந்தனையை, தனது ஒழுக்கத்தை, தனது காரியங்களை அவன் இந்த நிலையான விதிகளைக் கொண்டு நெறிப்படுத்த வேண்டும்; அஃதாவது ஒவ்வோர் இடர்ப்பாட்டின் போதும் அவற்றைக் கலந்தாய்ந்து, ஒவ்வொரு விவரமும் அதற்குப் பயன்படும் வகையில் செய்தாக வேண்டும்; அனைத்திற்கும் மேலாக, ஏதேனும் தன்னைச் சார்ந்த நன்மையைப் பெறுதற்காகவோ அன்றி ஏதேனும் தன்னைச் சார்ந்த இடர்ப்பாட்டைத் தடுப்பதற்காகவோ என்றுமே அவற்றைப் புறக்கணிக்காமல் இருக்க வேண்டும்; ஏனெனின், அவ்வாறு புறக்கணிப்பது, தீமையின் சிதைவுறுத்துங் கூறுகளுக்குத் தன்னைத்தானே உட்படுத்திக் கொள்வதோடு, பிறருடைய குற்றச் சாட்டுகளுக்குந் தன்னை ஆளாக்கிக் கொள்வதுமாக முடியும். இந்த நான்கு விதிகளையும், பின்பற்றியொழுகுபவன், தனது சொந்தக் குறிப்பிட்ட வேலை எதுவாயிருப்பினும் அதன்கண் முழு அளவான வெற்றியே அடைவான்; அவனுடைய ஆக்கக் கோயில் நன்கு கட்டப்படுவதுடன் நன்கு வலுப்படுத்

தவும் படுகின்றது; அது பாதுகாப்புடன் நிலைபெறு கொள்ளும். கற்றறிய வேண்டும் என்ற நோக்கத்தைக் கொண்டு, கற்றறிய விருப்பமுடையோராய் இருக்கும் மனிதர் அனைவர்க்கும் இந்த நான்கு விதிகளையும் நிறைவாகக் கடைப்பிடித்தல் இயலுவதேயாகும்; ஏனெனின், ஒரு குழந்தைகூட அவற்றின் பொருளை உணர்ந்து கொள்ளுமளவிற்கு அவை அத்துணை எளிமையானதும், வெளிப்படையானது மாகும்; மேலும், சில தன்னலத் துறப்பும், தன்னைப் பொறுத்த ஒழுங்குமுறையும் தேவைப்படினும், இவற்றை ஒழுக்கத்தின்கண் நிறைவுறுத்துவதற்கு வழக்கத்திற்கு மீறிய அளவு தியாகம் தேவைப் படுவதில்லை; இச்செயலாக்க உலகின்கண் இத் துணையளவேனும் தன்னலத்துறப்பின்றி வெற்றி பெறுதல் இயலாது. எவ்வாறெனினும், இரண்டா வதான நான்கு தூண்கள் முன்னதைவிட ஆழ்ந்த பண்புடைய ஒழுங்கமைதிகளாகும்; புரிந்து கொள் ளவும், நடை முறைப்படுத்தவும் முன்னதைவிடக் கடினப்பாடுடையன; அதற்கு மிகவுயர்ந்த அளவு தன்னல மறுப்பும் தியாகமும் தேவைப்படுகின்றன. இவ்விதிகளை நிறைவுறப் பயிற்சி செய்தற்கு இன்றி யமையாததாகின்ற தன்னலக்கூறற்ற நிலையைத் தற் போது ஒருசிலரே அடைய முடியும்; ஆனால், குறிப் பிடத்தக்க அளவில் இதை நிறைவேற்றி விடுகின்ற ஒரு சிலர் தம்முடைய சத்திகளைப் பெருமளவிற்குப் பெருக்கிக் கொள்வதோடு வாழ்வையும் வளப்படுத்து கின்றனர்; அவர்கள் தமது ஆக்கக் கோயிலைத் தனிச் சிறப்பு வாய்ந்ததும் கவர்ச்சிகரமானதுமான அழகால் அணி செய்கின்றனர்; இந்நிலை, அதனைக் கொண்

டிருப்போர் அனைவரும் மடிந்து மறைந்த நெடு நாட்களுக்குப் பின்பும் மகிழ்ச்சியூட்டுவதாயும், மேன்மையுறச் செய்வதாயும் அமையும்.

ஆனால், இந்நூல் காட்டும் பயிற்சியின்படியே தமது ஆக்கக் கோயிலைக் கட்டத் தொடங்குவோர் இதை மனதில் கொள்ள வேண்டும்; அஃதாவது, ஒரு கட்டிடத்தை எழுப்புவதெனின் அதற்குக் காலம் தேவைப்படுகின்றது; செங்கல் மேல் செங்கல், கல் மேல் கல் வைத்துப் பொறுமையோடுதான் எழுப்ப வேண்டும்; தூண்கள் உறுதியாக நடப்பட்டு மேல் பூச்சும் பூசப்பட வேண்டும்; அதனை முடித்து முழுமையாக்க உழைப்பும், அக்கறையும் தேவைப் படுகின்றன. அதே போன்று, உட்புறமனக்கோயி லாகிய கட்டிடம் கண்ணுக்குப் புலப்படாதது, ஓசை யற்றது என்பதற்காக உண்மையாகவும், திடமாகவும் அமைந்திருப்பதில் அதைவிட எந்த அளவிலும் குறைவுடையதன்று; ஏனெனின், "ஏழு ஆண்டுகள் முயன்று கட்டப்பட்ட" சாலமன் கோயிலைக் குறித் துக் கூறப்படுவதுபோன்று இக்கட்டிடம் எழுப்பப் படுவதைப்பொறுத்தும் கூறலாம்; அஃதாவது, "இக் கட்டிடம் கட்டப்படுகையில் சம்மட்டி அல்லது கோடரி அல்லது இரும்பால் செய்யப்பட்ட எந்தக் கருவியினுடைய ஓசையும் வீட்டில் கேட்கவில்லை."

வாசகரே! அதைப்போன்று உங்களது குணவியல் பைக் கட்டாக அமையுங்கள், உங்களது வாழ்வெனும் இல்லத்தை எழுப்புங்கள், உங்களது ஆக்கக்கோயிலைக் கட்டுங்கள். தன்னல இச்சைகளின் உறுதியற்ற சுழற்சியின்கண் மேலுயர்வதும், கீழ்வீழ்வதுமான

அறிவிலிகளாக இருக்காதீர்; உங்களது வாழ்க்கைக்கு முழுமையான முடிசூட்டுங்கள்; உறுதியின்மை என்பது இன்றி, உறுதிப்பாடும் பாதுகாப்புமுடைய தான ஆதாரத்தின்மீது, அஃதாவது என்றென்றும் நிலைத்து நிற்கின்ற மெய்ம்மையின் விதிகளின்மீது கட்டாகத் தம் குண இயல்பை அமைக்கும் அறிஞர்களுடன் வைத்து எண்ணப்படுவோராகி விடுங்கள்.

